கழக வெ. ______ அள

# கொடைமன்னர் பனுவல்



வித்துவான்,
திரு. பெ. கோவிந்தன் அவர்கள்,
இயற்றியது



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

**First Edition:** Feb., 1954.

# KODAIMANNAR PANUVAL



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS-1

*Head Office:*

24 EAST CAR STREET, THIRUNELVELI

Appar Achakam, 2/140, Broadway, Madras-1—C. 1050.

உ

# பதிப்புரை

நம் பழந்தமிழகம் பண்பாட்டுடன் சிறந்து விளங்கிற்று. அக்கால மக்கள், பழக்க வழக்கங்கள், பண்பாடு, அறம், மறம், ஆள்வினை, கல்வி கேள்வியாம் செல்வங்களில் தன்னிகரின்றித் திகழ்ந்தனர். அரசரும் 'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' எனக் கருத்திலிருத்திக் கோல்முறை கோடாது தமவும் பிறவும் ஒப்ப நாடி உலகை ஆண்டனர்; அவர்கள் வள்ளன்மையினும் இரக்கப் பண்பினும் ஈடும் எடுப்புமின்றி இருந்தனர். இவர்களுள் தலைசிறந்தோராக இலகினோர் தமிழ்நாட்டு வள்ளல்களென அறிவுலகம் போற்றும் மன்னர் எழுவர். அவர் முறையே பாரி, ஓரி, காரி, அஞ்சி, பேகன், ஆய், நள்ளி எனப்படுவோராவர்.

இவ் வெழுவரும் மனப்பண்புமிக்க மாண்பினராவர். இவர் பிறர் புன்கண் அஞ்சி அருளும் அறவோராவர். தம்மை நாடி வந்தோர்க்கும், கேட்டோர்க்கும், கேளார்க்கும் குறிப்பறிந்து ஈயும் கொடைமடம் பட்டோராவர். இவர்களுள் நள்ளியென்னும் வள்ளல், தம்மை நாடிவந்த வன்பரணர் முதலிய புலவர் பெருமக்கட்கு அவர் வாட்டங்கண்டு உணவளித்து அவர் என்றும் பசிப்பிணி இன்றி வாழ்தற்கு வாய்ப்பாகத் தான் அணிந்திருந்த முத்துமாலை தோட்காப்பு முதலியவற்றையும் கேட்காது அளித்த பெருமையன். பேகன் என்பான், கானத்தில் தோகை விரித்தாடிய மயிலுக்குக் குளிரால் ஆடுகின்றதெனக் கொண்டு தான் அணிந்திருந்த பொற்கலிங்கப் பட்டாடையைப் போர்த்தி, மகிழ்ந்து நின்றான். பாரியென்னும் பண்புடை வள்ளல், தன் தேரிற் படர்ந்த முல்லைக்கொடி தன்னைக் கேட்காததாகவும் கொடி படர்தலைச் சிதைக்கலாகாது எனக் கருதித் தேரினை நிறுத்திப் படரச் செய்தான். ஏனைய வள்ளல்களும் இத்தகு அருஞ்செயலே செய்து போதருவாராயினர்.

இவ் வள்ளற் பெருமக்கள் ஆறறிவு படைத்த மக்கட்கும், ஐயறிவு கொண்ட பறவைக்கும், ஓரறிவுள்ள முல்லைக் கொடிக்கும் ஈத்துவந்து நின்ற பெருமை உலகிலேயே வியப்புக்குரித்து! இத்தகைய அருளுள்ளம் அரும்புதல் அரிது அரிது! மிக வரியது! அக்கால அறிவுலகம் இவ் வியத்தகு செயலைக் கருத்தில் மட்டும் வைக்காது ஏட்டினும் எழுதிப் பாட்டாகப் பொதிந்து வைத்தது. அவை புறநானூற்றினும் சிறுபாணாற்றுப் படை முதலிய நூல்களினும் திறம்பட விளக்கம் பெற்றுள்ளன.

இவர் பெருமை இவ்வாறமைய வேற்றுநாட்டு வள்ளல் பிறர் வரலாறுகளையே கற்று அவையே தமவெனக் கொண்டனர்

நந்தமிழர். நம் நாட்டு வள்ளல்கள் பெரியார்கள் வரலாற் றுண்மை காணாது தமிழ்மக்கள் பன்னெடுங்காலம் இருக்க நேர்ந்தது நம் தமிழ்நாட்டின் தவக்குறைவேயாகும். பிற்காலத்து விழிப்புணர்ச்சியால் சிறிது சிறிது தமிழக வரலாறும் தெரிய அறிஞருலகம் உந்திற்று; மக்கள் உணரலாயினர். இத்தகைய விழிப்புநிலையில் மலர்ந்ததே 'கொடைமன்னர் பனுவல்' எனப் பெயரிய இக்காப்பியச் செய்யுள் நூல்.

எதையும் பாவில் அமைத்து வளர்த்த நந்தமிழ்நாடு, பிற் காலம் பாவமைத்து நூல் யாப்பதை மறந்திருந்தது. இப் பிற் காலத்தில் பாரதியார் புதியவகையில் பாவமைத்து மீண்டும் செய்யுள் தலையெடுக்க வழிகோலினர். அதனல் பல்வகை வண்ணங்களானமைந்த சிந்துவகைகள் விருந்தாக இக்காலம் மலர்ந்துவருகின்றன. இந்நூல் அவ்வகையிற் சேராது, பழமை யிற் புதுமையாகச் சென்றது; வரலாறு பழைய வரலாறு. பா, புதுமையிற் பழமையானது. கொச்சகக் கலிப்பாவான் இயன் றது. இதனைத் தம் அஃகி யகன்ற அறிவால் ஆக்கி ஆசிரியர் உதவினர்.

பிற்காலப் புலவர்கள் யாத்த இராமாயணம், பாரதம் போன்ற காப்பியங்களாலும், புராணங்களாலும் தமிழர் பண்பாடுகளும், பழக்க வழக்க ஒழுகலாறுகளும், வரலாற் றுண்மைகளும், மொழி நாகரிகமும், பிறவும் தலைகீழாக மாற்றம் பெறலாயின. இத்தகைய நிலைகளை நுனித்தறிந்த ஆசிரியர், உண்மைநிலையை நாட்டில் நிலைநிறுத்துதல் கடனெனக் கருதினர்; பழைய தமிழ்நாடு எங்கே? எனத் தருவினர்; தமிழ்ப் புலவர் யாவர்? மன்னர் எவர்? என நாடிநாடி வரலாற்றுண்மைகண்டு தெளிந்து ஆக்கி உதவியுள்ளனர்.

இந் நூற்குத் துணையாக அகம், புறம் முதலிய சங்க நூல்களும், கல்வெட்டுக்களும், தம் கூர்த்தறிவும் ஒன்றுபட் டுதவலாயின. இதன்கண் பழங்கால வழக்கங்களும், போர்முறை களும், வடவர் தென்னவர் பண்புகளும பிறவும் நன்கு கிளந் தெடுத்துரைக்கப்பட்டுள்ளன இவ்வரிய பெரிய சீரிய நூலை நன்முறையில் போற்றித் தம் அரிய கருத்துரைகளைக் கற்றுத் துறைபோய நல்லறிஞர் வழங்கியுள்ளனர். இவ்வெல்லாம் ஒன்று பட அமைந்துள்ள இந்நூலை, நன்முறையில் செப்பஞ் செய்து வெளியிட்டுள்ளோம் தமிழ்ப் பெருமக்களும், காப்பியச் சுவை ஞர்களும் ஆசிரிய மாணவர்களும் கற்று நற்பேறெய்துவார்க ளென நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்



வித்துவான்,

திரு. பெ. கோவிந்தன் அவர்கள்,

ஸ்ரீவில்லிபுத்தூர்.

# முன்னுரை

*இல்லையென் றுரையா திரவலர் புலவர்க்*
*கீந்தவேள் பாரியே முதலாம்*
*நல்லிசை வள்ள லெழுவரை யீன்று*
*நலம்பெறுஞ் செந்தமிழ்ச் செல்வி !*
*முல்லைநன் மலரால் திருவடி தொழுதும் ;*
*முத்தமிழ் வளர்ச்சிக்கு நெஞ்சக்*
*கல்லையும் உருக்கிச் செல்வங்கள் நல்கிக்*
*களிக்குமா றுலகினுக் கருளாய்.*

செட்டிநாட்டரசர் **அண்ணாமலை செட்டியார்** பெரும் பொருட் செலவில் தமிழ்நாட்டிற்குச் செய்த அரும்பெருந் தொண்டுகளில், சிதம்பரத்தில் தமிழ்க்கல்லூரி ஏற்படுத்தியதும் ஒன்றாகும். தமிழ்க் கல்லூரி 1924 ஆம் ஆண்டு இயங்கத் தொடங்கியது. நான் 1925-ஆம் ஆண்டிலிருந்து 1929 ஆம் ஆண்டு மார்ச்சுத் திங்கள் முடிய நான்கு ஆண்டுகள் கல்வி பயின்று "வித்துவான்" பட்டமும், அடுத்த ஆண்டில் பண்டிதர் பயிற்சிக் கல்லூரியில் பயின்று "பயிற்சித் தேர்வு"ம் பெற்றேன்.

தமிழ்க் கல்லூரியில் படிக்கும்பொழுது மூன்றாம் நான்காம் ஆண்டுத் தேர்வுப் பாடமாகப் பல நூல்கள் வைக்கப்பட்டிருந்தன. அவற்றுள் புறநானூறும் ஒன்று. புறநானூற்றைப் படிக்கும்பொழுது மாணவர்களுக்கு ஒரு புத்துணர்ச்சி உண்டாயிற்று. புறநானூறு பல நூற்றாண்டுகளுக்கு முந்திய தமிழ் மக்களுடைய அறவியல், அரசியல், போர்முறை, வாழ்க்கை முறை, கலை, சமயம், புலமை, கொடை முதலிய பற்பல பகுதிகளை விளக்கிக் காட்டியது. சுவையற்ற பல நூல்களைப் படித்த மாணவர்களுக்குப் பல சுவைகளையும் ஊட்டியது. நான் பலமுறை புறநானூற்றைப் படித்தின்புற்றேன்.

புறநானூற்றில் பல பழந்தமிழ் அரசர்களுடைய பெயர்களும், சிற்றரசர்களுடைய பெயர்களும், படைத்தலைவர்களுடைய பெயர்களும், புலவர்களுடைய பெயர்களும், அவர்களுடைய வாழ்க்கைக் குறிப்புக்களும் காணப்படுகின்றன. பாரி முதலிய வள்ளல்கள் எழுவருடைய பெயர்களையும் புறநானூற்றின் 158-ஆம் செய்யுளும் சிறுபாணாற்றுப் படையும் எடுத்துரைக்கின்றன. வள்ளல்களுடைய வாழ்க்கைக் குறிப்புக்கள் புறநானூற்றில் மிகுதியாகவும், வேறு தொகைநூல்களில் சுருக்கமாகவும் காணப்படுகின்றன. சில கல்வெட்டுக் குறிப்புக்களும், சில தனிச் செய்யுள்களும் உரையாசிரியர்களுடைய உரைக்குறிப்புக்களும் சில வரலாறுகளைக் குறிப்பிடுகின்றன.

பல தமிழ் நூல் ஏடுகளைத் தேடி எடுத்துப் பதிப்பித்து வெளியிட்டவரும் சிதம்பரம் மீனாட்சி தமிழ்க்கல்லூரியில் நான் படிக்கும் பொழுது எனக்கு ஆசிரியரா யிருந்தவருமாகிய டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் புறநானூற்றுப் பாடல் பாடப்பட்டோர் வரலாற்றுக் குறிப்பில் வள்ளல்கள் வரலாற்றைத் தொகுத்து எழுதியுள்ளார்கள். வள்ளல்கள் வரலாற்றைப் பற்றியும், கால ஆராய்ச்சியைப்பற்றியும் சில உரைநடை நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூலின் உரைநடைச் சுருக்கம் 1947-ல் வெளிவந்துள்ளது. ரா. இராகவ ஐயங்கார் பாரி மன்னன் வரலாற்றைப் பாடிப் "பாரிகாதை" என்ற செய்யுள் நூலை வெளியிட்டுள்ளார். ஏனை அறுவா வரலாறுகளும் இன்றுவரை ஒரு புலவராலும் பாடப் படவில்லை.

புலவர்களைப் போற்றியவர்களும், புலவாகளால் புகழப்பட்டவாகளும், ஈகையிற் சிறந்தவர்களுமாகிய பாரிமன்னன் முதலிய எழுவா வரலாறு களையும் செய்யுளாகப் பாடவேணடுமென்று சில ஆண்டுகளுக்கு முன்பு நான் எண்ணினேன். பின்பு வள்ளல்களுடைய வரலாற்றுக் குறிப்புக்களை ஒருவாறு வரிசைப்படுத்திக் கொணடு பாட முயற்சித்தேன. சில சில பாட்டுக்களாகப் பாடி எழுவர் வரலாறுகளையும முடித்துக் கொண்டேன்.

இந்நூலில் முதற்கண பாயிரமும், வள்ளல்கள் வரலாறுகள் கூறு முன், வரலாறுகளுக்குத தோற்றுவாயாகக் கொடைமன்னா மாணபும் கூறப்பட்டிருக்கின்றன. கொடைமன்னர் மாண்பில் வள்ளல்கள் எழு வருடைய கொடைச சிறப்பையும் குமணனிடம் கூறிய பெருஞ்சித்திர னார் வரலாறு கூறப்பட்டிருக்கிறது. அப்பகுதிக்குப் பின்பு பெருஞ் சித்திரனார் பாடிய 158 ஆம் புறப்பாட்டின் வைப்புமுறைப்படி எழுவா வரலாறுகளும் கூறப்படுகின்றன. வரலாற்றுப்பகுதிகளுக் கிடையில் புறநானூற்றிலுள்ள பல பாட்டுக்கள் இன்ன இன்ன அரசனமுன் இன்ன இன்ன சமயத்தில் இன்ன இன்ன புலவரால் பாடப்பட்டன என்று விளக்கிக் கூறப்பட்டிருக்கின்றன. இந்நூலின் அமைப்பு முறைகள் சேக்கிழார் பெருமான் அருளிசசெய்த பெரிய புராண அமைப்பு முறை களைப் பின்பற்றியன வாகும்.

இந்நூலில் கூறப்படும் வள்ளல்களும் அவர்களைப் புகழ்ந்து பாடிய புலவர்களும் இற்றைக்கு 1800 ஆண்டுகளுக்கு முற்பட்டவர்கள். அக் காலத்தில் தமிழ்நாட்டில் ஆரியர்கள் புகுந்து கலந்தனராயினும, தமிழ் மொழியில் இற்றைநாட் புகுந்து பெருகினாற் போன்று வடசொற்கள் புகுந்து பெருகிவிடவில்லை. அவர்களுடைய புராணக் கதைகளும் கொள்கைகளும் தெய்வஙகளும் வழிபாட்டு முறைகளும் மணமுறையும் தமிழ்நாட்டு முறைகளை மாற்றவில்லை. சுருஙகச சொல்வோமாயின் தமிழ் நாட்டில் தமிழ்நூல்கள் தனித்தமிழ்ப் பண்புடையனவா யிருந்தன என்றும் தமிழர்கள் தங்கள் இனத்திற்கே உரிமையாகவுடைய அறம், போர்முறை, காதல்முறை, தெய்வ வழிபாடு, இசை, கூத்து, கலை, உடை, நடை

முதலிய சிறப்பியல்புகளையுடையராயிருந்தன ரென்றும் பண்டை நூல்களிலிருந்து நாம் அறியலாம். 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழ் நாட்டு வள்ளல்கள் வரலாறுகளைக் கூறும் இந்நூலிலும், அக்காலத் தமிழ் நாட்டியல்பையும் மக்களியல்பையும் கற்பார் அறிந்துகொள்வதற்கு அப் பழைய காலத்து நூற் கருத்துக்களும் உவமைகளும் கொள்கைகளும் அறம் போர்முறை முதலியனவும் ஆங்காங்கு விரித்துக் கூறப்பட்டிருக்கின்றன.

பண்டை நூல்களில் காணப்பட்டுத் தமிழ்ச் சொற்களோ வடமொழிச் சொற்களோ என்று ஐயந்தரும் சில சொற்களன்றிப் பிற்காலத்தில் தமிழ் நூல்களிற் புகுந்தனவும் உலக வழக்கில் புகுந்தனவுமாகிய வடசொற்கள் பெரும்பாலும் எடுத்தாளப் படாமையும், தமிழ்த் தெய்வங்கள் என்று சொல்லத் தக்க முருகன் சிவன் என்ற தெய்வங்களன்றி வேறு ஆரியத் தெய்வங்கள் கூறப்படாமையும், வேதங்கள், புராணங்கள் என்ற வடநூல்களும் அவற்றிற் கூறப்படும் தெய்வங்களும், கதைகளும், கொள்கைகளும், சாதிப் பாகுபாடுகளும் புகுத்தப்படாமையும், பிற்காலத்தில் இகழப்படும் இடக்கர்ச் சொற்கள் இடம் பெறாமையும் இந்நூலிற் காணப்படும் சில சிறப்பியல்புகளாம்.

அஃதல்லாமலும் இடையிடையே வரும் ஐவகை நிலப்பண்புகளை அவ்வந்நிலங்களின் கருப்பொருள்களோடு இயற்கையாக நிகழும் நிகழ்ச்சிகளை இணைத்துக் கற்போர் உள்ளம் களிகொள்ளுமாறு அமையப் பாடியுள்ளேன்; போர் முறை, காதல் நிகழ்ச்சி முதலியவற்றை யெல்லாம் கூறுங்கால் அவ்வவ்வியற்கைகட்கேற்றவாறு பாக்களில் துள்ளல் ஓசை, மெல்லோசை, வல்லோசை முதலியன பொருந்த யாத்தமைத்துள்ளேன்.

இந்நூல் 1117 செய்யுட்களைக் கொண்டு முற்றுப் பெறுகிறது. சங்க நூல்களில் கூறப்படும் வரலாற்றுக் கருத்துக்களும், சில கல்வெட்டுக் கருத்துக்களும் உரையாசிரியர் கருத்துக்களுமே பாரி முதலிய வள்ளல்கள் வரலாறுகளை விரிப்பதற்கு எடுத்துக்கொண்ட சான்றுகளாம். வேறு சில குறிப்புக்கள் மெய்யோ பொய்யோ என்ற ஐயத்தால் விடப்பட்டன. வரலாறுகளை விளக்கிச் சொல்லுமிடங்களில், கற்பவர்கள், வரலாற்றுப் போக்கையும் சான்றுச் செய்யுள்களின் போக்கையும் எளிதிற் கற்றறியும் பொருட்டு அந்தந்தப் பக்கங்களின் அடிக்குறிப்பின்கீழ் வரலாற்றுக் குறிப்புகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. அருஞ்சொற் பொருளும் புணர்ச்சிப் பிரிப்பும் வேண்டிய அளவு கொடுக்கப்பட்டிருக்கின்றன. நூலின் முதற்கண் வள்ளல்கள் வரலாற்றுச்சுருக்கமும் இறுதியில் செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசையும் கொடுக்கபபட்டிருக்கின்றன.

தமிழ்மக்களிடத்தில் இக்காலத்தில் தாய்மொழி யுணர்ச்சி காணப் படுகிறது. காணப்படினும், அரசியல் கொள்கை காரணமாகவும், நீண்ட காலமாக வழி வழியாக வந்த மொழிப்பற்றின்மை காரணமாகவும் அவ்

வுணர்ச்சி வளர்ச்சியடையவில்லை இந்நிலைமையிலும், மொழிப்பற்றுடைய தமிழ்மக்களிற் சிலர் பொருள் உதவி செய்தும், சிலர் கல்லூரி ஏற்படுத்தியும், சிலர் விரிவுரை நிகழ்த்தியும், சிலர் வெளியீடுகள் வெளியிட்டும், சிலர் கல்வி பயில்வித்தும் தமிழன்னைக்கு அன்புத் தொண்டு செய்கிறார்கள். சிற்றறிவுடைய நானும், காவிய வளர்ச்சியும், ஆதரிப்பு வளர்ச்சியும் குன்றிய இக்காலத்தில், தமிழ்மொழியை வளர்த்துத் தமிழ்ப் புலவர்களை வளர்த்து தமிழ்நாட்டை அறநெறியில் காவல் செய்து பல் புகழ்படைத்த பாரி முதலிய பண்டைக் குறுநில மன்னர் எழுவர்களுடைய வரலாறுகளையும், புலவர்களுடைய புகழ்ச்சிகளையும், தமிழ்மொழியின் சிறப்பியல்புகளையும், தமிழ்நாட்டின் சிறப்புககளையும் மலர்களாகக் கொண்டு தொடுத்த '**கொடைமன்னர் பனுவல்**' என்னும் இப்பாமாலையைச செந்தமிழ்ச செல்வியின் திருவடிகளுக்குச சூட்டுகிறேன். அன்பர்கள் ஆதரிப்பார்களாக.

இந்நூலைப் பல ஆண்டுகளுக்குமுன்பே வெளியிடுவதற்கு முயன்றும் சில இடையூறுகளால் வெளியிடமுடியவில்லை. ஆயினும், 'முயற்சி திருவினை ஆக்கும்' என்னும் ஆன்றோர் உரையை மேற்கொண்டு தொடர்ந்த முயற்சியால் நாள் பல சென்றும் இப்பொழுது, இந்நூலை நல்ல முறையில் பதிபபித்து வெளியிட்டுதவிய **திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினருக்கு** என் நன்றியைச் செலுததிக் கொள்கிறேன்.

ஆசிரியர்.

# கருத்துரைகள்

## காலஞ்சென்ற

## உயர்திரு. கா. சுப்பிரமணிய பிள்ளை எம்.ஏ. எம்.எல்.

திருவாளர் வித்துவான் கோவிந்தமூப்பனார் அவர்கள் இயற்றிய சங்க காலத்து வள்ளல்கள் எழுவருடைய வாழ்க்கையைப்பற்றிய செய்யுள் நூலினைப் படித்துப் பார்த்தேன். அஃது இனிய எளிய சொல் நடையில் அமைந்து செய்யுள் வளம்பெற்று இலங்குகின்றது. ஏறக்குறைய அது தனித்தமிழில் அமைந்த நூலென்றே கூறலாம். அஃது எழு வள்ளல்களையும் பற்றிய சங்கநூற் கருத்துக்களையும், கல்வெட்டுக்களையும் தழுவி அவற்றின் நயங்களைத் தெளிவுபடுத்தும் பெற்றி வாய்ந்தது. தமிழின் சிறப்பு இயல்புகளை ஆங்காங்கு அது செவ்விதிற் புலப்படுத்துவதாகும். வள்ளல்களுக்குத் தண்டமிழ்த்தாய் ஆதரவு புரிந்து இறையருளைப் பெறுவதற்குத் துணை செய்த அருஞ் செயல் சிறப்பாக இந்நூலுட் காணப்படும். இந்நூலினால் எழுவள்ளல்களின் கொடைத்திறம், ஆண்மைச் செயல், ஆட்சிமுறை, தமிழையும் தமிழ்ப் புலவர்களையும் பேணிவளர்த்த மாண்பு, தமிழ்ப்புலவர்களும் வள்ளல்களும் தம்முள் அளவளாவிப் பாராட்டிய பெருநட்பின் சான்றுகள், அக்காலத்துத் தமிழ்மக்களின் விழுமிய நாகரிக ஒழுக்கம், சமயநிலை முதலியன தெற்றெனப் புலப்படும். மேலும் இந் நூலுள் புதிய கற்பனைக் கருத்துக்களும், தற்கால அறிவுநூற் சாரமான நுண்ணிய கருத்துக்களும், பண்டை நூலின் கற்பனை நயங்களும் விரவி மிளிர்கின்றன. இழுமென மொழியால் விழுமியது நுவலும் இந் நூல் தற்காலத்திற்கு ஏற்றமுறையில் அணிநலம் அமையப்பெற்று இருபாலாரும் விரும்பிக் கற்றுப் பயன்கொள்ளுமாறு செம்மையின் அமைந்த ஓரிலக்கிய அறிவு விருந்தாகத் திகழ்கின்றது. பொருத்தமில் உரைகள் விரவப்பெறாது இயற்றமிழ் நயம்பயக்கும் இந்நூல் கல்லூரி மாணவர்கட்குத் தக்க பாடமாக வைக்கப்பெறுதற்கு உரியது. செய்யுள் நூலமைத்தற்குத் தக்க எடுத்துக்காட்டாகப் பயன்படும்படி இந்நூலை இயற்றிய ஆசிரியர்க்குத் தமிழுலகம் பெரிதும் கடப்பாடுடையது.

அண்ணாமலை நகர்,
16—5—1942

கா. சுப்பிரமணிய பிள்ளை
தமிழ்ப் பேராசிரியர்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

## காலஞ்சென்ற

## உயர்திரு. பண்டிதமணி, மு. கதிரேசச் செட்டியார்

வித்துவான் திரு. கோவிந்தமூப்பனாரவர்கள் இயற்றிய 'கொடை மன்னர் பனுவல்' எனப் பெயரிய செய்யுள்நூலிற் சிற்சில பகுதிகளைப் பார்த்தேன். வள்ளல்கள் எழுவர்கள் வரலாறுகளைச் சங்கப் பாடல்களின் துணைகொண்டும் பிற சான்றுகொண்டும் நிரல்பட அமைத்துத் தமிழ்வளங் கெழுமிய இனிய பாடல்களாக யாத்திருத்தல் பாராட்டத்தக்கது. பாடல்கள் இனிய சொற்றொடர்களாலும் பொருணயத்தாலும் படிப்பார்க்கும் கேட்பார்க்கும் இன்பம் பயக்கும் இயல்பினவாகத் திகழ்கின்றன. இந்நூல் அச்சிடப்பெற்று வெளிவருமாயின் தமிழ் நிலத்தார்க்கு நல்ல விருந்தாகும்.

மகிபாலன்பட்டி,
6—6—1942

மு. கதிரேசச் செட்டியார்.

## உயர்திரு. ச. சோமசுந்தர பாரதி, எம்.ஏ., பி.எல்.

வித்துவான். திரு. கோவிந்தமூப்பனாரவர்கள் கொச்சகப்பாவாலியற்றிய "கொடைமன்னர் பனுவலை"ப் படித்தின்புற்றேன். அந்நூல் பண்டைப் புலவர் செய்யுட் சான்று பிறழாமல் தமிழ் மரபும் செய்யுட் சுவையும் குறையாமல், ஒழுக்கும் ஒளியும் ஒருங்கமைந்துள்ளது. செறிந்து சுருங்கிய பண்டைச் சான்றோர் பாட்டின் செய்திகளை இது கவிநலமும் பலசுவையும் கலந்து பெருக விரித்து விளக்கும் செவ்வி வியப்பும் இன்பமும் விளைக்கிறது. அதியமான் போர் விளக்கம் ஒட்பமும் திட்பமும் ஒருங்கமைந்து இயற்கையும் சிறப்பும் எழில் பெருக வாய்த்து பரிசு பாராட்டத் தக்கது. பழம் புலவர் பாத்திறமும் புத்தறிவும் பொருந்தக் காண விரும்புபவர்க்கு இச் செய்யுள்நூல் ஒரு விருந்தாகும். மொழியியலும் நன் மரபும் ஒழிய, இழிவழக்கோடு இயைபற்ற சொன்முடைந்து போலிப்பா மலிகின்ற தற்காலத்தே இத்தகைய செவ்விய பாட்டியற்றும் புலவர்களைக் காணுவதே அருமையாகும். எழுவர் எழு வரலாறுகளும் அவர்களுடைய வரையாத கொடைவளமும் உரனுளமும் உலவாத உவப்பூட்டி விளக்கக் காணலாம். காதலொடு தறுகண்மை, கற்புயர்வு, கையாறு, பெரும்பிரிவு, உளப்பரிவு, தளராத தாளாண்மை, வழுவாத உயரொழுக்க நெறியோடு, தமிழ்ப் புலமை, புலமையறம், ஒப்புரவு, புலவரின் விரிவுள்ளப் பரிசு போன்ற சால்புகளை வரலாற்று முறையினிலே விதவாமல் விளங்கப் பாடும் திறம், இச் செய்யுள் நூலில் பரக்கக் காண்போம். இதனையும் இதனை ஆக்கிய புலவரையும் பல்லாண்டு கூறி வாழ்த்துகிறேன். பொதுவாக எல்லோரும் சிறப்பாக மாணவரும் இதனைப் பாராட்டிப் படித்துத் தூய இன்பமுடன் பயனும் மிக அடைவரென நம்புகிறேன். உயர்வகுப்பு மாணவர்க்குப் புலவர் புதுப் பனுவல்களையும் பயில்விக்க விரும்பும் பெருங் கலைக் கழகம் பலவும் இதனைப் பாராட்டிப் பயில்விப்பின் நலம் வளரும். தளரு தமிழ்க் கவியணங்கு வலியுற்று வளம் எய்தும் என்பது என் கருத்தாகும்.

பசுமலை,
28—12—1942 ச. சோ. பாரதி.

## உயர்திரு. தூ. சு. கந்தசாமி முதலியார் எம்.ஏ., பி.எல்.

வித்துவான் திரு. கோவிந்தமூப்பனார் அவர்கள் இயற்றியுள்ள வள்ளல்களின் வரலாறுபற்றிய பாட்டுக்களை முற்றிலும் படித்து இன்புற்றேன். பாட்டுக்களனைத்தும், அழகொழுகத் தமிழ்ச்சுவை வளம்பெற இயற்றப்பட்டுள்ளன. அவை கவியின் உள்ளத்தூற்றெழுந்து, இயல்பாக ஊறித் ததும்பிப் பொங்கி வழிகின்றன. திரு. மூப்பனாரவர்கள் கவிபாடும் ஆற்றல் சிறக்கப் பெற்றுள்ளார்கள். அவர்கள் இன்னும் சிறந்த கவிகளால் வருங்காலத்தில் தமிழகத்தை மகிழ்விப்பார்கள் என்று எண்ணுகிறேன். அவர்கள் நீடூழி வாழ்க.

சாத்தூர்,
28—6—1942 தூ. சு. கந்தசாமி.

# சிறப்புப் பாயிரம்

மதுரைத் தியாகராயர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர்,
சித்தாந்த கலாநிதி, ஔவை. சு. துரைச்சாமி பிள்ளை அவர்கள்
இயற்றியது.

திருமிகு வடவேங் கடமும் தென்பால்
உருமிகு குமரியும் ஆயிடைக் கிடக்கும்
தமிழக வரைப்பில் இமிழரசு புரிந்த
முடியுடை வேந்தர் மூவ ருள்ளும்
வேந்து மேம்பட்ட பூந்தார்ப் பாண்டியர்
நன்னாட் டின்கண் நவில்சிறு நாடுகள்
பல. அவற் றுள்ளும் பாடல் சான்ற
நல்லூ ருடையது மல்லிநன் னாடு.
மல்லி நாட்டு மல்லி மருவிய
புத்தூர் வில்லி புத்தூர். அதுதான்
எரியல் சங்க காலத்துக் காரி
ஆதி முதலிய அறவோர்க் குரியது.
இடையே,
விண்டு சித்தன் வியன்மகள் பாவை
பாடிய சூடிக் கொடுத்த நாச்சி
ஆய சான்றோர் மேயசீ ருடையது.
மல்லி மாறி வில்லி யாயினும்
மலிதமிழ் மாறா நிலைமைக் குடையது.
ஆங்கண்,
சான்றாண்மை மிகுந்த சாலியர் குடியில்
தோன்றிய பெருமாள் செய்தவத் தோன்றல்
இனிய பண்பினன் இயற்றமிழ்ப் புலவன்
கனிநலங் கனிந்த நறவிய பாவலன்
மாவிந்தை தழுவும் கோவிந்த எந்தல்
பாணர் கூத்தர் புலவரென் றிவரைப்
பேணுந் திறத்தால் பிறங்கிசை கூத்தியல்
எனுமுத் தமிழும் இசைபெற வளர்த்த
நடைமன் னும் வள்ளல்கள் நல்வர லாற்றினைக்
'கொடை மன்னர் பனுவல்' எனப்பெயர் நிறுவிச்
சேக்கிழார் கம்பர் எனுமிவ ராக்கிய
இலக்கிய வழியீண் டிறந்த தென்பார்க்குச்

சாவாத் தமிழிது ; மேவாது பழியென
எண்ணிய திண்ணியர் இன்ப மீக்கூர
இல்லது புனையும் நெறிகடிந்து, தொல்லை
உள்ளது கூறும் உயர்நெறித் தமிழால்
இழுமென் மொழியும் முழுத்தமிழ் வழக்கும்
வழுச்சொல் புணரா வாய்மையுஞ் சிறப்பப்,
பாடினன் ; எழுதினன் ; பல்லோர் காண
நாடினன் ; அச்சிட்டு நல்கின னவனே.
நீடிய வாழ்வும் கூடிய செல்வமும்
சூடிய புகழும் துணைப்பப்
பீடியல் பெருமை பிறங்குக பெரிதே.

---

## விருதுநகர், செ. நா. கல்லூரித் தமிழ் விரிவுரையாளர்,
## வித்துவான், ந. சேதுரகுநாதன் அவர்கள்
### இயற்றியவை

வேய்ந்த புகழுலககல் வெல்புலமைக் கோவிந்த
ஏந்தல் இனிதாய்ந் தியற்றினனால்.—ஆய்ந்த
படைவேந்தர் நாணப் பலர் புகழும் மேன்மைக்
கொடைவேந்தர் வாழ்ந்தவகை கோத்து. ௧

செய்த செழுந்தமிழாற் சீவில்லி புத்தூரும
எய்தியதே எய்தாத இன்புகழ்மை—மெய்ம்மைப்
புகழூ ருணிப்பட்டிக் கோவிந்தன் போற்றும்
திகழூ ருணியனையான் தேர்ந்து. ௨

வள்ளலாய் வாழ்ந்த மகிழ்தமிழ்முன் னோர்க்கெல்லாம்
வள்ளலாய்த் தோன்றி மகிழ்ந்தனனே.—தெள்ளுஞ்
செழுந்தமிழாற் பாரி முதலெழுவர் சீர்த்தி
எழுந்திலங்கக் கோவிந்தன் யாத்து. ௩

தண்டமிழ்க்காத் தன்றலையைக் கொய்தற்குத் தன்கைவாள்
பண்டளித்த வேற்குமணன் பல்புகழுங் - கொண்டு
பெருஞ்சித் திரனுரைத்த பெற்றிமையாற் செய்த
அருஞ்செயல்மற் றாசெய்வா ஆங்கு. ௪

---

# உள்ளுறை

# கோடைமன்னர்களின்

# வரலாற்றுச் சுருக்கம்

## தோற்றுவாய்

மழை பொழிதலால் கார்காலத்திலும் கோடைகாலத்திலும் நானிலங்களிலும் பயிர்களை வளம்பட வளர்க்கும் நாடு நற்றமிழ் நாடாகும். அது காவிரி முதலிய ஆறுகளையுடையது. முதல்முதலாக உலகத்தில் தோன்றிய தமிழ்மொழியை யுடையது. வேங்கடமலையை வடக்கிலும் கடல்களை ஏனைய திசைகளிலும் எல்லையாகக் கொண்டது. பகைவர்களை அடக்கி ஆளும் அரசர்களையும், நல்லறஞ் செய்யுங் குடிகளையும் அறிவிற் சிறந்த அறிஞரையு முடையது. அந்நாட்டில் பெருஞ்சித்திரனார் முதலிய பெரும் புலவர் பலரிருந்தனர்.

பெருஞ்சித்திரனார் தன் கருத்துக்குகந்த காதலியை மணந்து இன்பந் துய்த்துப் பல பிள்ளைகளைப் பெற்று வாழ்ந்தார். வாழ்கையில், அவர் தம் தந்தையார் ஈட்டிய செல்வமனைத்தையுஞ் செலவு செய்து வறியவரானார். வறுமை மிகுதியால் வருந்திய அவர் அரசரிடஞ் சென்று பரிசில்பெற எண்ணி, அதியமானிடஞ் சென்று பொருள் பெற்று வந்தார். வெளிமான் என்ற மன்னனிடம் போய்ப் பரிசில் கேட்க, இறக்கு நிலைமையிலிருந்த அவன் தன் தம்பி இளவெளிமானை யழைத்துப் 'பரிசில் கொடுக்க' என்று கூறி இறந்தான். சிலநாள் சென்றபின் அவன் சிறிது கொடுக்கக் கொள்ளாராய்க் குமணன் என்ற வள்ளலை யடைந்தார்.

குமணனை அடைந்த பெருஞ்சித்திரனார் தம் தாய், மனைவி மக்கள் வருத்தத்தையும் தம் வருத்தத்தையும் விரித்தெடுத்துரைத்துப், பாரி, ஓரி, காரி, அதியமான், பேகன், ஆய், நள்ளி என்ற வள்ளல்களெழுவரும் இறந்துவிட்டபடியாலும் இரப்பார்க்கு இல்லை என்னாமல் கொடுப்பவன் நீயே யாகையாலும் தம் வறுமையை நீக்கப் பொருளும், ஏறிச் செல்வதற்கு ஒரு யானையுங் கொடுக்க வேண்டுமென்று கேட்டார். அவ்வள்ளலும் அவர் வேண்டியவாறே கொடுத்துதவினான். அவற்றைப் பெற்ற பெருஞ்சித்திரனார் பெற்ற பொருள்களை எடுத்து நடக்குமாறு ஏவலர்களை ஏவித் தாம் யானைமீதேறித் தம்மூருக்குத் திரும்புங்காலை, வழியிலிருந்த இளைய வெளிமானூரை யடைந்து, தாம் ஏறிவந்த யானையை அம்மன்னன் காவல் மரத்தில் கட்டிவிட்டு, அவனை யடைந்து, தாம் பெற்ற பரிசிலைக் கூறிப் புறப்பட்டுத் தம்மூரை யடைந்தார். அடைந்தவர் வள்ளல் குமணன் கொடுத்த பொருள்களைக் கொண்டு தாமுமுண்டு தம் தாய் மனைவி சுற்றத்தார் அயலார் முதலியோர்களையும் உண்பித்து முன்போலத் தமிழ் நூலா

ராய்ந்து, இன்புற்று வாழ்ந்து வந்தார். அவர் குமணனிடம் புகழ்ந்து கூறிய கொடையிற் சிறந்த மன்னர்களாகிய பாரி முதலியோர்களுடைய எழுவர்கள் வரலாறுகளும் அவர் கூறிய முறைப்படி கூறப்படுகின்றன.

## க. வள்ளல் பாரி வரலாற்றுச் சுருக்கம்

மலர்புனை மங்கையரும் ஆடவரும் மன்னனும் அறநெறியிற் செல்லுதல் காரணமாக, உலகத்தில் பெய்யினும் பெய்யா தொழியினும் மழை பெய்ய, அம்மழையினால் பல விளைபொருள்களையும் விளைவித்துச் செல்வத்தில் சிறந்து விளங்கும் நாடு பறம்பு நாடாகும். அந்நாட்டில் கனிகளையுடைய மரங்களும் மலர்களையுடைய செடி கொடிகளும் தினை முதலிய கூலப் பயிர்களும் செழித்து வளரும். பறம்புமலை அந்நாட்டிற்கு அணியாயிருந்து வெதிர் நெல்லையும் வள்ளிக்கிழங்கையும் பலாப்பழங்களையும் உண்டாக்கும். தேனையும் கொடுக்கும்.

வளத்திற் சிறந்த பறம்பு நாட்டையும் அறத்திற் சிறந்த குடிகளையும் அறநெறி தவறாமற் காவல் புரிவதற்குப் பாரி அரசனானான். அவன் காட்சிக்கெளியவன். முறை வேண்டினாருக்குத் துலாக்கோலைப் போன்று சீர்தூக்கி முடிவு கூறுபவன். தமிழ்ப் புலவர்களை ஆதரிப்பவன். அவன் மனைவி பெயர் நல்லாளென்பது. அங்கவை சங்கவை என்பன அவன் மகளிர் பெயர்கள்.

ஒரு நாள் தன் கான்வளங் காண்பதற்கு வள்ளல் பாரி தேரேறிச் சென்றான். சென்றவன் செல்வரைப்போல் செருக்கொடு நின்ற நெற்பயிர்களையும், இன்னிசையால் ஆவினத்தை எழுப்பி நடத்திச் செல்லும் இடையனையும், மரங்களையும் மலர்ச் செடிகளையும் வண்டுகளையும் பிறவற்றையும் பார்த்துக் கொண்டே சென்றான். செல்லுகையில் கொழு கொம்பின்றி நிலத்தில் விழுந்து கிடந்த முல்லைக் கொடியைக் கண்ணுற்றுத் தான் ஏறிவந்த தேரை அதனருகே நிறுத்தி அதனை அதன்மேல் படரும் படி செய்து குதிரைமீது ஏறி மீண்டான். புலவரும் குடிகளும் குதிரை மீதேறி மீண்ட மன்னனிடஞ் சென்று தேர் முல்லைக்குக் கொடுக்கப்பட்டதைத் தெரிந்தார்கள். அவர்கள் காடுசென்று தேரினையும் தேரைப் பெற்ற முல்லையையும் பார்த்து மகிழ்ந்து தேரைக் கொடுத்த மன்னனையும் புகழ்ந்து மீண்டார்கள்.

கொடையிலும் கோலிலும் புகழ் மிகுந்த பாரிமன்னனைக் கபிலர் காண எண்ணித் தம்மூராகிய வாதவூரிலிருந்து புறப்பட்டார். மணமுலவு மலர்களைச் சுமந்தும் வனப்பு மிகுந்த தழைகளைச் சுமந்தும் தலை வணங்கும் மரஞ்செறிந்த வழியே நடந்து, மகுடியிசையினுக் குருகி அரவு படம் விரித்தாடுதலையும், விளங்கனியால் மந்தி பந்தாடுதலையும் பிறவற்றையும் பார்த்து மகிழ்ந்து பறம்பு நாட்டை யடைந்து அரசனருகே சென்றார். பாரி அவருக்கு இருக்கை தந்து 'இருக்க' என்று கூறினான். இருவரும் நெடுநேரம் உரையாடி உரையாலும் உளத்தாலும் ஒன்றுபட்டு நண்பராயினர். கபிலர் பாரியுடனிருந்தே காலங்கழித்து வந்தார். ஒரு நாள், பாரி முல்லைக்குத் தேரீந்ததைக் கேள்விப்பட்டு அம்முல்லைக் கொடியையும் போய்ப் பார்த்து வந்தார்.

நிற்க. பாரி மகளிரின் அழகையும் அறிவையும் கல்வியையுங் கேள்வியுற்றுப் பாண்டியன் அவர்களை இரண்டாம் முறையாக மணம் புரிய எண்ணி மகட்பேச அமைச்சர்களை அனுப்பினான். அமைச்சர்களும் உடன்பட்டுப் பாரியை யடைந்து வந்த வரலாற்றைத் தெரிவித்தனர். பாரி தன் மக்களைக் கொடுப்பதற்கு மறுத்தான். அதனைக் காரணமாக வைத்துக்கொண்டு தன்னோடு இரு மன்னர்களையுஞ் சேர்த்துப் போருக்கு வந்தான். வந்தவன் அரசன் அரண்மனை யிருக்கும் பறம்பு மலையை முற்றுகையிட்டான். அரணைக் கைப்பற்ற எண்ணினான். பாரியின் படைகள் எதிர்த்த எதிர்ப்பினால் அவ்வெண்ணத்தைக் கைவிட்டுத் திரும்பினான். திரும்பியவன், பாரி யிருப்பின் தனக்குப் பின்னும் பழியே ஏற்படுமென்று எண்ணி வஞ்சகனொருவனை அனுப்பி, அவ்வள்ளலையே பரிசிலாகப் பெற்று வருமாறு ஏவி, அங்ஙனமே பெற்றுக் கொலை செய்தான். பாரி மனைவி அவன் இறந்தானெனக் கேள்விப்பட்டுத் தானும் உயிர் விட்டாள். பின்பு பறம்பு நாட்டைப் பாண்டியன் கைப்பற்றிக் கொண்டான்.

தந்தையையுந் தாயையுமிழந்த பாரி மகளிரிருவரையும் கபிலர் அழைத்துக்கொண்டு அந்நாட்டு மலையையும், அருவியையும் பிறவற்றையுங் கண்டு மனம் வருந்தி அவற்றையும் அந்நாட்டையும் கடந்து இருங்கோவேளிடமும் விச்சிக் கோவிடமும் சென்று அவர்களை மணஞ் செய்து கொள்ளுமாறு வேண்டினார். அவர்கள் உடன்பட்டாரல்லர். கபிலர் அம்மகளிரோடு சென்று ஒரு பார்ப்பானிடம் அவர்களை அடைக்கலப்படுத்திச், செல்வக் கடுங்கோ வாழியாதனைக் காண எண்ணிச் சென்று, அவனைக் கண்டு அவன் கொடுத்த பரிசிலையும் பெற்று மீண்டார். மீண்டவர் அம்மகளிர்களை அழைத்துக்கொண்டு கோவலூரை யடைந்து வள்ளல் காரியைக் கண்டு தாம் வந்த வரலாற்றைக் கூறினார். வள்ளல் காரியும் அவர் வேண்டுகோளை ஏற்றுப் பாரி மகளிர்களைத் தன் மக்களிருவருக்கும் மணஞ் செய்வித்து மகிழ்ந்தான். கபிலர் பாரியிடம் வைத்த அன்பினால் அவனை அடைய எண்ணி வடக்கிருந்து அவனையும் இறைவனையும் அடைந்து இன்புற்றார்.

## உ. வள்ளல் ஓரி வரலாற்றுச் சுருக்கம்

தன்னை நாடி வருகின்ற அனைவருக்கும் நிழலையும் நீரையும் காய் கனிகளையும் மலரையும் சந்தனத்தையும் முத்துக்களையும் மணிகளையும் கொடுத்துப் புகழ்கொள்ளும் மலை கொல்லிமலையாகும். அம்மலைக்கும் அதனைச் சார்ந்த நாட்டிற்கும் அரசன் வல்விலோரி என்பான். இவன் வேடுவரினத்தைச் சேர்ந்தவன். கொடையிலும் நடையிலுஞ் சிறந்தவன். தமிழ்ப் புலவர்களை ஆதரிப்பவன்.

ஒருநாள் ஓரி வில்லெடுத்து வேட்டைக்குப் புறப்பட்டான். புறப்பட்டவன் தினைக்கதிரைத் தின்னவருங் கிளிகளைக் காரிகையார்கள் கவணால் ஓட்டிப் புனத்தைக் காவல் செய்யுங் காட்சியையும் மாங்கனிகளையும் பலாச்சுளைகளையுந் தின்று களித்துக் குரங்குகள் மரத்தில் வளர்ந்து கிடக்கும் கொடிகள்மேலேறி ஊசலாடுங் காட்சியையும் பிறவற்றையுங் கண்டு களித்துச் சென்றான். செல்லுகையில் மான் முதலிய விலங்குகளைக் கண்டு வேட்டையாடினான். ஓரிடத்தில், ஓர் யானை நிற்பதைக் கண்டான். கண்டவன் அதனை வெகுளும் புலியொன்றினையுங் கண்டான். அதன் பின் ஒரு மானும் ஒரு பன்றியும் செல்வதைக் கண்டான். கண்ட

அம்மன்னன் அந்நான்கினையுங் கொல்லுதற்குக் குறிவைத்து ஓரம்பு தொடுத்தான். அந்த அம்பு அந் நான்கின் உடம்பிலும் பாய்ந்து ஊடுருவிச் சென்று ஒரு புற்றினுள்ளிருந்த உடும்பின் மேலும் பாய்ந்து கொல்வித்தது. அவற்றைச் சென்று பார்க்கும் பொழுது வன்பரணர் முதலியோரைக் கண்டு, அவர்கள் பாடிய இசையைக் கேட்டு மகிழ்ந்து அவர்கள் உண்பதற்கு ஊனும் குடிப்பதற்குத் தேனுங் கொடுத்து உண்பித்து அவர்களுக்குப் பொன்னும் மணியுங் கொடுத்துதவி அவர்களிடம் விடைபெற்று மீண்டான். வன்பரணர் முதலியோர் அவனைக் காண எண்ணி அரண்மனையை அடைந்து அவனைக் கண்டு இசைபாடி மகிழ்வித்தார்கள் அரசனும் அவர்களுக்கு விருந்தூட்டிப் பல பரிசில் கொடுத்துதவினன் அவற்றைப் பெற்றுத் தம் வீடுதிரும்பினர்கள். கழைதின் யானையார் என்ற புலவரும் அவன்பாற் சென்று அவனைப் புகழ்ந்து பாடிப் பரிசில் பெற்றுச் சென்றார். வல்விலோரியின் பிற்கால வரலாறு அதியமான் வரலாற்றில் கூறப்படுகிறது. ஆண்டுக் காண்க.

## ௫. வள்ளல் காரி வரலாற்றுச் சுருக்கம்

அருகில் வளர்ந்த குருந்த மரத்தின்மேற் படர்ந்து மாலை நேரத்தில் மலர்களை மலர்த்தி மணம்பரப்பும் முல்லைக் கொடிகளைக் கொண்டு விளங்கும் நாடு மலையமானாடாகும். மலாடென்பது மலையமானாட்டின் மரூஉச்சொல். அந்நாட்டின் தலைநகரம் கோவலூரெனப்படும். மலையமானாட்டை வள்ளல் காரி யென்பவன் காவல் செய்தான். அவன் மாரி போல் கொடுக்கும் வண்மையாளன்; புலவர் புகழும் புகழுடையவன்.

வள்ளல் காரியைக் கல்வியிற் சிறந்த கபிலர் காண எண்ணிப் புறப்பட்டு, மாமர நிழலில் மங்கையர் தினையைக் குற்றுப்பாடிய பாட்டைக் கேட்டுக் கிளிகள் தாமும் அப்பாட்டுக்களைப் பாடித் திருத்தஞ் செய்கிற இளமரங்கள் மிகுந்த வழியே நடந்தேகி, வாவிகளையும் வயல்களையும் பிற வற்றையுங் கண்டுகளித்துக் கோவலூரை யடைந்தார். அரசனை யடைந்து அவனைக் காணும்பொழுது, அவன் புலவர்களுக்கு வரிசை யறியாது கொடுக்குங் கொடையைப் பார்த்து, 'அரசே! வரிசையறிந்து கொடுப்பாயாக' என்று பாடியும், தமிழின் சிறப்பியல்புகளை எடுத்துக் கூறி அவனை மகிழ்வித்தும் சிறந்த பரிசில் பெற்று வாழ்வூர் வந்து சேர்ந்தார். நப்பசலையார் என்ற நல்லிசைப் புலமை மெல்லியலாரும் அவன் பாற் பரிசில் பெற்றுச் சென்றார்.

இங்ஙனம் புலவர்களைப் போற்றி வாழுங்காலத்தில், வடநாட்டு ஆரிய அரசர் சிலர் தமிழ்நாட்டு அரசர் மேற்கொண்ட பகைமை காரணமாகவோ தமிழ்மொழியின் மேல் வைத்த வெறுப்பின் காரணமாகவோ படைகளோடு புறப்பட்டுக் காரிக்குச் சொந்தமாகிய முள்ளூரை யடைந்து அதனைக் கைப் பற்ற எண்ணினர். அச்செய்தியை மன்னன் காரி கேட்டுச் சினங் கொண்டு, நால்வகைப் படைகளோடு சென்று, பகைத்து வந்த மன்னர் களோடு போர் செய்தான். ஆரிய அரசர்களும் வீரர்களும் ஆடிக் காற்றி லகப்பட்ட பஞ்சுபோன்று வலியிழந்து காரி மன்னனுக்குப் புறங்கொடுத் தோடினர். காரி வள்ளலின் பிற்கால வாழ்க்கை அதியமான் வரலாற்றிற் கூறப்படுகிறது. ஆண்டுக் காண்க.

## ௩. வள்ளல் அதியமான் வரலாற்றுச் சுருக்கம்

காவிரி பாயும் நாடுகளில் கொங்கு நாடும் ஒன்று. அந்நாடு தன்னைக் காண்பார்க்குத் தன்னிடத்திலுள்ள வண்டுகளால் கண்களையும், கோவைக் கனியினால் உதட்டையும் மயிலினால் சாயலையும் காந்தளினாற் கைவிரல்களையும், மேகத்தினால் கூந்தலையும் நினைப்பூட்டி ஒரு மங்கையின் எழிலைக் காண்பிக்கும் அந்நாட்டின் தலைநகரம் தகடூர் என்பது. அந்நாட்டை அதியமான் அரசு புரிந்து வந்தான். அவன் தென்மொழியில் தேர்ச்சி பெற்றவன்; புலவர்களை ஆதரிப்பவன்; இசையில் வல்லவன்; குடிகள் புகழக் கோலோச்சுபவன்.

ஒளவையார் அதியமான் கொடையைக் கேள்விப்பட்டு, அவனிடம் பரிசில்பெற எண்ணி யாழெடுத்துப் புறப்பட்டார். புறப்பட்ட அவ்வம்மையார் பொன்னனினைந்து அதியமானிடம் புறப்படுந் தம்மைப் போலவே பழங்களை நினைந்து பழுமரங்களை நாடிச் செல்லும் பறவைகளையும் பிறவற்றையுங் கண்டு களித்துத் தகடூர் போய்ச் சேர்ந்தார். அரண்மனை புகுந்து அதியமானைக் கண்டு வணங்கி யாழிசைத்தும் பாட்டிசைத்தும் அவனை மகிழ்வித்தார். அதியமான் அம்மையார் பாடுந்திறமையையும் கல்வியறிவையுங் கண்டு, பரிசில் கொடுக்கின் பிரிவர் என்று நினைந்து சிலநாள் பரிசில் நீட்டித்தான். அவன் பரிசில் நீட்டிப்பதை எண்ணி, ஒளவையார் அவனிடஞ் சொல்லிக்கொள்ளாமல் வாயிலோனிடங்கூறி மனம் வருந்திப் புறப்பட்டார். வாயிலோன் மன்னனை அணுகிக் கூற அவன் விரைந்து வெளியே சென்று, நடந்து கொண்டிருந்த ஒளவையாரை அடைந்து அழைத்துவந்து அவருக்கு வேண்டிய பரிசில் கொடுத்தனுப்பினான். ஒளவையாரும் அவற்றைப்பெற்று அவன் கொடையையும் அன்பையும் புகழ்ந்து போயினார். அதியமான் அன்பையும் பண்பையுங்கண்டு அடிக்கடி வந்து பரிசில் பெறுவதும் போவதுமாக இருந்தார். பெருஞ்சித்திரனாரும் அவனிடம் வந்து பரிசில் பெற்றுச் சென்றார்.

அதியமான் கொடையிற் சிறந்து வாழுங்காலத்தில் எழினி என்னும் அரசனொருவன் வேறு ஆய சிற்றரசர்களைத் தனக்குத் துணைவர்களாக்கி அதியமானொடு போர்புரிய வந்தான். அவன் வருகையை யறிந்த அதியமான் தன் தானைகளோடு புறப்பட்டு, பகைத்துவந்த மன்னர்களோடு போரிட்டு எழினியைக் கொன்றான், ஏனைய அறுவர்களையும் புறமுதுகிட்டு ஓடும்படி செய்தான். அதியமான் வாகை சூடிப் போர்க்கோலத்தோடு தகடூருக்கு மீண்ட காலத்தில், அவன் மனைவி ஆண்மகவு பெற்றிருப்பதை யறிந்து அறநூல் விதிப்படி அம்மகவைக் கண்டு மகிழ்ந்தான்.

சில்லாண்டு கழிந்தபின், அதியமான் தன்னிடம் பகைத்துக் கொண்டிருந்த இளந்திரையன் என்பானிடம் அவன் பகைமையை அடக்க எண்ணிக் கல்வியிற் சிறந்த ஒளவையாரைத் தூது அனுப்பினான். ஒளவையார் வழியிலுள்ள காட்சிகளையுங் காஞ்சிமா நகரத்தின் காட்சிகளையுங்கண்டு களித்து அரண்மனை புகுந்து அரசனைக் கண்டார். அம்மையாரின் வருகையை அறிந்த அம்மன்னன், அவருக்கு விருந்தூட்டித் தன் படைவலிமையைக் காட்ட எண்ணிப் படைக்கருவிகளிருக்கும் கொட்டிலுக்கு அழைத்துச் சென்று காட்டினான். காவலன் கருத்தை யறிந்த ஒளவையார் அவன் படைக்கருவிகளைப் புகழ்வதுபோல இகழ்ந்தும் அதியமான் படைக் கருவிகளை இகழ்வதுபோலப் புகழ்ந்தும்பாடி, அவன் செருக்கை

யடக்கித் தகடூருக்கு மீண்டார். அதியமான் ஔவையார் வந்தபின் நிகழ்ந்த நிகழ்ச்சிகளைக் கேட்டு மகிழ்ந்தான்.

இங்ஙனமிருக்கையில் ஒருநாள் அதியமான் வேட்டையின்மேல் விருப்பங்கொண்டு தன்னுடைய குதிரைமலையை யடைந்தான். அம்மலை யருகே தினைப்புனங் காவல் காத்த ஒருமங்கை பரணிலிருந்து பாடிய குறிஞ்சிப் பண்ணைக் கேட்டுத் தினைக்கதிரைத் தின்னாமலும் புனத்தைவிட்டகலாமலும் நின்ற யானையையும், தான் ஈன்ற கன்றின் உடம்பை நாவினால் நக்கி நக்கி அதன்பின் சென்றுகொண்டிருந்த மானையுங் கண்டு மன்னன் இரக்கமிகுதியினால் அவற்றைக் கொல்லாமல் அவற்றைக் கடந்து நடந்து செல்ல, ஓரிடத்தில் ஒரு புலி புல்லில் படுத்துக் கிடப்பதைக் கண்ணுற்றான். அம்பெடுத் தெய்யுமுன், அது காட்டினுள் மறைந்து செல்ல அதனைப் பின்தொடர்ந்து சென்றான். செல்லுகையில் அதியமான் ஒரு துறவியைக் கண்ணுற்று அருகேசென்று வணங்கி நின்றான். அத்துறவி அவன் கொடை முதலியவற்றைப் புகழ்ந்து ஒரு நெல்லிக்கனியைப் பறித்துக் கொணர்ந்து அதன் பெருமையையுங் கூறி அவனிடங் கொடுத்தான். அதனைப்பெற்ற அவ்வள்ளல் அக்கனியை ஔவையாருக்குக் கொடுத்து உண்பித்தால் தான் உண்பதனினும் நன்மை பயக்குமென எண்ணித் தானுண்ணாமல் கொணர்ந்து ஔவையாரை யழைத்துக் கொடுத்தான். உண்டபின் அதன் பெருமையையும் அது கிடைத்த வரலாற்றையும் அவன் கூறக்கேட்டு அவனைப் புகழ்ந்து வாயார வாழ்த்தினார். ஔவையார் அதியமான் வேண்டுகோளின்படி அவன் மகன் பொகுட்டெழினிக்குக் கல்வி கற்பித்தும் செந்தமிழின் சிறப்புகளை எடுத்துரைத்தும் அவனோடிருந்து வாழ்ந்து வந்தார்.

பின்பு அதியமான் கோவலூருக்கு அரசனான வள்ளல் காரி தன்னோடு பகைமை கொண்டதன் காரணமாகப் படைகளோடு கோவலூருக்குப் புறப்பட்டு அவனோடு போர்புரிந்து அவனைப் புறமுதுகிட்டு ஓடும்படி செய்து, அவ்வூரையுங் கைப்பற்றித் தன்னூருக்குத் திரும்பினான். அதியமானுக்குத் தோற்றோடிய காரி சேரமான் பெருஞ்சேரலிரும்பொறையை யடைந்து தனக்கு நேர்ந்த இன்னலைக் கூறித் தனக்கு உதவிசெய்யும்படி வேண்டினான். அவன் உடன்பட, இருவரும் அதியமானுக்கு நண்பனாகிய ஓரியினுடைய நாடாகிய கொல்லியை முதலில் கைக்கொள்ள எண்ணிப் புறப்பட்டனர். வள்ளல் ஓரி பகைவர் வருகையையறிந்து தன் நண்பனாகிய அதியமானைப் படைத்துணை வேண்டினான். அதியமான் பாண்டியனையும், சோழனையும் படைத்துணை வேண்டி அவர்கள் படையோடு தன் படையையுஞ் சேர்த்துக் கொண்டு கொல்லி நாட்டையடைந்தான். கொல்லிப் போரில் வள்ளல் ஓரி விண்ணுலகடைந்தான். அதியமான் தோற்றுத் தகடூருக்கு மீண்டான். காரியும் பெருஞ்சேரலிரும்பொறையும் கொல்லி மலையைக் கைப்பற்றிய பின் தகடூரையுங் கைப்பற்ற எண்ணித் தகடூரை அடைந்து முற்றுகையிட்டனர். அதியமான் இறுதியில் அவர்களோடு போர் புரிந்து சேரனால் கொல்லப்பட்டான். செந்தமிழ்ச்செல்வி அவனைச் சிவபெருமான் திருவடியிற் சேர்த்தாள்.

## ௫. வள்ளல் பேகன் வரலாற்றுச் சுருக்கம்

வெயிலின் கொடுமையினால் வருந்திய குறவரினம் மழை வேண்டுதலினாலே, அங்கே பெய்ய வரும் மேகத்தைக் கண்டு முருகப் பெருமான்

எறிவரும் யானை என்று திரிபுற எண்ணி மயிலாட, அதனை மான் நாடுகின்ற மலைநாடு ஒரு சிறந்த நாடாகும். பொதினி என்பது அதன் தலைநகர். பழனி என்பது அதன் மரூஉச்சொல். வள்ளல் பேகன் மலைநாட்டை அரசாண்டுவந்தான். அவன் ஆவியர் குலத்திற் பிறந்தவன். அன்பும் அருளு முடையவன். அவன் மனைவியின் பெயர் கண்ணகி என்பது. வள்ளல் பேகனும் அவன் மனைவி கண்ணகியும் ஈருடல்சேர் ஓருயிர் போன்று மனமியைந்து இல்லறஞ் செய்து வந்தார்கள்.

வள்ளல் பேகன் நாட்டுக்குப் பல நல்லறங்கள் புரிந்து அரசு செய்து வருங்காலத்தில், மலைவளங்காணவும் பொழில்வளம் காணவும் நினைந்து பரிமீதிவர்ந்து புறப்பட்டு ஒரு பொழிலையடைந்தான். அவனது வருகையையறிந்து சோலையாகிய மங்கை பசுந்தளிர்களாகிய உடை உடுத்துப் பழமாகிய அணிகலனணிந்து எதிர்நின்று, குயில் மொழியால் வாழ்த்திக் குளிர் மலர்தூவி வரவேற்றாள். மன்னன் மகிழ்ந்து நடந்து வன்கனிகளைச் சுமந்து மண்ணுற வளைந்து கிடக்கும் மாமரங்களையும் முழவம்போல் முதிர்ந்து தூங்கும் பழங்களையுடைய பலா மரங்களையும், பரிபோல் அசைந்தாடும் கரிவிடு பசுங்கழைகளையும் பிறவற்றையுங் கண்டு களித்து அருவி விழும் மலையருகே சென்றான். ஆங்கொரு மருங்கு விழும் அருவி முழவியக்க, வண்டு யாழ்செய்யப், பசுங்கிளி பாட்டிசைக்க, மயிலொன்று தன் தோகையை விரித்து ஆடி மகிழ்ந்தது. மன்னனும் அவ்வியற்கைக் கூத்தைக்கண்டு மனமகிழ்ந்தான். மகிழ்ந்தவன் தன் மேனியிலணிந்திருந்த மேலாடையை எடுத்து அதனருகே சென்று பரிசில் கொடுத்தான். பின்பு தன் நகருக்கு மீண்டான்.

பேகன் தன் நாட்டை நன்கு காவல்செய்து வருங்காலத்தில், இளவேனிற் பருவம் தோன்றிற்று. மரஞ்செடி கொடிகளிற் பல, வெயிலால் வறண்டன; மாமரங்கள் தளிர்த்தன; செருந்தி மரங்கள் மலர்ந்தன. மரவமும் குரவமும் அரும்பின. தென்றல் எழுந்து தளிர்களையும் மலர்களையும் அசைத்தது, குயில் பறந்து பாடி மகிழ்ந்தது; கலைமான் தன் பிணை வெயிலால் வாடிய பொழுது பொய்கைக் கழைத்துச் சென்று அதற்குப் புனலூட்டியது. யானை யாமரத்தின் பட்டையைக் கோட்டால் குத்தி எடுத்து உண்பித்து அதன் காதற் பிடியின் நீர்வேட்கையை நீக்கியது. புறா தன்பெடை வருந்தாதபடி தன் சிறகுகளை விரித்து நிழல் கொடுத்தது; மன்னனும் அவன் மனைவியும் நகர மாந்தர்களும் வேனிலின் வெம்மையை நீக்கும் பொருட்டுப் பொழில் விளையாடவும் புனல் விளையாடவும் புறப்பட்டனர்.

மங்கையர்கள் மானினம் போன்று நடந்து மரஞ்செறிந்த சோலையையடைந்தனர்; ஆடவர்கள் புலியினம் போன்று நடந்து பூக்கள் நிறைந்த பொழிலை எய்தினர்; தளிர்களையும் மலர்களையும் கொய்தனர்; மாலைகட்டிச் சூடி மகிழ்ந்தனர்: பேகனும் அவன் மனைவி கண்ணகியும் மலர் கொய்து மகிழ்ந்தார்கள். பின்பு பொய்கை புகுந்து நீர் விளையாடத் தொடங்கினர். பலர் நீந்தி விளையாடினர்; பலர் படகுகளில் ஏறிச் சென்று பாய்ந்து விளையாடினர்; பேகனும் கண்ணகியும் புனல் விளையாடி மகிழ்ந்தனர். விளையாடி மகிழும்பொழுது பொன்னி என்னும் பொதுமகள் மன்னன்மேல் மனஞ்செலுத்தி அவனருகுசென்று அவனோடு ஆடி அவனைத் தன் வயப்படுத்தினாள். கண்ணகியினின்றும் அவ

னைப் பிரித்துக் காவிற்கழைத்துச் சென்று ஆடல் பாடல்களால் அவனை அகமகிழ்வித்தாள். ஞாயிறு மறைந்தது காவலன் கண்ணகியை அடைந்து அவளோடு அரணமனையை அடைந்தான் மக்களும் ஆடல்களை முடித்து அவரவர் இல்லஞ் சென்றனர்.

மன்னனைப் பிரிந்து மனையை அடைந்த பொன்னி மனம் வருந்தினாள்; வனப்பிழந்தாள்; மெலிந்தாள்; வாவியிலும் காவினிலும் மன்னனோடு தான விளையாடிய விளையாடல்களை ஓவியம எழுதினாள்; அவற்றைப் பார்த்து ஒருநேரம் மகிழ்ச்சியும மறுநேரம் வருத்தமும் அடைவாள். மன்னன் பிரிவினால் வருந்திககொண்டிருந்த பொன்னி முன எழுதிய ஓவியத்தைத தன் தோழியிடம் கொடுத்துத தன்னிலைமையை மன்னனிடம் கூறி அவ் வோவியத்தையும் கொடுத்து வருமாறு அவளை அனுப்பினாள். தோழி அங்ஙனமே செய்தாள். மன்னன பொன்னி வருத்தத்தை நீக்க எண்ணினான். இரவில துயிலுகையில் மன்னன் கண்ணகியை விட்டுப் பிரிந்து பொன்னியை யடைந்து வாழலாயினான்.

கண்ணகி விழித்தெழுந்தாள். கணவனைக கண்டாளில்லை; தேடினாள்; தோழியரைத் தேடுவித்தாள்; தானும காடும மலையுஞ் சென்று அழுது அலறித தேடினாள்; தேடுகையில் பரணர், பெருங்குன்றூர்கிழார், அரிசில கிழார், கபிலர் என்ற புலவர்கள் அவள் புலம்பி யழுந் துயரறிந்து இரங்கித் தாங்கள் தேடிக் கொணர்வதாககூறி மலைநது தேடிக் காட்டிலிருந்த பேகனைக் கண்டு, அவள் துயரங்களை எடுத்துரைத்து அவனை யழைத்துக் கொணர்ந்து, அவளிடஞ் சேர்த்தனர். பேகன் மனைவியின் கற்பையும புலவர்களன்பையும் கண்டு மகிழ்ந்து அப் புலவர்களுக்குப் பரிசில் கொடுத்தனுப்பினான். கண்ணகியோடு நீண்டகாலம் ஒன்றுபட்டு வாழ்ந்து நாட்டுக்குப் பல நல்லறஞ் செய்து இறைவன் திருவடி நிழலையடைந்தான். கண்ணகியும் அவன் பின்னே சென்றாள்.

## ௬. வள்ளல் ஆய்அண்டிரன் வரலாற்றுச் சுருக்கம்

தனக்கென ஒருருவமின்றி உயிர்தோறுங் கலந்து தன் வருகையை நாடுகின்ற மக்களுக்கு முருகனைப்போல இன்பந் தந்து முத்தமிழுக்கு உறவுகொண்டு விளங்கும தென்றல் தோன்றுமிடம பொதியமலையாகும். அம் மலையைச் சார்ந்த நாட்டிற்கு ஆய்குடி தலைநகராகும். அந் நாட்டிற்கு ஆய் அண்டிரன் என்பான் அரசன்; அவனுக்கு மனைவியர் பலர்; அவன் வரையாது கொடுக்கும் வள்ளல்; செந்தமிழைச் சிறந்தோங்கச் செய்தவன்; சிவபெருமானுக்குச் சென்னிசாய்ப்பவன்.

ஆய் அண்டிரன் ஒருநாள் மலைவளம் பொழில்வளங் காண எண்ணிப் பரிமீதிவர்ந்து சென்றான். சென்றவன், மலர்ப்போர்வை போர்த்துக் கயலாகிய கண்களால் மலைவளங்கண்டு மீள்வதுபோல மலையிலிருந்து வரும் ஆற்றையும், வாழைக் கனியைக்கண்டு கல்லிடுக்கில் நடந்து காலதவறி விழுந்த ஒருபிடியை அதனருகே சென்று கைகொடுத்துத் தூக்கிவிடுங் களிற்றினையும் பிறவற்றையுங் கண்டு நடந்தான். ஆங்கோரிடத்தில் அவன் வருகையை யறிந்த அரவுஒன்று சிறந்த ஆடையொன்றை வெளியே கொணடுவந்து வைததகல, அதனைககண்ட அவ்

வரசன் அதனை எடுத்துக் கல்லாலின் கீழிருந்த கண்ணுதற்பெருமானுக்கு அணிந்து வணங்கிமீண்டான்.

ஆய் அண்டிரன் வண்மையைக் கேட்டுத் துறையூர் ஓடைகிழார் என்பவர் சோழநாடு கடந்து பாண்டியநாடடைந்து வைகையில் நீராடி, மதுரை மாநகரின் அழகுகளைக் கண்டுகளித்து அதனை அகன்று சுரமுஞ் சோலையும் ஊரும் பல கடந்து காணுதற்கருங் காட்சிகளைக் கண்டு ஆய் குடியை அடைந்து அரசனிடம்போய்த் தாம வந்த வரலாற்றைக் கூற, அவன் அவருக்கு அள்ளி யள்ளிப் பல பொருள்களைக் கொடுத்தான். ஏறிச் செல்வதற்கு யானையொன்றும் பரிசில் கொடுத்தான். அவற்றைப் பெற்று மகிழ்ந்து தமமூர் திரும்பினர்.

வள்ளல் அண்டிரன் நன்முறையில் நாட்டைக் காவல்செய்துகொண்டு வருங்காலத்தில், அவனுடைய ஒருநாரைச சேரமன்னனால் ஏவப்பட்ட கொங்கா பலா வந்து கொள்ளை யடித்தனா. அதனைக் கேள்வியுற்ற அண்டிரன் தன்தானையோடும புறப்பட்டு அக கொங்கரோடு போாபுரிந்து அவர்களைப் புறமுதுகிட்டோடும்படி செய்து பலரும் புகழ ஊர் திரும்பினன்.

வண்மையாலும் வலிமையாலும் செஙகோல் செலுத்துஞ் சீர்மை யாலும் புகழடைந்த மன்னன் அணடிரனைக் கண்ணாரக் காணவேண்டு மென்ற வேட்கையினால் முடமோசியாரென்ற புலவர் தம் மூராகிய உறை யூரினின்றும புறப்பட்டுப் பல காட்சிகளையுங் கணடு களித்து ஆய்குடியை யடைந்து அவனைக் கண்டு மகிழ்ந்து தாம் வந்தடைந்த கருததை அவனுக் குத் தெரிவித்தார் புலவா தம உளளக் கருததைத் தெரிவித்த பினனரும் வள்ளல், தன்னிடம் வரும புலவருக்குப் பரிசில் கொடுப்பதுபோலவே பல பொருள்களைப் பரிசில கொடுததான். புலவா மறக்காமல் அவறறைப் பெற்றின்புற்றா. அவா அண்டிரனைப் பிரிந்து வாழ மனமின்றி ஆய் குடியிலேயே அவனோடு வாழ்ந்துவந்தாா. மேலும அவா பொதிய மலையின் அழகையும பொழிலின் அழகையும் பார்த்து அவற்றைப் புகழ்ந்தும் அரசனைப் புகழ்ந்தும அவன் கொடையைப் புகழ்ந்தும் பாடுவா ராயினா. வள்ளல் அண்டிரன பல நலலறஙகள் செய்து இறுதியில் இறைவன திருவடியை யடைந்தான்.

## எ. வள்ளல் நள்ளி வரலாற்றுச் சுருக்கம்

பொழிய வருகின்ற மேகததினொலியும் தன்னிடத்திலுள்ள வேழததினொலியும் அருவிநீரொலியும் வேடுவர் வேட்டையினொலியும் ஒன்றோடொனறு மாறுபட்டு ஒழியா தொலிக்குந் தோட்டி என்னும் மலை யின் அழகை முற்றுறக் காண வல்லவரும் சொல்ல வல்லவரும் எழுத வல்லவருமில்லை அம்மலை, நீருந்த வந்த நினைப்பைவிட்டு மானும் அதன் கன்றும இருந்து கேட்கும்படி குவளை மலரின் தேனை யுண்டு வண்டு இசைபாடும சுனைகளையும், கிளிபாட நடஞ்செய்யுங கொடிகளையும், பொன்போன்ற மலாகளைச சொரியும் கொன்றை வேங்கை மரஙகளையும் பிறவற்றையுமுடையது. அம் மலையையும அதனருகேயுள்ள நாட்டை யும் வள்ளல நள்ளி என்பான அரசாணடு வந்தான். அவன் வேடர் குலத்தில் பிறந்தவன. அவனுடைய முயற்சியினால் வேடுவரனைவரும்

ஆறலைக்கும் மறச்செய லொழிந்து, கற்றறிந்து அறஞ்செய்யும் அறிஞ ராயினர்.

வள்ளல் நள்ளி தோட்டிமலைக்குச் சென்று வேட்டையாட எண்ணிச் சில ஏவலாளர் பின்தொடரச் சென்றான். சென்னெறியிலிருந்த அருவிகளையும் மரங்களையும் கொடிகளையுங் கண்டு செல்லுகையில் ஏவலாளரை அழைத்துக் காடுகலைத்து விலங்குகளைத் தானிருக்குமிடத்திற்கு முடுக்கும்படி கட்டளையிட்டான். ஏவலாளர்கள் அங்ஙனமே செய்தனர். வேந்தன் விலங்குகளை வேட்டையாடினான். வேட்டையாடிக் களைத்தவன் அருகே யுள்ள சோலையொன்றினுக்குத் தனியாகச் சென்றான். அங்கே வன்பரணர் தம் வறுமையுற்ற சுற்றத்தாரோடு வழிநடந்து களைத்துத் தங்கியிருந்தார். அவர் நிலையையும் அவர் சுற்றத்தார் நிலையையும் பார்த்த மன்னன் மன மிரங்கி வேட்டையாடிய மானிறைச்சியைத் தானேபோய்க் கொணர்ந்து சுட்டுக்கொடுத்து அவர்கள் பசியை நீக்கி அவர்களுக்குப் பரிசிலுங் கொடுத்தான். கொடுத்தவன் தன்னூரையும் பேரையும் தெரிவியாதவனாய் ஊர் திரும்பினான். வன்பரணர் முதலியோர் அவன் செய்கையைப் புகழ்ந்து அவனைப் பின்தொடர்ந்து அவன் ஊர் பெயர்களைத் தெரிந்துபோய் அவனைக்கண்டு அவன் இன்புறுமாறு இசைபாடிப் பரிசில் பெற்று அம் மன்னனூரிலேயே வாழ்ந்துவந்தனர். நள்ளியும் பன்னாள் வாழ்ந்து பல நல்லறம் புரிந்து இறைவன் திருவடியை யடைந்தான்.

---

உ

சிவமயம்

# கொடைமன்னர் பனுவல்



## பாயிரம்

### கடவுள் வணக்கம்

உலகியல் பொருளை யெல்லாம் உவகையிற் காணக் கண்ணும்,
நலமலி தமிழ்மென் தீஞ்சொல் நயந்தியாங் கேட்கக் காதும்,
புலவர்தம் பொருணூல் நோக்கப் புலமையுங் கொடுத்தெந் நெஞ்ச
மலர்மிசைத் திருக்கூத் தாடும் வள்ளலை வணங்கு வோமால். க

### தமிழ்த்தெய்வ வணக்கம்

தேனினும் இனிய தீஞ்சொல் செய்யவாய் திறந்து பேசி
நானிலம் புகழும் பாடல் யாமொடு நன்கு பாடிக்
கானிலந் தொடநின் றாடுஞ் செந்தமிழ்க் கன்னி தன்னை
ஊனுடம் புருக எண்ணி உளத்தினால் வணங்கு வோமால். உ

### தமிழ்நாட்டு வணக்கம்

இன்னிசைப் புலவர் பாணர் ஈகையிற் சிறந்தார் மள்ளர்
மன்னரோ டெமையும் ஈன்று மடிமிசை இருத்தி நல்லூண்
பன்னெடுங் காலம் ஊட்டிப் பரிவொடு தமிழ்த்தேன் நல்கும்
தொன்னிலத் தமிழ்த்தென் னாட்டைத் தொழுகினம் றமை புகழ்கின் றேமால்.

### திருவள்ளுவர் வணக்கம்

தெள்ளுநீ ருலக மக்கள் செம்மையிற் சிறந்து வாழ
உள்ளவா றறங்கள் செய்தல் ஒண்பொருள் படைத்தல் இன்பங்
கொள்ளுதல் எனுமுப் பாலுங் கூறிவீ டுணர்த்துஞ் செம்மல்
வள்ளுவன் அடிமென் போதை வணங்குவாம் முடியின் வைத்தே.

---

க. பொருள் நூல்—உயர்ந்த கருத்துடைய நூல். நெஞ்சமலர்—நெஞ்சத் தாமரை.

உ. செய்யவாய்—சிவந்தவாய். கானிலம் = கால் + நிலம். தொட— பொருந்த.

## நூற் பெயர்

நடையிலும் புலவர்க் கீயு நலத்திலு நாடு காக்கும்
படையிலும் புகழ்ச்சி கொண்ட பாரிவேள் முதலாந் தீஞ்சொல்
தொடையணி பண்டை மன்னர் வாழ்க்கையைத் தொடுத்திந் நூற்குக்
**கொடைமன்னர் பனுவ** லென்னும் பெயரையாங் கொடுக்கின் றேமால். ௫

## நூல் செய்யக் காரணம்

மன்னருந் தமிழர்; ஆண்டு வாழ்ந்ததுந் தமிழ்நா(டு); ஆய்ந்து
பன்னிய மொழியும் வாழ்க்கைப் பாடலுந் தமிழே யாகும்
என்னுமிக் கருத்தாற் பண்டை யிலக்கியங் கண்டிஞ் ஞான்றை
**மன்பதை யறிய** அன்னார் வாழ்க்கையை விரிக்க லுற்றேம். ௬

## அவையடக்கம்

நெடுமனை நிழலிற் றங்கி நிலனுறு மணலாற் சிற்றில்
வடுவுற வகுக்கும் பேதைச் சிறுமியை வைவா ருண்டோ?
படுபயன் விரும்பும் மேலோர் பழித்துரை யாரென் றெண்ணி
அடிதொடை கல்லா யானும் நூலொன்றை அமைக்க லானேன். ௭

---

௬. மன்பதை--மக்கள்.

௭. வடு—குற்றம், படுபயன்—உண்டாகும் பயன்,

# கோடைமன்னர் மாண்பு*

## தமிழ்நாட்டுச் சிறப்பு

வானந் தண்டுளி பொழிதலிற் காரினும் வறளும்
வேனிற் போதினும் வளம்படப் பயிர்களை மீன்கண்
மானுஞ் சிற்றிடம் வெற்றிட மின்றியெவ் வயினும்
நானி லத்திடை வளர்ப்பது நற்றமிழ் நாடு. ௧

சேயர் தம்மரு கணுகியூ ணூட்டுநற் செவிலித்
தாயர் போன்றுபல் லுயிரையும் வளர்விக்குந் தண்ணந்
தூய காவிரி முதற்பல ஆறுகள் தொடர்ந்து
பாயப் பல்வளம் பெறுவது பழந்தமிழ் நாடு. ௨

மருவி ரிக்குமென் மலர்புனை கொடிச்சியர் மலையின்
அருவி யாடிமென் மயிலெனப் பரணிருந் தசைந்து
பருநெ டுந்தினைக் கதிரினைப் பற்றியுண் கிள்ளை
குருவி யோப்புநீள் குறிஞ்சியைக் கொண்டதந் நாடு. ௩

வரகுஞ் சாமையும் விளைத்துநால் வாய்பொரு புலிபோல்
இரும ருப்படல் ஏறுகள் தழுவியின் புற்று
மருவு கேண்மையான் மகளிரோ டாயர்கள் மகிழ்ந்து
குரவைக் கூத்தயர் முல்லையைக் கொண்டதந் நாடு. ௪

கழனி யெங்கணு நெற்கதிர் கற்றவர் ஒப்ப
அழகு றத்தலை பணிந்தபின் பரிந்துதைப் பொங்கல்
விழவ யர்ந்துவந் தில்வரு விருந்தினர்க் கூட்டும்
உழவர் வாழுநீள் மருதவைப் புடையதந் நாடு. ௫

தாளின் வாணிகர் தருவளங் களுந்தமிழ் மன்னர்
வாளி னாற்கொண்ட வளங்களும் மரக்கலத் திறங்கி
நீளி ருங்குவை உப்புமீன் முதலொடு நெருங்கி
நாளுந் தீர்வுறு நெய்தலைக் கொண்டதந் நாடு. ௬

---

* இவ்வரலாறு இந்நூற்குத் தோற்றுவாயாகக் கூறப்படுகிறது.

௧. வானம்—மேகம். கார—கார் காலம். மீன்கண் மானும் சிற்றிடம்—மீனின் கண் போன்ற சிறிய இடம். நானிலம்—குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல்.

௨. சேயர்—பிள்ளைகள். தண்மை—குளிர்ச்சி.

௩. கொடிச்சியர்—குறிஞ்சிநிலப் பெண்கள். ஓப்பும்—ஓட்டும்.

௪. நால்வாய்—யானையை. பொரு—கொல்லுகின்ற.

௫. கழனி—வயல். பொங்கல் விழவு—பொங்கல் திருநாள்.

௬. தாளின்—முயற்சியினால். நீளிருங்குவை—நீண்ட பெரிய குவியல்.

உண்டு தீர்க்கினும் ஒழிவுறா உணவையுங் கண்டு
கண்டு நீங்கினுங் கழிவுறாக் காட்சிகள் தமையுங்
கொண்டு கொண்டினுங் கொடுவெனக் குறுகுவார்க் கென்றும்
உண்டெ னத்தரும் வளத்தையும் உடையதந் நாடு. எ

முன்னந் தோன்றிய மொழிமட வார்க்குமுன் தோன்றிச்
சென்னி தாழ்த்திய வடமொழிக் கறிவுநூல் தெரித்துத்
தன்ம கார்களுக் கிசைதருங் கலையெலாஞ் சாற்றும்
அன்னை செந்தமிழ் அணங்கினைக் கொண்டதந் நாடு. அ

வடக்கில் வேங்கட மலையரண் கொண்டது ; மற்றைக்
குடக்குத் தெற்கொடு கிழக்கினின் மரக்கலங் கொண்டுங்
கடக்க ரும்பெருங் கடலரண் கொண்டது ; காவல்
நடத்தி நன்மைசெய் யரசரைக் கொண்டதந் நாடு. கூ

நிலங்க டந்துநீர் அலைகடல் கடந்துதந் நேரார்
புலம்பு குந்துபல் எதிர்படை அழிவுறப் பொருது,
வலம்பொ ருந்துதம் இசைநிறீஇ, வண்தமிழ் மொழிக்கு
நலம்பு ரிந்தபல் வேந்தரைக் கொண்டதந் நாடு. க0

குன்ற மன்னவெண் கொடிநெடு மாடங்கள் கொண்டங்
கொன்றெ னும்படி யாறெனப் பலதெரு வுடைய
வென்றி மன்னவர் நகர்களும் விளங்குபல் பதியும்
நன்று செய்யுநற் குடிகளுங் கொண்டதந் நாடு. கக

கற்பின் மேம்படு காரிகை யாரையுங் கற்றுப்
பொற்பு றுந்தொடை புனைந்தபல் புலவர்கள் தமையும்
இற்பி றந்திலார்க் கீந்தவர் தம்மையும் ஈன்று
நற்பு கழ்ச்சியும் உயர்ச்சியுங் கொண்டதந் நாடு. கஉ

பிறப்பி னாற்பெறூர் பெருமையை அறிவினாற் பெறுவர் ;
உறுப்பி லார்களும் உணர்வினல் உயர்வரென் றுரைக்கும்
அறத்தை மேற்கொளும் அறிஞரைக் கொண்டதந் நாடு, அங்
கிறப்பில் சீர்ப்பெருஞ் சித்திரன் முதற்பலர் இருந்தார். கங

---

அ. மொழிமடவார்—மொழிகளாகிய பெண்கள். அவை வடமொழி, இலத்தீன், ஈபுரு, கிரீக்கு முதலிய பழைய மொழிகள்.

கூ. குடக்கு—மேற்கு.

க0. நேரார—பகைவர். புறந்தர—புறமுதுகு கொடுத்தோட. பொருது—சண்டை செய்து. நிறீஇ—நிறுத்தி.

கக. ஒன்றெனும்படி—முன்னர்ப் பார்த்த தெருவும் பின்னர்ப் பார்த்த தெருவும் தோற்றத்தில் வேறு வேறு என்று பிரித்து உணர்தற் கிடனின்றி ஒன்றே என்று கண்டார் உணரும்படி. ஆறென—நீளத்திலும் அகலத்திலும் ஆறு போன்று. நன்று—நன்மை, அறம்,

கஉ. தொடை—செய்யுள்.

கங. இறப்பில் சீர்—அழிவில்லாத புகழ்.

பன்னலம்பெறும் பிசிருறை ஆந்தைபோற் பாரில்
இன்ப டைந்தவர் பற்பலர் எனினுமின் தமிழே
மன்னு செல்வமென் றெண்ணிப்பின் வறுமையைப் பெற்றுத்
துன்புற் றோர்களும் பற்பலர் சொல்லுதற் குளரே. கச

பெருஞ்சித்திரனார் வாழ்க்கை

அவர்க ளின்முனம் பகர்பெருஞ் சித்திர னறிஞன்
தவறி லாதவோர் அன்புடைத் தையலை மணந்து
பவழச் செவ்விதழ்ப் பைந்தொடித் தோணல நுகர்ந்து
கவலை யின்றிச்சில் சிறுவரைப் பெற்றனன் களித்தான். கரு

பின்னுஞ் சிற்சில பிள்ளையைப் பெற்றனன்; தந்தை
முன்னம் ஈட்டிய பொருளெலாந் துய்த்தனன்; முகமன்
பன்னி வேண்டிப்பெற் றான்பல பொருள்பிறர் பக்கல்;
இன்மைத் தீயினால் அவைகளும் எரிபட எய்த்தான். கசு

அவரன்னை வருத்தம்
(வேறு)

நூலை யொத்த கதுப்பினள் நோவொடு
கோலின் ஏகுங் கொடும்புற மெய்யினள்
காலனைத்திட்டிக் காயுந்தன் தாயொரு
பாலி ருந்து புலம்பிப் படருற, கஎ

மாச டுத்த உடுக்கையள் மண்ணுறு
பாசி லைப்பதம் ஆக்கிப் பரிவினோ(டு)
ஏசிப் பேசு மதலையர்க் கீபவள்
ஆசி லாத மனைவியல் லற்பட, கஅ

அவர் மக்கள் வருத்தம்

பாலி லாமற் பசுஞ்சேய் கதற, எக்
கால முங்கஞ்சி கஞ்சியென் றேபலர்
சாலப் பன்னித்தந் தாயின் மடியினும்
மேலி னும்படி மீதும் விழுந்தழ, கசு

கச. பிசிருறை ஆந்தை—பிசிராந்தையார். பிசிர் ஓரூர்.

கரு. பவழச் செவ்விதழ்—பவழம் போன்ற சிவந்த உதடு.

கசு. ஈட்டிய—தேடிய. முகமன்—இன்சொல். இன்மைத்தீ—வறுமையாகிய நெருப்பு.

கஎ. கதுப்பு—(நரைத்த) கூந்தல். கோல்—ஊன்று கோல். கொடும்புறம்—வளைந்த முதுகு.

கஅ. மாசு—அழுக்கு. உடுக்கை—சீலை. பாசிலைப்பதம்—பசுமையான இலையாலாகிய உணவு. ஆசு—குற்றம்.

கசு. சால—மிக. படிமீதும்—நிலத்தின் மீதும்.

## பெருஞ்சித்திரனார் வருத்தம்

உடல் தளர்வுற, உள்ளங் கவலுற,
இடரின் மூழ்கினன் இன்றமிழ் வல்லனும்.
மிடியெ னுந்தெவ்வை வெல்வதெவ் வாறெனப்
படிறி லாதவன் பற்பல எண்ணினான். உ0

புலங்கந் தாகப் புரவலர் பாலடைந்
திலமென் றோதுவார்க் கீபவர் எண்ணிலர்
பலரைப் போன்று பரிசில் கொள்வாமென
இலம்ப டும்புல வன்மனத் தெண்ணினான். உக

## அதியமானிடம் பரிசில்பெறல்

வள்ளல் வேனெடு மானுழைச் சென்றனன்.
கொள்கென் றம்பொன் கொடுத்திடக் கொண்டனன்.
பள்ளத் தேசெலு நீரிற் படர்ந்தடைந்
துள்ளு வப்பவெல் லாரையு மூட்டினன். உஉ

## வெளிமானிடஞ் செல்லுதல்

பொன்ன ழிந்தபின் இன்மை புகுதர
மன்ன வன்வெளி மானிடம் போயினன்.
இன்னல் எய்தி இறப்பவன் தம்பியை
முன்ன ழைத்திடு கென்று மொழிந்தனன். உங

## குமணனிடஞ் செல்லுதல்

அறிவ ளந்தளி யாம லவற்கவன்
சிறித ளிப்பச் சினந்துகொள் ளாமனீள்
நெறிந டந்து நெடுங்கல் முதிரம்போய்
வறிய வர்க்கிடும் வள்ளலைச் சார்ந்தனன். உச

---

உ0. கவல்—கவலை. மிடியெனுந் தெவ்வை—வறுமையாகிய பகையை. படிறு—வஞ்சகம்.

உக. புலங்கந்தாக—அறிவு தனக்குப் பற்றுக்கோடாக. புரவலர்—அரசர்கள். இலம்—பொருளில்லேம். இலம்படும் புலவன்—வறுமை கொள்ளும் பெருஞ்சித்திரன்.

உஉ. நெடுமான்—அதியமான் நெடுமான் அஞ்சி.

உங. இன்மை—வறுமை. இறப்பவன்—இறக்கும் நிலையிலிருந்த அவ் வெளிமான். இடுக என்று—பரிசில் கொடுக்க என்று.

உச. அறிவு அளந்து—கல்வியறிவின் உயர்வை அளந்து தெரிந்து. கொள்ளாமனீள்=கொள்ளாமல்+நீள். நெடுங்கல் — உயர்ந்த மலையாகிய.

(வேறு)

மாரியுமெய் வெளிறமிக வரும்புலவர்க்
குவகையொடு வழங்கும் வள்ளல்
பாரிமுத லாப்பகரும் பார்மன்னர்
எழுவரும்விண் படர்ந்தார். இன்று
சீரியைந்த செந்தமிழ்நூல் தெரிந்தாருக்
களிக்குமுனைத் தேடி வந்தேன்.
கூரியைந்த வேற்குமண கொடுக்கவென
முரசெனும்பாக்* கூறி னேனே. உரு

சொன்னயமும் பொருணயமுந் தொடைநயமும்
மிகப்பொலியுந் தொடையைக் கேட்டு
மன்னவனுள் ளங்குளிர்ந்தான் ; வண்டமிழ்ப்பா
வலனுடைய வன்மை கண்டான் ;
இன்னடிசில் நன்கருத்திச் சின்னாளிங்
கிருக்கவென இருத்திச் சீரசால்
தென்மொழிநூல் நயங்கேட்டுந் திறங்கேட்டும்
பொருள்கேட்டுந் திளைத்தான் இன்பம். உசு

---

* முரசுகடிப் பிகுப்பவும்............... ..
பறம்பிற் கோமான் பாரியும் பிறங்குமிசைக்
கொல்லி யாண்ட வல்வி லோரியும்
காரி யூர்ந்து பேரமர்க் கடந்த
மாரி யீகை மறப்போர் மலையனும்
ஊரா தேந்திய குதிரைக் கூர்வேல்
கூவிளங் கண்ணிக் கொடும்பூ ணெழினியும்
ஈர்ந்தண் சிலம்பி னிருள்தூங்கு நளிமுழை
அருந்திறற் கடவுள் காக்கு முயர்சிமைப்
பெருங்க லடன் பேகனுந் திருந்து மொழி
மோசி பாடிய ஆயும் ஆர்வமுற்று
உள்ளி வருநர் உலைவுநனி தீரத்
தள்ளா தீயுந் தகைசால் வண்மைக்
கொள்ளா ரோட்டிய நள்ளியு மெனவாங்கு
எழுவர் மாய்ந்த பின்றை யழிவரப்
பாடி வருநரும் பிறருங் கூடி
இரந்தோ ரற்றந் தீர்க்கென விரைந்திவண்
உள்ளி வந்தனன் யானே..........குமண. (புறம். 158)

உரு. மாரியும் மெய்வெளிற குமணன் கொடையைக் கண்டு கொடையிற் சிறந்த மேகமும் தன் கொடை சிறிதென்றெண்ணி நாணிப்(பெய்த பின்) உடம்பு வெளுக்க.

உசு. தொடைநயம்—மோனைத் தொடைமுதலிய தொடைகளின் நயம். தொடை—செய்யுள். அடிசில்—உணவு.

பெற்றெடுத்த பெருங்கிழவி யின்னலையும்
பிள்ளைகள்தம் பீழை யோடு
சிற்றிடைகொள் தன்மனைவி துயரினையும்
இரு தொடையால்* தெரியக் கூறி
வெற்றிநெடு வேற்குமண விரைந்தளித்து
விடுக்கவென வேண்டிப் பின்னும்
முற்றியவெண் மருப்பொருத்தல் தருகவென
நீண்டெனும்பா† மொழிந்து நின்றான். உஎ

தொடுத்ததமிழ்ப் பாடல்களைச் சொலுந்தொறுமன்
னவன்கேட்டுத் துயரம் எய்தி
மிடித்துயரை அகற்றநினைந் தருகிருத்திப்
பன்மணியு மின்னும் பூணும்

---

* வாழு நாளோ டியாண்டுபல உண்மையிற்
தீர்தல் செல்லாதென் உயிரெனப் பலபுலந்து
கோல்கா லாகக் குறும்பல வொதுங்கி
நூல்விரித் தன்ன கதுப்பினள் கண்டுயின்று
முன்றிற் போகா முதிர்வினள் யாயும்
பசந்த மேனியொடு படரட வருந்தி
மருங்கிற் கொண்ட பல்குறு மாக்கள்
பிசைந்துதின வாடிய முலையள் பெரிதழிந்து
குப்பைக் கீரை கொய்கண் ணகைத்த
முற்றா விளந்தளிர் கொய்துகொண் டுப்பின்று
நீருலை யாக வேற்றி மோரின்று
அவிழ்ப்பத மறந்து பாசடகு மிசைந்து
மாசொடு குறைந்த வுடுக்கையள் அறம்பழியாத்
துவ்வா ளாகிய என்வெய் யோளும்
என்றாங்கு,
இருவர் நெஞ்சமு முவப்ப.....................
......................... . ... கூர்வேற் குமண
அதற்பட அருளல் வேண்டுவல் விறற்புகழ்
வசையில் விழுத்திணைப் பிறந்த
இசைமேந் தோன்றல் நிற்பாடிய யானே. (புறம். 159)

புறம் 160-ஆம் செய்யுளையுங் காண்க.

† நீண்டொலி.......................................
பனைமருள் தடக்கையொடு முத்துப்பட முற்றிய
உயர்மருப் பேந்திய வரைமருள் நோன்பகடு
ஒளிதிக ழோடை பொலிய மருங்கில்
படுமணி யிரட்ட ஏறிச் செம்மாந்து
செலனசைஇ யுற்றனன் விறல்மிகு குரிசில் (புறம். 161)

உஎ. பீழை—துன்பம். சிதைவினையும்—வருத்தத்தையும். மருப்பு ஒருத்தல்—தந்தத்தையுடைய யானை.

உடுக்கைகளும் படுக்கைகளும் உண்கலமும்
நன்பொருளும் உவப்ப நல்கி
மிடுக்குடைய மதகரியுங் கொள்கவெனக்
கொடுத்தவற்கு விடையுந் தந்தான். உஅ

மீளல்

பொருள்களெடுத் தேவலர்கள் வழிநடக்க
விடைகொண்டு புலவன் பெற்ற
இருமருப்பு மால்களிற்றில் இவர்ந்திளைய
வெளிமானூர்க் கேகி மாவை
மருவிரிக்குங் கடிமரத்திற் பிணித்தவனை
அடைந்திஃதெம் பரிசில் மற்றென்(று)
இரவலரென் னுந்தொடையை* யியம்பியிறு
மாந்தவிழ்த்தூர்ந் தேகி னூர். உகூ

பிற்கால வாழ்க்கை

முன்னனுகி யென்கொணர்ந்தாய் என்கொணர்ந்தாய்
ஐயவென மொழியும் மக்கட்
கென்னுமக்கு வேண்டுவன எனவினவித்
தழுவியழைத் தில்ல மேகிப்
பொன்முதலாம் பொதியிறக்கி அவைகாட்டி
யாவருக்கும் புரிந்து நல்கி
அன்புடையாய் கொடுத்தார்க்கும் அல்லார்க்குங்
கொடுக்க வென்றான் அரிவை மாட்டே† ௩0

---

* இரவலர் புரவலை நீயு மல்லை
புரவலர் இரவலர்க் கில்லையு மல்லர்
இரவல ருண்மையுங் காணினி இரவலர்க்கு
ஈவோ ருண்மையுங் காணினி நின்னூர்க்
கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த
நெடுநல் யானையெம் பரிசில்
கடுமான் றோன்றல் செல்வல் யானே. (புறம். 162)

உஅ. மிடித்துயர்—வறுமையினாலேற்பட்ட துன்பம். மிடுக்கு—வலிமை.

உகூ இவர்ந்து—ஏறி. மாவை—யானையை. கடிமரம்—காவல்மரம். பிணித்து—கட்டி.

௩0. † நின்னயந் துறைநர்க்கு நீநயந் துறைநர்க்கும்
பன்மாண் கற்பினின் கிளைமுத லோர்க்கும்
கடும்பின் கடும்பசி தீர யாழநின்
நெடுங்குறி எதிர்ப்பை நல்கி யோர்க்கும்
இன்னோர்க் கென்னாது என்னொடுஞ் சூழாது
வல்லாங்கு வாழ்து மென்னாது நீயும்
எல்லார்க்குங் கொடுமதி மனைகிழ வோயே
பழந்தூங்கு முதிரத்துக் கிழவன்
திருந்துவேற் குமணன் நல்கிய வளனே. (புறம். 163)

மக்களனை வரும்விளங்கப் பட்டுடுத்துக்
கலன்பூட்டி மகிழ ஊட்டி
ஒக்கலனை வரும்புகழப் பலகொடுத்தாள்;
மிடிக்கவலை ஒழித்து வாழ்ந்தாள்.
தக்கபெருஞ் சித்திரனுங் கிளையொடுவாழ்ந்
தான்.முன்போல் தமிழ்நூல் ஆய்ந்தான்.
மிக்கசுவை தருந்தமிழை மக்களனை
வருங்கற்று மேன்மை யுற்றார். ௩க

நற்றமிழை நனிவளர்த்து நானிலத்தை
வளம்படுத்தி நன்மை யோங்கக்
குற்றமுழு துங்குலையக் கோலோச்சி
மேலோர்க்குக் கொடுத்தெஞ் ஞான்றும்
நிற்குமிசை படைத்த மன்னர் எழுவரையும்
சித்திரன்பண் டவர்க்கு நேராம்
கொற்றவனற் குமணனிடங் கூறியபாட்
டின்முறையிற் கூறல் உற்றேன். ௩உ

ஆகச்செய்யுள். ௩௨

---

௩க. ஒக்கல்—சுற்றத்தார். மிடி—வறுமை. சுவை—எணசுவை.

௩உ. கோல் ஓச்சி—செங்கோல் செலுத்தி. அவர்க்கு நேராம்—அம் மன்னவர்களுக்கு ஒத்தவனாகிய. பாட்டு முரசு கட்டிப்பிகுப்பவும் என்ற புறநானூற்று 158-ஆம் பாட்டு. 25-ஆம் பாட்டின் குறிப் புரையிற் காண்க.

# க. வள்ளல் பாரி வரலாறு

## பறம்புநாட்டு வளம்

மலர்புனை கூந்த லாரும் மைந்தரு மன்னன் தானும்
நலமலி அறநூல் கூறும் நன்னெறிச் செல்லு மாற்றால்
உலகினிற் பெயினும் பெய்யா தொழியினும் வானம பெய்யப்
பலபொருள் விளைவித் தாக்க மிகுப்பது பறம்பு நாடு. க

கனிகளும் காயுந் தாங்கிக் காவெலாம் மரங்கள் நிற்கும்.
பனிமலர் விரித்து நன்கு பசுங்கொடி செடிகள் தோன்றும்.
தினைவர கிறுங்கு மற்றுஞ் செல்லிடந் தோறும் ஓங்கும்.
இனிதினுண் டாவு மாவும் பறவையும் இயங்கும் எங்கும். உ

வரைவிளை யாடுங் கல்லில். மான்விளை யாடும புல்லில்.
விரைவிளை யாடும் பூவில். வீவிளை யாடும் காவில்.
திரைவிளை யாடும் வாவிச் சேல்விளை யாடும். ஆவின்
நிரைவிளை யாடுங் கன்று நினைந்தழைத் திடுமுன் சென்று. ௩

நாட்டினுக் கணியா யோங்கி நலந்திகழ் அருவி நீரால்
வேட்டுணும் வெதிர்நெல் வள்ளி வேர்ப்பல வெங்கு மாக்கும்;
கோட்டுறு சுவைத்தே னல்கும்; குளிர்மலர்ச் சுனைகள் கொண்டு
பாட்டினிற் புலவர் பாடப் புகழ்கொளும் பறம்பு வெற்பே. ச

## குடிவளம்

பல்வளம் பொருந்தங் நாட்டுப் பழிப்பிலூர் முந்நூ றென்ப.
சொல்லுமவ் வூரில் வாழ்வார் தூயர்;செந் தமிழ்நூல் வல்லார்;
செல்வமிக் குடையார்; ஈவார்; திறைமுன மளக்கு நீரார்;
வில்லக விரல்போல் ஒன்றி வெம்பகை இன்றி வாழ்வார். ரு

---

க. கூந்தலாரும்—கூந்தலையுடைய பெண்களும். மைந்தரும்—ஆண்களும். வானம்—மேகம. ஆக்கம்—செல்வம்.

உ. கா—சோலை. இறுங்கு—ஒருவகைச் சோளம். ஆவும் மாவும்—பசுக்களும் விலங்குகளும்.

௩. வரை—மூங்கில். விரை—மணம். வீ—பூ, புள். திரை—அலை. ஆவின் நிரை—பசுக்கூட்டம். (எழுவாய்)

ச. வெதிர்நெல்—ஒருவகை மூங்கில்நெல். வள்ளி—வள்ளிக்கிழங்கு.

ரு. திறை—வரிப்பொருள். வில்லக விரல்போல்—வில்லைப்பிடித்த கைவிரல்களைப்போல்.

உழுதொழில் புரிவார் பல்லோர் ; ஊர்தொறும் நாடு தோறும்
பழுதில்பல் பண்டங் கொண்டு பகருவார் பல்லோர் ; பன்னூல்
தொழுபவர்க் குரைப்பார் பல்லோர்; தொடுபடை பயில்வார் பல்லோர்;
இழிதொழில் விலக்கி யாரும் இயற்றுவார் நலமே யெங்கும். ௬

நாட்டினுக் காக்கந் தேடு நல்லவ ரல்லா லில்லை
பாட்டுடைத் தமிழுக் கேற்றம் பகர்பவ ரல்லா லில்லை
வாட்டொழின் மன்னன் கூறும் வழிநடப் பவரே யல்லால்,
வீட்டினின் மறைந்து தூற்றும் வீணரங் கெவரு மில்லை. ௭

ஊணடு புகையே அன்றி ஊர்சுடு புகையைக் காணார்.
பாணருக் கிடுவ தன்றிப் பருகுசின் னீரு மேலார்.
மாணெழின் மங்கை கண்ணும் வாளிகட் குடைவ தன்றிப்
பூணணி மைந்தர் மாற்றார் பொருபடைக் குடைந்து மீளார். ௮

## இறைமாட்சி

சிறந்தபல் பொருளும் ஒன்று சேருமென் பதுமெய் போலும்.
பறம்பையும் அதன்கண் வாழும் பல்குடி களையும் என்றும்
மறந்தொரு தீதும் எண்ணா மனத்தினன் வள்ளல் பாரி
அறந்திறம் பாமற் காக்க அவண்பிறந் தரச னானான். ௯

புன்னகை காட்டுஞ் செவ்வாய்; பொருதிறங் காட்டுந் திண்டோள்;
இன்மொழி காட்டும் பேரன்(பு); இரக்கமே காட்டு நெஞ்சம்;
தென்மொழி அறங்கள் காட்டுந் தேர்ந்துசெய் செயல்க ளெல்லாம்.
மன்னவன் குடையில் வாழ்ந்தார் மாணறம் புரிந்தா ரம்மா. ௧௦

இறையவ னெனினுங் காட்சிக் கெளியவன்; வணங்கி மாந்தர்
முறையிடின் மொழியி னாய்ந்து கோலென முடிவு சொல்வான்;
மறைவினிற் பிறர்பொன் வெளவி வன்கொலை புரிந்தா ரேனும்
சிறையிடான்; கொல்லான்; சொல்லால் உதவியால் திருத்து வானால். ௧௧

---

௬. பகருவார்—விற்பார்கள். தொழுபவர்—வணங்கிப் பாடங்கேட்கும் மாணவர். தொடுபடை—தொடுத்து எய்யும் படைக்கருவிப் பயிற்சி.

௭. வாட்டொழின் மன்னன் = வாள் + தொழில் + மன்னன்.

௮. ஊண்அடு புகை—உணவு சமைத்தலாலேற்படும் புகை. ஊர்சுடு புகை—பகைவர் தம்மூரைச் சுடுதலால் ஏற்படும் புகை. கண்ணும் வாளி—கண்களாகிய அம்பு. மாற்றார்—பகைவர்.

௯. திறம்பாமல்—தவறாமல்.

௧௦. புன்னகை—புன்சிரிப்பு.

௧௧. ஆய்ந்து—ஆராய்ந்து. கோல்—தராசுக்கோல், செங்கோல்.

நெல்லுயி ரெனினுந் தூய நீருயி ரெனினு மாகா;
அல்லலைத் தவிர்க்கு நல்வேந் தனைவர்க்கும் உயிராம் என்ப,
பல்படை முதலா மாறும் பார்மன்னர்க் குயிரா மேனும்
நல்லறி வுடையார் தாமே உயிரென நட்டு வாழ்வான். கஉ

அருந்தமிழ்த் துறைகள் கற்றுய்ந் தடங்கிய புலவர் தன்பால்
வருந்தொறு முகமு நெஞ்சு மலர்ந்துரை யாடிப் பக்கத்(து)
இருந்துண வூட்டிப் பொன்னு மிலகுபட் டுடையு மீவான்.
பரிந்திசை பாடி யாடும் பாணர்க்கு முவந்தீ வானால். கங

## கோயில்

கருவுறு பிறப்பில் லாத கடவுளை மனத்தி லெண்ணி
அருவென வணங்கு வார்தங் கொள்கையை யறிவு றுத்துந்
திருவம ருருவங் கொண்ட திகழ்பெருங் கோயி லொன்று
பெருவிருப் பினிற்ச மைத்தான் றன்னரும் பெயரி னானே.* கச

## இல்லாள்

கற்பினுக் கரசி பொன்னங் காரிகை கற்ற செல்வி
நற்குண முடையாள் நல்லாள் எனும்பெயர் புனைந்த நங்கை
கொற்றவன் துணைவி யானாள்; வாழுநாள் குவளை உண்கண்
பெற்றனள் மகவி ரண்டு பிறையென வளர்ந்தார் அன்னார். கரு

## மக்கள் வாழ்க்கை

துடியிடைச் செவிலித்தாயர் தோள்களில் வளர்ந்தார் அன்னார்
மடியினில் வளர்ந்தார்;செங்கை மலரினில் வளர்ந்தார்; மெல்லப்
படியினில் தவழ்ந்தார்;பாவை பந்தொடுங் களித்தார்;பொன்னங்
கொடியென நடந்தார்.வாயாற் குதலைகள் மொழிந்து வாழ்ந்தார். கசு

தொக்கபல் மலர்கள் இல்லாச் சோலைபூஞ் சோலை யாமோ?
தக்கவர் இல்லா மன்றம் மன்றெனத் தகுவ தேயோ?
மிக்கொளிர் மதிய மில்லா விசும்பெழில் விசும்ப தாமோ?
மக்களை யில்லா நீடு மனைகளும் மனைக ளாமோ? கஎ

---

* "இந்நாட்டு அறுநூற்றுவனேரிப்பற்றில் பாரீச்சுவரமும்" பிரான் மலைக் கல்வெட்டு.

கஉ. பல்படைமுதலாம் ஆறு. படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்பன. நட்டு—நட்புச் செய்து.

கங. இலகு—விளங்குகின்ற.

கச. உருவம்—இலிங்கவடிவம். சமைத்தான்—கட்டிமுடித்தான்.

கரு. துணைவி—மனைவி. குவளையுண்கண்—குவளைமலர் போன்ற மை தீட்டப்பட்ட கண்களையுடைய அம்மங்கை

கஎ. மன்றம்—நீதிமன்றம்.

## கல்வி பயிற்றல்

அங்கவை சங்க வையென் றவர்க்கர சன்பே ரிட்டான்
திங்களின் முகங்கள் கண்டுந் தீஞ்சுவை மழலை கேட்டும்
பொங்கிய மகிழ்ச்சி கொள்வான்; புலவரால் தமிழ்கற் பிப்பான்.
நங்கையர்க் கியாழ்கற் பிப்பான். இருவரும் பயில்வார் நன்கே.

இருவரும் ஏக லாலே எழிலுறு மரமார் சோலை.
பெருமையை யெய்தும் பொய்கை பிணையனார் மூழ்க லாலே.
மருமலர் வனப்பை யெய்தும் வார்குழற் கணித லாலே.
பொருவறு செம்பொற் பூணும் பூணலின் மிகுபொற் பெய்தும். ௧௯

## கான்வளங் காணல்

(வேறு)

காரினில் வளம்பெறு கானங் காணுவான்
பாரிமன் னவனெனிப் பரிமுன் பூட்டிய
தேரிவர்ந் தனன்றனிச செலுத்தி னன்;உருள்
பாரினிற் செலவுளைப் பரிப றந்ததே. ௨0

சென்னெறி யினிற்பொலந் தேர்செ லுந்தொறுந்
தன்னிரு மருங்கினுந் தருக்கு செல்வரில்
நென்னிமிர்ந தழைகொடு நிற்றல் நோக்கியும்
கன்னலை நோக்கியுங் களித்துச் சென்றனன். ௨௧

இன்னிசை குழலிடை யெழுப்பி முன்னுறப்
பன்னிறத் தானையும் படர்வித் தாய்மகன்
பின்னுறல் கண்டுதேர் நிறுத்திப் பேரருள்
மன்னவன் விடுத்தனன் மகிழ்ந்து பையவே. ௨௨

பிரிந்ததங் காதலர் பிறங்கு தேரெனத்
தெரிந்தவர் முறுவலின் திகழ்தல் போலவெள்
ளரும்பொடு விளங்கின முல்லை யங்கொடி
திருந்துதேர் அரசொடு தம்முன் சேரவே. ௨௩

௨0. காணுவான்—காண்பதற்கு. உருள்—சக்கரம். பரி—குதிரை.
௨௧. சென்னெறி=செல்+நெறி. நென்னிமிர்ந்து=நெல்+நிமிர்ந்து. தருக்கு—செருக்கடையும். கன்னல்—கரும்பு.
௨௨. பல்நிறத்து ஆனையும்—பல நிறங்களையுடைய பசுக்களையும். ஆய் மகன்—இடையன்.
௨௩. தெரிந்தவர்—தெரிந்த பெண்கள். முறுவல்—புன்சிரிப்பு,

மறிதிரைக் கடற்செலும் மரக்க லத்தினில்
வெறிகமழ் கானிடை வேந்தன் தேர்செலப்,
பொறியளி பாண்செயும்; பூவை வம்மெனும்;
செறிமரம் விரிமலர் சிதறி நிற்குமே. உச

கருமுகிற் பெயல்பெறு கானம் பொற்பொடும்
உருவொடுங் கிளையொடும் உயர்ந்து தேடிய
பொருள்பெறு பெருங்குடி போல நிற்பதை
அருளுடை அண்ணல்கண் டகம கிழ்ந்தனன். உரு

வெடித்திடம் பெயர்ந்தன மிதந்து போந்தன
அடுத்தடுத் தவண்விழும் அளவில் வித்தினம்
படித்தலை முளைத்தெழும் பயிர்கள் பச்செனக்
குடிக்கிளஞ் சிறுவரிற் குலவக் கண்டனன். உசு

வெண்மலர் ஒருபுடை விளங்கப், பொன்னிறத்(து)
ஒண்மலர் ஒருபுடை ஒளிரக், கார்நிறக்
கண்மலர் ஒருபுடை கவினக் கண்டனன்.
தண்மையும் மணமுமங் குவகை தந்தவே. உஎ

உலகினின் மலரினும் உயர்ந்த துண்டுகொல்?
நலமிகு உடல்பெறு நங்கை யர்க்கெலாம்
கலமிகப் புனைந்துடை கட்டின் முற்றுமோ
மலர்புனை யாவிடின் வனப்பென் றெண்ணுவான் உஅ

தேனனி உண்டளி திரியக் கண்டனன்;
ஏனைய புட்களும் இயங்கக் கண்டனன்;
மானின மாவினம் வாழக் கண்டனன்;
கானுறை உயிரெலாங் களிக்கக் கண்டனன். உகூ

---

உச. வெறி—மணம். கானிடை—காட்டில். பொறியளி—புள்ளிகளையுடைய வண்டுகள். பூவை—நாகணவாய்ப்புள். வம்மெனும்—வருக என்றழைக்கும்.

உசு. இடம்பெயர்ந்தன—இடம்விட்டு இடம்பெயர்ந்து சேர்ந்த விதைகள். மிதந்து போந்தன—நீரில்மிதந்து சேர்ந்த விதைகள். படித்தலை—நிலத்தில். சிறுவரில்—சிறுகுழந்தைகளைப்போல.

உஎ. கண்மலர் = கள் + மலர்—தேனையுடையமலர்.

உஅ. கலம்—அணிகலம். முற்றுமோ—முற்றுப்பெறுமோ. நங்கையர்க்கெலாம் மலர்புனையாவிடின் வனப்பு கலமிகப் புனைந்து உடை கட்டின் முற்றுமோ என இயைக்க.

உகூ. அளி—வண்டுகள். மாவினம்—விலங்குக் கூட்டம்.

பொன்கொடுப் பார்முனம் பொலியும் மாதரில்
நன்மணம் விரித்தலர் நன்கு தோன்றுவ;
இன்னிசை வண்டுகண் டேமுற் றேகுவ;
மன்னவன் அறிந்தனன் மலரின் சூழ்ச்சியை. ௩௦

இளநல மடந்தையர் எயிறு வெளவியும்
வளர்நெடுங் கூந்தலின் கருமை வெளவியும்
குளிர்முகை கனியெனக் கொண்டு மற்றிவை
களவெனக் காட்டுபைங் களவைக் கண்டனன். ௩௧

மக்கடம் முதியரை மகிழ்ந்து தாங்கலில்
தொக்கவீ ழாலினைச் சுமக்கக் கண்டனன்;
பக்கமே சென்றனன்; அதனைப் பார்த்தனன்;
மிக்ககன் றிருள்பட விரிந்து நின்றதே. ௩௨

தலைமிசைப் பழக்குலை தாங்கி ஊணெமக்(கு)
இலையெனின் ஈபவர் ஏய்ப்ப; மண்ணிடை
நிலைபெறு வாழையை நேரிற் கண்டனன்;
கலைகள்கொண் டுண்ணவுங் கண்டு சென்றனன். ௩௩

புனல்செலும் நெறியினிற் பூக்கள் செல்ல,மீன்
இனமயில் வேலென எதிர்ந்து கீழ்ச்செல,
அனமகிழ்ந் தாடுசிற் றாறு கண்டனன்;
மனமகிழ்ந் துய்த்தனன் பரியை மன்னவன். ௩௪

கரியென எதிருறு கருங்கல் தோன்றுமால்.
பரியெனக் கரிவிடு கழைகள் பாயுமால்.
அரிவையிற் களிமயில் அகவி ஆடுமால்.
குரிசில்கண் டடைந்தனன் கானின் கோடியே. ௩௫

---

௩௦. பொலியும்—விளங்கும். மாதரில்—விலைமகளிரைப்போல.

௩௧. வெளவியும்—கவர்ந்தும். களவு—(i) களவுப் பொருள் (ii) களாச் செடி.

௩௨. மக்கடம் முதியரை + மக்கள் + தம் + முதியரை. முதியரை—முதிய பெற்றோர்களை. தாங்கலில்—சுமப்பதைப்போல.

௩௩. ஊண்—உணவு. ஈபவர் ஏய்ப்ப—கொடுப்பவர்களைப்போல. கலைகள்—குரங்குகள்.

௩௪. மீன் இனம்—மீன் கூட்டம். அயில்வேலென—கூரிய வேலைப் போன்று. அனம்—அன்னம் என்பதன் இடைக்குறை,

௩௫, கழைகள்—மூங்கில்கள்,

## முல்லையைக் காணல்

மெல்லிதழ்க் கருவிளை விழிகண் ணீர்விடப்,
புல்லிவண் காந்தள்கை மறித்துப் போற்றவும்
சொல்லருந் துயரொடு வீழ்ந்து சோர்வுறும்
முல்லையைக் கண்டனன்; முகம்பு லர்ந்தனன். ௩௬

செல்பரி நிறுத்தினன்; சிறிது நோக்கினன்.
பல்லினைத் திறந்தெனைப் பார்க்க; பார்த்தென(து)
அல்லலைத் தவிர்க்கவென் றடிவ ணங்கல்போல்
முல்லைவெண் முகையொடு முன்கி டந்ததே. ௩௭

குறிப்பறிந் தீபவன் குறையை முல்லைதன்
உறுப்பினில் நிலங்கிடந் துணர்த்தக் கண்டனன்.
மறுத்திடா ததனைமுன் மாற்ற எண்ணினன்.
பிறப்புடை உயிர்க்கெலாம் பீழை பீழையே. ௩௮

தேரினின் றிழிந்தனன்; சென்று நோக்கினன்;
மாரியிற் பொலிவது வாட்டங் கொள்ளுமால்;
தேரிடின் ஊறிதற் கியாருஞ் செய்திலர்;
பாரிடைக் கிடப்பது படர்கொம் பின்மையே. ௩௯

மன்னவன் இவனென வழியில் தான்படும்
இன்னலைக் காட்டிய இதனுக் கென்பொருள்
தன்னைமற் றீவது தகுதி யாமென
உன்னினன் இரப்பவர்க் குயிரும் நல்குவான். ௪0

## தேரீதல்

படர்வதற் காமிது; பகல வன்செயும்
இடர்தவிர்த் தருநிழல் ஈயும் என்று, பூட்(டு)
அடலுடைப் பரியவிழ்த் தருகு சேர்த்தனன்
கொடியையத் தேர்மிசைக் கொளுவி னனரோ.* ௪௧

---

௩௬. விழிகண்ணீர்—(i) மலர்களாகிய விழிகள் கண் ணீரை விட. (ii) விழி போன்ற மலர் கள்ளாகிய நீரை விட. புல்லி—அணைத்து. கை—கை போன்ற பூ. மறித்துப் போற்றவும்—அசைத்துத் தடுத்துப் பாது காக்கவும். ௩௭. முகை—அரும்பு.
௩௮. பீழை பீழையே—துன்பம் துன்பஞ் செய்யுந் துன்பமல்லவா?
௩௯. மாரியில்—கார்காலத்தில். ஊறு—இடையூறு.
௪0. உன்னினன்—நினைத்தான்.
௪௧. அடலுடைப் பரி—வலிமையையுடைய பரியை.

* பூத்தலை யறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி. (புறம். 139)

உறுபொருள் கைவர உவகை மீக்கொளும்
வறிஞனை நிகர்த்தது ; மண்ணெ லாம்புகழ்
அறிவுடை அண்ணல்பா லாடித் தேர்பெறு
விறலியும் நிகர்த்ததவ் வீகொள் முல்லையே. ௪௨

ஓரறி வுயிர்க்குமீ துதவு வானெனின்
பேரறி ஞர்க்கெவை பெட்பின் ஈவனோ ?
பாரியின் வண்மையைப் பகர்வம் நாமெனக்
காரிடித் தேகுமால் கானம் எங்குமே. ௪௩

## மீளல்

குதிரையில் இவர்ந்தனன் கோமகன். பழம்
முதிர்பெருங் கானகந் தாண்டி முத்தளித்(து)
அதிர்தரும் அருவிவீழ் அடுக்கல் சேர்ந்துநீள்
மதிலுறு தன்னெடு மாட மீண்டனன். ௪௪

## மக்கள் பாராட்டுதல்

என்னைகொல் ? தேரொடும் இவுளி தன்னொடும்
மன்னவன் ஏகினன் ; மாவின் மீண்டனன் ;
சென்னெறி தன்னிலத் தேரச் சிற்றதோ ?
அன்னதென் உற்றதென் றையுற் றார்பலர். ௪௫

பற்பலர் கூடினர் ; பார்த்து நின்றனர் ;
சிற்சிலர் மன்னவன் திருமுன் சேர்ந்தனர் ;
கொற்றவ மீண்டனை குதிரை மீது. தேர்க்(கு)
உற்றதென் ? எங்குள தென்று சாவினர். ௪௬

கானிடை யுளதது ; கலங்கன் மின். மிகு
தேனிவர் நறுமலர்ச் செழுமுல் லைக்கொடி
தானிவர்ந் தேறிடத் தாங்கும் என்றனன்
வானருந் தேர்பெறு மாண்பின் வேந்தனே. ௪௭

---

௪௩. பெட்பின்—விருப்போடு. வண்மை—கொடை. கார்—மேகம்.

௪௫. என்னைகொல்—யாது காரணம். இவுளி—குதிரை. மா. குதிரை.

௪௬. உற்றதுஎன்—நேரிட்ட இடையூறு யாது? உசாவினர்=வினவினர்.

௪௭. கலங்கன்மின்—மனக்கலக்கம் கொள்ளாதீர்கள். வானருந் தேர்பெறு மாண்பின் மன்னவன் என்றது, “புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின், வலவ னேவா வான வூர்தி, எய்துப” என்பது கருதி.

கொடைமடம் பட்டனன் கோனென் றெண்ணினர்.
படைமடம் பகையிடம் படலின் மள்ளரும்
நடைமடம் படுதலி னாட்டு மாந்தரும்
பெடைமட மயிலெனும் பெண்டிர் யாவரும். ௪௮

கோயிலை யகன்றனர்; குளிர்கொள் கானகம்
போயினர்; நாடினர்; பொலியுந் தேரினை
ஆயிடைக் கண்டனர்; அதனின் முல்லைமேல்
தாயிலங் குவதையுஞ் சார்ந்து கண்டனர். ௪௯

இல்லவர்க் கீந்தனன் செல்வம்; இன்றமிழ்
வல்லவர்க் கீந்தனன் வளங்கொ ளூர்பல;
வில்லவர்க் கீந்தனன் வேலும் வாள்களும்;
முல்லைக்கும் ஈந்தனன் முதல்வன் தேரினை. ௫௦

என்றனை வரும்புகழ்ந் திறைவன் தம்மினத்(து)
ஒன்றினுக் குதவிய துணர்ந்து முல்லைகள்
மன்றலம் மலர்களை மலர்த்து நீணெறி
அன்றுவப் பொடுநடந் தடைந்த னர்நகர். ௫௧

வானொலி அகத்திசை மாதி ரத்திடை
நானிலத் தவர்க்கெலாம் நகர்ந்து சேறலில்
கோனிசை பரந்தது கொடைபெற் றோர்களால்
மீனவன் மனத்திடை வெகுளி கொள்ளவே. ௫௨

## கபிலர் வருகை

(வேறு)

புகழ்மிகுந்த புரவலனைப் போய்நோக்கும் வேட்கையினால்
தகவுடைய அறமுணர்த்துந் தமிழுணர்ந்த பெரும்புலவன்
மகிழ்மலர்ந்து மணம்விரிக்கும் வாதவூ ரன்கபிலன்
பகர்வரிய வளமிகுந்த பறநாட்டுக் கெழுந்தனனே. ௫௩

---

௪௮. படலின் மள்ளர் = படலில் + மள்ளர். படுதலினாட்டு = படுதலில் + நாட்டு. கொடைமடம்—கொடுப்பதில் அளவின்றிக் கொடுக்குங் குணம். படைமடம்—போரில் நெறிதவறிச் செல்வது. நடைமடம்—ஒழுக்கத்தில் நெறிதவறிச் செல்வது.

௪௯. ஆயிடை—அவ்விடத்தில். தாய்—தாவி. இலங்குவது—விளங்குவது.

௫௧. நீணெறி = நீள் + நெறி. மன்றலம்மலர்—மணமுடையமலர்.

௫௨. வானொலியகம்—வான்வழியாக ஒலியைப் பரப்பும் (ரேடியோ) நிலையம். மாதிரத்திடை—நான்கு திசைகளிலும். மீனவன் — பாண்டியன்.

௫௩. வேட்கை—விருப்பம். பறநாடு—பறம்பு நாடு.

கண்மணியே வருக. இவண் கனிவாய்முத் தந்தருக.
பண்ணியமு மாங்கனியும் பலதருவ னெனமகவைப்
பெண்ணொருத்தி அழைக்கவது கேட்டறிஞன் பெரிதுமகிழ்ந்(து)
எண்ணிநடக் கும்வினைபின் இனிதாகும் எனநடந்தான். ருச

வம்புலவு மலர்சுமந்தும் வனப்புமலி தழைசுமந்துங்
கொம்பரெலாந் தலைவணங்குங் குளிர்மரங்கொள் வழிநடந்து
தும்பிநவில் இசைகேட்டுந் தோகைமயில் நடங்கண்டும்
செம்பொனருங் கலனணிந்த செவியுடையான் நடந்தனனே. ருரு

கரவுடையான் வன்கண்ணன் கைம்மகுடி இசைக்குருகி
அரவணுகி ஆடலையும் அவன்முனநின் றடங்கலையும்
உரமுடையான் கண்டுமனம் உடைந்தகலக் குயிற்பார்ப்பை
மரநிழலிற் கருங்காக்கை பறக்குவிக்கும் வழிநடந்தான். ருசு

களங்கனியில் திகழ்குழல்மென் காரிகையார் பந்தெறிந்தங்
குளங்களித்து விளையாட அதுகண்ட ஒருமந்தி
விளங்கனிகொண் டெறிந்தெவரும் நகையாட விளையாடும்
வளங்கெழுமு பொழிலினையும் மடுக்களையுங் கண்டகன்றான். ருஎ

கண்முத்தங் கழைசொரியக் கதிரவன்வெங் கனல்சொரியும்
முண்மொய்த்த பாலையினில் முகிலிரங்கி நிழலியற்ற
எண்ணற்ற புன்மரங்கள் எரியுற்ற சிறுநெறியே
அண்ணிக்குந் தமிழ்தொடுக்கும் அறிஞனடந் தகன்றனனே. ருஅ

மின்னிடையாள் மெலிவெய்தி வில்லுடையா னொடுதொடரக்
கன்னெறியிற் கண்டனையோ கற்றறிந்த புலவவெனப்
பன்னியழு தெதிர்ந்தாட்குப் பரவையிடைப் படுமுத்தம்
பொன்னொடுபட் டொளிர்வதுகண் டறிந்திலைகொல் எனப்போனான். ருகூ

---

ருச. கனிவாய்—கொவ்வைக் கனி போன்ற சிவந்த வாய். பண்ணியம்—ஒருவகைத் தின்பண்டம்.

ருரு. வம்பு—மணம். கொம்பர்—மரக்கொம்புகள்.

ருசு. கரவு—வஞ்சகம். வன்கண்ணன்—பழிபாவங்களுக்கஞ்சாதவன். பார்ப்பு—குஞ்சு. இச்செய்யுள் பின்னிகழ்ச்சிக் கறிகுறி.

ருஎ. களங்கனியில்—களாப்பழம் போன்று. மந்தி - குரங்கு. விளங்கனி—விளாம்பழம்.

ருஅ. கண்—கணு. கழை—மூங்கில். கனல்—நெருப்பு. முண்மொய்த்த=முள்+மொய்த்த. புன்மரம்=புல்+மரம். அண்ணிக்குந்தமிழ்—தித்திக்குந் தமிழ்.

ருகூ மின்னிடையாள்—மின்னலைப்போன்ற இடையையுடைய ஒரு தலைவி. வில்லுடையான்—வில்லை ஏந்திய ஒரு தலைவன். கன்னெறி=கல்+நெறி. எதிர்ந்தாட்கு—எதிரே வந்த செவிலித்தாய்க்கு. பரவை—கடல். உன் மகளும் தலைவனைச் சார்ந்து விளக்கமுறுவாள் என்பது ஈற்றடியின் கருத்து.

வறியவர்தங் கடும்பசிக்கு மருந்தாவான் பறம்பினைக்கண்(டு)
அறிஞனடந் தணுகினன்;அங் கருளுடைய முருகனுக்குக்
குறவரினந் துடியியக்கிக் கொழுமலர்தூய் அடிவணங்கும்
வெறியினைக்கண் டணுகிமுனம் விழுந்தெழுந்து மெலநடந்தான்.

கருநெடுங்கல் லிடைமுளைத்துக் கதிர்த்துயர்ந்த இற்றியின்வேர்
அருவியெனத் தெரிதருநீள் அதரினடந் தப்புலவன்
வருடைதரு சுரைத்தீம்பால் மாந்தியதன் மறியுகளும்
பொருவருபுன் னிலங்கண்டு போயினனெஞ் சங்களித்தே. ௬௧

மந்தியிவ ராக்குவட்டின் மால்பியற்றி மேலிவர்ந்து
செந்தழல்கொண் டீமுடுக்கித் தேனெடுப்பார் செயல்தெரிந்து
தந்நறுந் தேனினையுங் கனியினையுந் தளர்வுகெடப்
பைந்தமிழ்ப்பா வலனருந்திப் படர்ந்தனனீள் பறம்பருகே. ௬௨

மலர்மலிநீள் கிளைவளைய மங்கையர்வேங் கைநிழற்கீழ்ப்
புலிபுலியென் றியம்பொலியைப் புலவன்கேட் டகமுடைந்தங்(கு)
அலறிவிரைந் தெதிருறலை யவணடப்பார் கண்டுநகைத்(து)
இலைபுலி;நீ மெலநடக்க வென்றுரைக்க நெறிநடந்தான். ௬௩

விரிமலர்நீள் வேங்கைமிசை மேவுமிது முகிலென்று
திரிபுறக்கண் டவர்தெளியச் செலுநெறியின் மணமளித்துப்
பிரிவறமென் மெலத்தாழ்ந்து குறவரிடு பெருநெருப்பால்
எரிபடுசந் தனத்திலுறும் புகையினைக்கண் டேகினனே. ௬௪

மருமலர்த்துஞ் செடிகளையும் வான்தடவு மரங்களையும்
அருவியையும் புனலொழுகும் ஆற்றினையுங் காற்றுலவ
இருமருங்கும் பறந்துபறந் திசைபயிற்றும் புட்களையும்
பெருவிருப்பி னொடுகண்டு வழிநடந்தான் பெரும்புலவன். ௬௫

தேங்குபுனல் நீளகழுந் தெவ்வரிவர் தற்கரிய
ஓங்குபொறி மாமதிலும் உள்ளகன்ற வளநிலனும்
வாங்குமிர வலர்வழங்கும் வாயில்வழி யேநுழைந்து
நீங்கி,வரு கெனவழைக்கு நெடுங்கொடிமா டம்புகுந்தான். ௬௬

---

௬௦. தூய்—தூவி. வெறியினை—வெறியாடலை.

௬௧. வருடை—மலையாடு. சுரை—மடுவின் காம்பு.

௬௨. இவராக் குவடு—ஏறமுடியாத மலையுச்சி. மால்பு—ஏணி.

௬௩. அவணடப்பார்=அவண்+நடப்பார். அவண்—அங்கே. வேங்கை மலர் பறிக்கையில் 'புலி புலி' என்றுரைப்பது வழக்கு.

௬௪. திரிபு—மாறுபாடு; ஒன்றை மற்றொன்றாகத் துணிதல்.

௬௬. அகழ்—அகழி. தெவ்வர்—பகைவர். பொறி—எந்திரம். இரவலர்—இரப்பவர்.

சென்னெறியின் இருமருங்குஞ் செம்பொன்மணி யினிற்செய்த
மின்னுமிலை மலர்ச்செடிகள் வெண்ணெடுந்தூண் தொறுநின்று
முன்முனிலங் கின.விளக்கு முகட்டிடைத்தூங் கின.கண்டான்.
மன்னனையும் முனங்கண்டான். மகிழ்ந்தவன்பக்கஞ்சென்றான்.

## பாரி கபிலன் நட்பு

இருக்கவென இருக்கைதர இருந்தனனப் பெரும்புலவன்.
விருப்பினொடு கண்டரசன் மிகமகிழ, மற்றவனும்
அருத்தியொடு முகநோக்கி அருளுமலர்ச் சியுந்தோன்றத்
திருக்கிளருந் திங்களிடைத் தீத்தோன்று மோவென்பான். சுஅ

உடனலனை முன்வினவி உறவினர்தம் நலன்வினவித்
தொடருறுசெந் தமிழுணர்ந்த தூயவர்தம் நலன்வினவி
இடருறுகல் நெறியினடந் திளைத்தனை நீ; இவணடைந்த
நடைவருத்தங் களைகவென நவின்றுணவூட் டினன்பாரி. சுகூ

பாத்தொடுக்கும் புலவரொடும் பாட்டிசைக்கும் பாணரொடுங்
கூத்தியற்றுங் கூத்தரொடுங் கூடிமகி ழுங்காலைப்
பூத்தொளிரும் பொழிலினையும் பொருப்பினையும் புகழ்ந்து,சிலர்
காத்தருளுங் காவலனைக் கபிலனிடஞ் சொலநினைந்து, எ0

வருபயனைக் கருதாமல் மன்னுயிர்கட் கெஞ்ஞான்றும்
தருவதற்கும் புரப்பதற்குஞ் சார்கொடுமை தவிர்ப்பதற்கும்
ஒருவரிலை பாரியலால் உலகின்கண் என்றுரைக்கக்
கருமுகிலும் உளதென்று கவின்தொடையோன் றுரைசெய்தான்.* எக

மன்னனனி நல்லவனென் றுரைத்தெவரு மகிழ்ந்துசெலத்
தன்னிடம்வந் தாரெவர்க்கு முறைசெய்யுஞ் சால்பினையும்
இன்மையுரைப் பாரெவர்க்கும் ஈதலையுந் தான்கண்டு
தென்மொழிவல் லவன்முன்னங் கேட்டவைமெய் யெனத்தெளிந்தான். எஉ

---

சுஎ. இருமருஙகும்—வலப்புறமும் இடப்புறமும். முன்முன்—எதிரெதிரே.

சுஅ. அருத்தி—விருப்பம். என்பான்—என்று தன் நெஞ்சிற்குக் கூறிக் கொள்வான்.

சுகூ. உடனலன் = உடல் + நலன்.

எ0. பொழில்—சோலை. பொருப்பு—மலை.

எக. *பாரி பாரி என்றுபல வேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனும் அல்லன்
மாரியும உண்டீண் டுலகுபுரப் பதுவே. (புறம். 107)

எஉ. செல—செல்லும்படி. இன்மை—வறுமை.

அடுத்துரையா டுந்தோறும் அருந்தமிழின் இனிமையினை
எடுத்துரைக்குந் திறத்தினையும் இனிமைபெறப் பலசெய்யுள்
தொடுத்துரைத்த திறத்தினையுந் தொடையணிமன் னவனறிந்து
படித்தவரிற் பெரியனெனப் பகர்வதுமெய் யெனநினைவான். ௭௩

கனிமொழியாற் செயுஞ்செயலாற் கட்டுண்டான் கபிலன். அவன்
இனியதமிழ்ப் புலமையினா லியாப்புண்டான் இறையவனும்.
முனிவறியார்; பிரிவறியார்; முகமலர்ந்தின் னுரைமொழிந்து
நுனியிலிருந் தடிக்கரும்பை நுகர்பவர்போல் மகிழ்ந்துறைந்தார். ௭௪

வரும்புலவ ரொடுபழகி மகிழ்வுறுவான்; மன்னனுக்கும்
பெருந்தகைதன் மகளிருக்கும் பிறர்க்குமரும் பனுவல்களை
விரும்பியெடுத் தியம்புவன்; அவ் வேந்தனுற வினர்களொடு
நெருங்கிமரு வுவன்பொத்திப் புலவனுக்கு நிகராவான். ௭௫

## முல்லைக்குத் தேரீந்ததைப் பாராட்டல்

கலந்தபெருங் கேண்மையினாற் கபிலனுறை யுங்காலை
நிலங்கிடந்து தளர்ந்தவொரு நெடுங்கொடிமுல் லைக்கிரங்கி
நலங்கனிந்த மன்னவன்றேர் நல்கினன்முன் எனக்கேட்டான்
மலர்ந்தமலர்க் கானமடைந் தவைகாண மனங்கொண்டான். ௭௬

நெறிவழியே படர்ந்தனன்பன் னெடுமரங்கள் நிழலியற்ற.
விறலியெதிர்ந் தையசெலின் வேந்தனணி நல்குவனோ?
அறனறிபா வலவென்னப், பாடிநடந் தடைவையெனிற்
பெறுவையெனச் சேயிழைப்பா* மொழிந்தவட்குப் பினுமொழிவான். ௭௭

---

௭௩. தொடை—பூமாலை, பாமாலை.

௭௪. கனிமொழி—மனங்கனிந்து பேசும் மொழி. யாப்புண்டான்—கட்டுண்டான். முனிவு—வெறுப்பு.

௭௫. பனுவல்—நூல். பொத்திப்புலவன்—பொத்தியாரென்னும் புலவர். கோப்பெருஞ் சோழனோடு நட்புக்கொண்டு, அவன் வடக்கிருப்பத் தாமும் வடக்கிருந்தவர்.

௭௬. கேண்மை—நட்பு. அவை—முல்லையையுந் தேரினையும்.

௭௭. *சேயிழை பெறுகுவை வாணுதல் விறலி
..........................................
நீரினு மினிய சாயல்
பாரி வேள்பால் பாடினை செலினே. (புறம். 105)

புல்லிலைவெள் ளெருக்கலர்த்தும் பூவிடினும் இடுபவர்பால்
இல்லைமணம் அவைபேணேம் என்றுரையாக் கடவுளைப்போல்
மெல்லியர்புல் லறிவினரெம் வேள்பாரி யிடஞ்செலினும்
நல்குவன்நீ செல்கென்று நல்லவெனுந் தொடைமொழிந்தான்.*

அருளுடையான் மனையகத்தே அறிவுடையார் கொளக்கிடக்கும்
பொருள்நிகர்ப்பப் பறவைகளும் பொறிவண்டுந் தாமுண்ண
முருகுயிர்க்கும் பன்மலரு முதிர்கனியும் நிறைகானை
இருவிழியா லுங்கண்டு கண்டுநடந் தேகினனால். ௭௯

ஆங்கொருசார் உருண்டுசெலா அணிநெடுந்தே ரினைக்கண்டான்.
பாங்கரணு கினன்.அதனிற் படர்ந்தபசுங் கொடிமுல்லை
நங்கிறைவன் என்னிடர்கண் டீந்ததிது வென்றுவந்து
மூங்கையெனத் தலையசைத்து முகையெயிறு காட்டியதே. ௮௦

முல்லையைமுன் புகழ்ந்தனன்;அம் முல்லைக்குத் தேரளித்த
நல்லவனை யும்புகழ்ந்தான்; நானிலத்தில் இவனொப்பார்
சொல்லுவதற் குளர்கொல்லோ? தோகைக்குத் துகிலளித்த
செல்வனையும் வென்றனனென் றெணிநடந்தூர் திரும்பினனால்.

வந்தடையும் விறலியர்க்கு மன்னனருங் கலனளிப்பான்;
செந்தமிழ்நூல் வல்லார்க்குத் தேரளிப்பான்; ஊரளிப்பான்;
மைந்துடைய மறவருக்கு மாராயம் வாளளிப்பான்;
வெந்திறலவ் வேந்தனிசை விரிந்ததுமண் ணகமெங்கும். ௮௨

---

௭௮. *நல்லவுந் தீயவு மல்ல குவியிணர்ப்
புல்லிலை யெருக்க மாயினும் உடையவை
கடவுள் பேணேம் என்னா ஆங்கு
மடவர் மெல்லியர் செலினும்
கடவன் பாரி கைவண் மையே. (புறம். 106)

௭௯. பொருள் நிகர்ப்ப—பலவகைப் பொருள்களைப்போல. முருகு—மணம்.

௮௦. பாங்கர்—அதன் பக்கம். மூங்கை—ஊமை. முகைஎயிறு—அரும்புகளாகிய பற்கள்.

௮௧. தோகை—மயில். துகில்—ஆடை. செல்வன்—வையாவிக் கோப்பெரும் பேகன்.

௮௨. விறலியர்—திறம்பட ஆடும் பெண்கள். கலன்—அணிகலன். மைந்து—வலிமை. மாராயம்—அரசரால் செய்யப்படும் சிறப்புப் பட்டம் முதலியன.

## பாண்டியன் காதல்

(வேறு)

பாரி வண்மையைப் பாவலர் தாஞ்சொலின்
வேரி யந்தொடை மீனவன் வெள்குவான்.
காரி னல்குமக் காவலன் கன்னியர்
சீரி யம்புவார்க் கீகுவன் செல்வமே. அங

கல்வி யின்கரை கண்டவர் யாழினில்
வல்ல வர்மறு வற்ற மனத்தினர்
நல்லொ ழுக்கினர் நங்கையர் தாமெனச்
சொல்லுந் தோறுந்தன் சென்னி துளக்குவான். அச

திங்கள் வாண்முகம்; செம்பொ னவருடல்;
மங்குல் வார்குழல்; வாய்செம் முருக்கிதழ்;
செங்கை காந்தள் சிறுமியர்க் கென்னவுங்
கங்கு லுந்துயில் கொண்டிலன் காவலன். அரு

வளவன் பாவை மனைவியே யாயினும்
இளமை தீர்ந்தனள்; இன்னவ ரைக்கொளின்
உளம கிழ்ச்சி புகழ்ச்சியுண் டாமெனத்
தளர்ம னத்தவன் தன்னுட் கருதினான். அசு

## மகட்பேசல்

சொல்ல வல்ல அமைச்ச ரிடஞ்சொலிச்
செல்க வென்று செலுத்தினன் தென்னவன்.
நல்ல தென்று நடந்தனர் அன்னவர்;
மல்லல் சேர்பொழில் மாநகர் தாண்டினர். அஎ

காந்தள் மீளுமின் என்றுகை காட்டவும்
வேந்தன் வெற்பிவர்ந் தேகி விரிந்தநூல்
ஆய்ந்த நெஞ்சத் தமைச்சர் கருமுகில்
தோய்ந்த மாமதில் சூழ்மனை சேர்ந்தனர். அஅ

---

அங. வண்மை—கொடை. வேரி—தேன். மீனவன் — பாண்டியன். வெள்குவான்—நாணுவான்.

அச. துளக்குவான்—அசைப்பான்.

அரு. வாள்முகம்—ஒளிபொருந்திய முகம். மங்குல்—மேகம். கங்குல்—இரவு.

அசு. வளவன் பாவை—சோழன் மகள்.

அஎ. அன்னவர்—அவ்வமைச்சர்.

அஅ. மீளுமின்—திரும்புக. முன்னிலைப் பன்மை. ஏவல். வெற்பு—மலை.

வணங்கி, நின்னிடம் வந்தனம்; மன்னநின்
அணங்கன் னுரையெம் அண்ணல் முறைப்படி
மணஞ்செய் வான்மனங் கொண்டனன்; மற்றுநீ
இணங்க வேண்டும்; எமைவிடுத் தானென்றார். ௮௯

## இசையாமை

சொன்ன அம்மொழி சுட்டது காதினை.
கன்னி யர்தமைக் காவலன் வேட்பனும்.
முன்னம் வேட்ட முதியனுக் கீவது
கன்னற் சாற்றைக் கமரிற் கவிழ்ப்பதே. ௯0

என்று ளத்தெணி, இன்தமிழ் நூல்வலீர்!
மன்ற லாலொரு மாதை மணந்தநும்
வென்றி வேந்தினும் வேட்க விரும்புதல்
நன்றுகொல்? மக ளீதல் நலங்கொலோ? ௯௧

குடிமை செல்வங் குறைந்தில; ஆண்டெனின்
முடிய ணிந்த முதல்வனுக் கெத்தனை?
துடிநு சுப்பிளந் தோகையர்க் கெத்தனை?
நெடிய விந்தமுங் குன்று நிகர்க்குமோ? ௯௨

இகழ்ந்து ரைத்தனன் என்றுளத் தெண்ணன்மின்;
புகழ்ந்து ரைப்பனெப் போதும் அவனையே;
பகர்ந்த தற்குடன் பட்டிலன் என்னுமின்;
மிகுந்த சீர்த்திநும் வேந்த னிடமென்றான். ௯௩

சொன்ன சொற்களைச் சொல்லுதும் என்றெழுந்
தன்ன வன்விடை பெற்றவ் வமைச்சர்கள்
கன்னி லம்பல காடு கடந்துதந்
தொன்ன கர்வந் தரசிடஞ் சொல்லினர். ௯௪

---

௮௯. மணஞ்செய்வான்—மணஞ்செய்வதற்கு.

௯0. வேட்பனும்—மணஞ்செய்வானும்.

௯௧. மன்றல்—மணம். வேட்க—மணஞ்செய்ய.

௯௨. துடிநுசுப்பு—உடுக்கைபோன்ற இடை. தோகையர்க்கு—பெண்களுக்கு.

௯௩. எண்ணன்மின்—எண்ணுதீர்கள்.

௯௪. கன்னிலம்=கல்+நிலம். தொன்னகர்—பழமையான மதுரை மாநகர்.

### பாண்டியன் சீற்றம்

ஆண்டு வேற்றுமை கூறி யகற்றிலன்;
வேண்டும் என்றே விலக்கினன் வேள்;இனிக்
காண்டும் என்றனன் காவலன்; காய்சினம்
மூண்டு கண்ணும் முகமுஞ் சிவந்தவே. ௯௫

வாரி வாரி வழங்கிப் பலரையும்
பாரி பாரியென் றேபகர் வித்தனன்.
சீரி யைந்த செழியர் மரபையும்
போரி டாமற் புகழிற் சிதைத்தனன். ௯௬

முண்ம ரத்தை முதிருமுன் கொல்வதே
எண்மை; காழ்த்த இடத்தரி தென்பரால்.
உண்மை யாமென் றுரைத்தொரு தூதினால்
திண்மை சேரிரு மன்னரைச் சேர்த்தனன். ௯௭

### படையெழுச்சி

எழுக தானையென் றேவி யெரிசின
வழுதி யும்வந்த மன்னரும் பற்பலர்
தொழுது வாழ்த்தவுந் தோற்பறை விம்மவும்
பழுதி லாத பறம்பெணிச் சென்றனர். ௯௮

புலியி னம்போல் வயவர்கள் போயினர்;
மலையி னம்போல் மதகரி சென்றன;
அலையி னம்போல் அகன்றன வாம்பரி;
தொலைவில் தேரினம் பின்னர்த் தொடர்ந்தவே. ௯௯

காற்றின் ஏகிக் கழனி கடந்தனர்;
நாற்ற மார்பொழில் தாண்டி நடந்தனர்;
பாற்றி னம்பின் படரப் பறம்புபோய்ச்
சீற்றங் காட்டிச் செருப்பறை கொட்டினர். ௧00

---

௯௬. செழியர்—பாண்டியர்.

௯௭. முண்மரம்=முள்+மரம். எண்மை—எளிமை. கொல்வது—வெட்டுவது. காழ்த்த இடத்து—(பெரிதாய்) வைரங்கொண்ட இடத்து.

௯௮. வழுதி=பாண்டியன்.

௯௯. வயவர்—வீரர்கள்.

௧00. கழனி—வயல். பாற்றினம்—பருந்துக்கூட்டம். செருப்பறை—போர்ப்பறை.

### பாதுகாப்பு

வள்ளல் கேட்டனன் மாற்றார் வருகையை.
கொள்ளு தற்கருங் குன்றரண் வாயிலின்
எள்ள லில்கத வெல்லாம் அடைத்தடைத்(து)
உள்ளி ருந்தனன் உற்ற கிளையொடும். ௧௦௧

வில்லுங் கோலுமின் வேலுஞ் சுரிகையுங்
கல்லுங் கொண்டு மறவர்கள் காத்தனர்
அல்லல் செய்யும் அடையலர் மேல்வரின்
வல்லை மாய்க்கும் பொறிகொள் மதிலினை. ௧௦௨

ஏவல் லார்வந் தெதிர்மலை யாமையின்
காவ லாளர் களித்தனர்; கற்றுணர்
பாவ லார்புகழ் பாரி பறம்பினை
மூவர் தானையும் முற்றின பல்பகல். ௧௦௩

நெருப்பும் அம்பும் நெருங்குமுன் வீசலின்
அருப்பங் கொள்ளும் அவாவினை விட்டனர்
விருப்பின் உண்ணும் விளைபொருள் ஒன்றையும்
பொருப்பி னுக்கெடுத் தேகலைப் போக்கினர். ௧௦௪

மன்னன் பாரி மலையின் வளங்களைத்
தன்னு டன்தங்கு வார்க்கெலாந் தந்தனன்.
தின்னும் வள்ளி வெதிர்நெல் செழும்பலா
இன்ன றுந்தேன் எலார்க்குங் கிடைத்தவே. ௧௦௫

கலையில் வல்ல கபிலன் கிளிகட்குத்
தொலையில் எங்கணுந் தோன்று முதிர்நெலின்
குலையை நாளுங் கொணரப் பயிற்றினன்
இலையென் னாமல் எவர்க்குங் கொடுத்தனன். ௧௦௬

பன்னெ டும்பகல் முற்றவும் பாரிவேள்
இன்னல் எய்திலன்; மள்ளரும் எய்த்திலர்;
கன்னெ ருங்கிய ஞாயிலைக் காத்தனர்
துன்ன லர்படை மள்ளர்தொட் டாரிலர். ௧௦௭

---

௧௦௧. வள்ளல்—பாரி. மாற்றார்—பகைவர்.
௧௦௨. கோல்—அம்பு. சுரிகை—உடைவாள். அடையலர்—பகைவர். வல்லை—விரைந்து. பொறி—எந்திரம்.
௧௦௩. ஏவல்லார்-அம்பு விடுதலில் வல்ல வீரர். பாவல்லார்-புலவர்கள்.
௧௦௪. அருப்பம்—மதில். பொருப்பு—பறம்புமலை.
௧௦௬. பயிற்றினன்—பழக்கினன். இலைஎன்னாமல்—இல்லை என்று கூறாமல்.
௧௦௭. முற்றவும்—முற்றுகையிடவும். மள்ளர்—போர்வீரர். துன்னலர்—பகைவர்.

கபிலர் கூற்று

படையி னுலென் பயனடைந் தார்?கொடி
இடைம டந்தை இணையோ டிரக்கினே
அடைவள் குன்றமென் றுங்களி தோ*வெனும்
தொடைந வின்றனன் தூயன் கபிலனே. க0அ

கபிலர் ஓலையனுப்புதல்

வள்ளல் சீரையம் மன்னர்க் குரைக்கவும்
பள்ளத் தேபுனல் பாயும் அவன்மலை
கொள்ளு தற்கெளி தன்றெனக் கூறவும்
உள்ளத் தெண்ணினன் உண்மை உரைப்பவன். க0கூ

முற்றி என்பயன்? மூவிரும் வாளினுல்
வெற்றி கொள்ளும் விருப்பினை நீக்குமின்;
கற்ற பாவலர் காவலன் ஊரெலாம்
பெற்று வந்தனர்; பெற்றதென்? எண்மினே. கக0

கூடி முற்றிக் கொடுமை யியற்றினும்
பாடி யாடிநும் பாவையன் னுரொடு
நாடி வேள்முனம் நண்ணுவி ரேனயந்
தீடி லானுமக் கெண்ணமென் என்பனே. ககக

தன்னை வேண்டினும் பாரி தருகுவன்;
என்னை யும்புகழ்க் குன்றையும் ஈகுவன்;
கன்னி யர்தமை நெஞ்சிற் கருதன்மின்;
சென்மி னென்றிரு செய்யுள் இயற்றினன்.† ககஉ

---

க0அ. கொடியிடை—கொடிபோன்ற இடுப்பு. தொடை—செய்யுள்.

*அளிதோ தானே பேரிருங் குன்றே
வேலின் வேறல் வேந்தர்க்கோ அரிதே
நீலத் திணைமலர் புரையும் உண்கண
கிணைமகட் கெளிதால் பாடினள் வரினே. (புறம். 111)

கக0. எண்மின்—எண்ணி யறியுங்கள்.
ககஉ. கருதன்மின்—எண்ணுதீர்கள்.

†கடந்தடு தானை மூவிருங் கூடி
உடன்றனி ராயினும பறம்புகொளற் கரிதே
முந்நூ றூர்த்தே தண்பறம்பு நன்னுடு
முந்நூ றூரும் பரிசிலர் பெற்றனா
யாமும் பாரியும் உளமே
குன்றும் உண்டுநீர் பாடினிர் செலினே. (புறம். 110)

...... ..... ........... ............
விரையொலி கூந்தல்நும் விறலியர் பின்வர
ஆடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்றும் ஒருங்கீ யும்மே. (புறம். 109)

எழுதி னோர் இரும்பனை ஓலையில்
வழுதி முன்னிது வைக்க எனச்சொலிப்
பழுதி லாத பசுங்கிளி உய்த்தனன் ;
அழகவ் வோலையை அங்ஙனம் வைத்ததே. ககங

ஏட்டைக் கொண்டனன் ; என்னென நோக்கினன் ;
பாட்டைப் பார்த்தனன் ; பாண்டியன் பித்தனன்;
மூட்டு செந்தீ முகந்துநெய் பெய்யுழி
மீட்டு மேலெழல் போற்சின மிக்கதே. ககச

பகைமன்னர் தாக்குதல்

துணைக்கு வந்ததன் தோழரைக் கூவினன்;
கணக்கி லாப்பகல் கல்லினை முற்றினம்;
வணக்கங் காட்டிலன் மாற்றலன்; மற்றினிப்
பணைத்த டஞ்சிறை பற்றுவம் என்றனன். ககரு

ஏவி னார்தம் படையை யெழுகென;
மூவர் தானையும் முற்றல் ஒழித்தன;
ஆவ லோடெழுந் தார்த்தன ஆர்ப்பொடு
தாவு வெண்தலைத் தண்டிரை ஆழிபோல். ககசு

(வேறு)

வில்லும் வேலுமெ டுத்தனர்;
செல்லுக செல்கெனச் சென்றனர்;
மல்லி னாலுயர் மள்ளர்கள்
கல்லெல லாம்பொடி காணவே. ககஎ

எடுத்து வாள்களை யேந்தினர்;
நடக்க வென்று நடந்தனர்;
கடக்க ரும்பெருங் கல்லிடைத்
துடிக்கு லத்தொலி தூண்டவே. ககஅ

ஏகி ஈட்டிகள் ஏந்தினர்;
போக போகெனப் போயினர்;
ஓகை கூறுமு ளத்தினர்;
கூகை மீளெனக் கூறவும். ககக

---

ககரு. தோழர்—நண்பர்களாகிய அரசர்கள். மாற்றலன்—பகைவன்; (பாரி). பணைத்தடஞ் சிறை—மிகப்பெரிய மதில்.

ககஅ. துடிக்குலம்—போர்ப்பறைக் கூட்டம்.

ககக. ஓகை—மகிழ்ச்சி. தாக்குவான்—தாக்குவதற்கு.

காக்கு மாமதில் கைக்கொள
ஊக்கங் கொண்டுமு ேனடினர்;
தாக்கு வான்முனஞ் சார்ந்தனர்;
மூக்கள் வேய்புலி போன்றவர். கஉ0

பறம்புநாட்டார் மதிலைக்காத்தல்

நொச்சி மள்ளர்கள் நோக்கினர்;
மெச்சு பல்பொறி மீதெலாம்
வைச்ச மாமதில் வந்தனர்;
அச்ச நெஞ்சிலி லாதவர். கஉக

வம்மி ேனா;இவண் வம்மினோ;
எம்மை வெல்பவர் இல்லையால்;
நும்மை நூறுது மியாமெனா
வெம்மை கூர்படை வீசுவார். கஉஉ

நெறியி னேறி நெருங்கிமுன்
செறியுந் தெவ்வர்முன் தீயுமிழ்
பொறியை யேவுவர்; பொன்றிட
எறிவிப் பார்கலும் ஈட்டியும். கஉங

அணிவ குத்தடைந் தார்களைக்
கணையிற் கொன்றெயில் காத்தனர்
நணுகு வார்க்கொன்று நச்சரா
மணியைக் காப்பது மானவே. கஉச

கண்ணி ழந்துக லுழ்ந்தவர்
புண்ண டைந்துபின் போனவர்
மண்ணில் வீழ்ந்துயிர் மாய்ந்தவர்
எண்ணி லாதவர் எங்கணும். கஉரு

---

கஉக. நொச்சிமள்ளர் — உள்ளேயிருந்து மதிலைக் காவல் செய்யும் பாரியினுடைய வீரர்கள். மதிலைக் காப்பவர் நொச்சிமாலை யணிதல் மரபு. வைச்ச: வைத்த என்பதன் போலி.

கஉஉ. நூறுதும்—கொல்வோம்.

கஉங. தெவ்வர்—பகைவர். பொறி—எந்திரம். பொன்றிட—அழிய.

கஉச. எயில்—மதில். நச்சரா=நஞ்சு+அரா. அரா—பாம்பு. காப்பது மான—காப்பதுபோல.

கஉரு. கலுழ்ந்தவர்—அழுதவர்.

அருப்பங் கொள்ளுதற் கார்த்தவர்
பொருப்பு முட்டுபுள் போன்றனர்;
விருப்பு விட்டனர் மேவலர்;
இருப்பு தீதென எண்ணினர். கஉசு

கருவி மாமழை கால்கொள
வரைபெ யர்வுறு வண்புனல்
அருவி போலிழிந் தற்றது
விரவ லர்படை வெள்ளமே. கஉஎ

தோல்வியால் மானமழிதல்

(வேறு)

புறங்கொடுத்துப் புண்ணினொடு நடந்தனுத்த
மள்ளரெலாம் பொழிலொன் றெய்திப்
பறம்படைந்து மறமிழந்தேம்; பழிசுமந்தேம்;
கொடுமையெனப் பகர்ந்து சோர
இறந்தொழிந் தார்க் கிழிவிலை;இங் கிருப்பவர்க்கே
யிழிவிழிவு; மதுரை மீனின்
மறம்பகர வாயுளதோ எனநவின்றான்
துணைவரிடம் வழுதி மாழ்கி. கஉஅ

சூழ்ச்சி

என்னினைந்தேம்; என்னடைந்தேம்; எவரடைந்தார்
இவ்விழிவென் றிரங்கிச் செவ்வேல்
தென்னவர்கோன் தனையிகழ்ந்து செய்வதினி
யென்னென்று தேருங் காலைப்
பன்னவரும் பழிகொடுத்த பாரியினாற்
பின்னுமல்லல் பலவுஞ் சாரும்;
அன்னவனைக் கொலலுயர்வு; பழியெனினும்
வழுவிலையென் றகத்துட் கொண்டான். கஉகூ

---

கஉசு. அருப்பம்—மதில். பொருப்பு—மலை. புள்—பறவை. மேவலர்—பகைவர்.

கஉஎ. கருவிமாமழை—கூட்டமாகிய கரிய மேகம் எனவும், பகைவருடைய படைக்கருவிகளாகிய பெருமழை எனவும் இருபொருள் கொள்க. கால்கொள என்ற எசசதசை முன்னதற்குப் பெயர்வுறு என்ற எச்சத்தோடும் பின்னதற்கு அற்றது என்ற வினைமுற்றோடும் இயைக்க. விரவலர்—பகைவா.

கஉஅ. மள்ளர்—வீரர். மறமிழந்தேம்—வீரத்தை இழந்தோம். மாழ்கி—வருந்தி.

கஉகூ. பன்னஅரும்பழி—சொல்லுவதற்குக் கொடுமையான பழி. வழு—குற்றம்.

கொளவருவார் அனைவருக்குங் கொடுப்பவன்வேள்
பாரியென உலகங் கூறும்;
வளமலிதம் மூரையெலாம் பாணருக்கும்
புலவருக்கும் வழங்கி னனென்
றளவறுபல் புகழ்க்கபிலன் தொடைநவின்று
நமக்குமுனம் அறிவித் தான்;தான்
உளமகிழ்ந்து கேட்பவர்க்குத் தன்னையுமீ
வானென்றுன் றுரைத்த தன்றே.* ககா௦

காணுவமிங் கிதனையெனக் கருதியொரு
கன்மனத்துக் கயவன் தன்னை
வாணுதனின் மனைவியொடு பாணனென
மொழிந்துநட; வள்ளல் பாற்போய்ப்
பேணியெமக் குனைத்தருக எனமொழிக;
வேண்டற்க பிறிதொன் றென்று
நாணிலிபோல் நவின்றெழுந்து நடக்கவென
நடந்தனனந் நஞ்சு போல்வான். ககாக

பாரி தன்னையீதல்

பழியுருவம் இரண்டெடுத்துப் பற்றியுணற்
கரிதென்று பணிந்து பற்ற
வழிநடக்குங் கொடுங்கூற்றம அனையஇரு
வருநடந்து வழியே யேகி
எழின்மிகுந்த பறம்படைந்தவ் விறையிடம்போய்ப்
பணிந்தனர்;பார்த் தென்னென் றனை
ஒழியல்;நினைக் கொடுக்கவெனக் கொடுத்தனனென்
றனன்புகழாம் உடம்பைக் கொள்வான். ககாஉ

முன்னணுகி யிரந்தவர்க்கு முகமலர்ந்து
மனமகிழ்ந்து முகமன் கூறிப்
பொன்னுதவி னருண்டு; களிறுதவி
னருண்டு; புரவி பூண்ட

ககா௦. *112-ஆம் செய்யுளின் குறிப்புரையில் காட்டப்பட்டிருக்கும் 'கடந்தடுதானை' என்ற செய்யுள்.

ககாக. வாணுதல்=வாள்+நுதல்.—வாள்போன்ற புருவத்தையுடைய.

ககாஉ. பற்றியுணற் கரிதென்று பழியுருவ மிரண்டெடுத்துப் பணிந்து பற்ற வழிநடக்கும் கொடுங்கூற்றம் என இயைக்க. எழில்—அழகு. என்என்றனை—என்ன செய்தி என்று கேட்ட பாரியிடம்.

நன்னெடுமான் தேருதவி னாருண்டு;
நாடுதவி னாரு முண்டு;
இன்னுயிரோ டுடலுதவி னாரெவர்வேள்
பாரியலால் இருநி லத்தே. கடுடு

கொடுத்தனனென் றதுங்கேட்டக் கொடியோருந்
தலைகுனிந்தார்; கொள்ள வந்து
கெடுத்தனரிக் கொடியோரென் றுளமுடைந்தார்
புலவ ரெலாங் கேளி ரோடு;
வடித்தனன்கண் ணீர்கபிலன்; வள்ளலையா
னேமாய்த்தே னென்று மாழ்கித்
துடித்தனன்;மன் னவன்முகமே மலர்ந்தது.செந்
தாமரையுந் தோல்வி கொள்ள. கடுச

பிரிவு

என்னையிவர்க் களித்தனன்;நீ ரெல்லீரும்
ஒழிகவென இயம்பி வள்ளல்
வன்மனத்து வஞ்சகரை வழிநடக்க
எனநடத்தி வழியே சென்றான்;
கன்மரங்கள் நெகிழ்ந்துருகப் புள்விலங்கு
கண்டலறக் கண்ணீர் சிந்தி
மன்பதைநொந் தழுதலற நரிக்கடங்கி
வயப்புலிபின் வழிக்கொண் டாற்போல். கடுரு

மண்ணையகழ்ந் திட்டழிக்கும் வழுவுடம்பும்
பயன்பெறுமோ? மற்றவ் வொன்றும்
பண்ணிசைக்கும் பாணருக்குப் பயன்படுமேற்
பெரும்பயனே என்று பாரி
எண்ணியவர் பின்னடக்க வருகவரு
கென்றழைத்தவ் விருவர் தாமுந்
தண்ணிழல்செய் தண்டலைபோய்க் கண்ணிலிகள்
உள்மகிழச் சார்ந்தார் முன்னே. கடுசு

---

கடுச. வள்ளலை யானே மாய்த்தேன் என்றது பாரியைப் பெறுவதற்கு, முன்புதான் வழி கூறியது கருதி. மாழ்கி—வருந்தி. மன்னவன்—பாரி.

கடுரு. ஒழிக—என்னைவிட்டு விலகுங்கள். கன்மரங்கள்=கல்+மரங்கள். மன்பதை—குடிகள்.

கடுசு. தண்டலை — சோலை. கண்ணிலிகள் — கண்ணோட்டமில்லாத பாண்டியன் முதலியோர்.

## பாரியின் முடிவு

புலவரெலாம் புகழ்பவனை யறநெறியின்
நிலமுழுதும் புரக்குங் கோவை
இலமெனச்சென் றடைபவர்க்கு வறுநெறியிற்
பயன்மரம்போல் இருப்பான் தன்னை
நலமலிந்த மனத்தவனை நற்றமிழை
வளர்த்தவனை நண்ணார் கூடி
நிலமனைத்தும் பழிமொழிய வினைமுடித்தார்
விரைந்துமுன நினைந்த வாறே. ௧௫௭

தனக்குவமை உலகிலிலாத் தலைமகனை
நிலமடந்தை மடியில் தாங்க
உனக்குநலம் உறுகவெனச் செந்தமிழ்மா
தூர்தியளித் துடன்கொண் டேகி
மனத்தினுமெய் யறிவினுமுன் வணங்கியசெம்
பொருளினிட மகிழ்ந்து காட்ட
எனக்கினியா யென்றரசன் தொழவருக
இன்புறுக என்றான் பெம்மான். ௧௫௮

## மனைவி மாய்வு

மணமலர்மென் தொடைபுனைந்த உயிர்த்துணைவன்
தனைப்பிரிந்து வஞ்சர் பின்னே
இணருறுபைம் பொழிலினுழைந் தேகியவன்
றேவுடம்பின் எழிலி ழந்தாள்;
உணவிழந்தாள்; செலவிழந்தாள்; உரையிழந்தாள்;
செயலிழந்தாள்; உயிர்ப்பி ழந்து
கணவனிறந் தனனெனவு மவனொடும்போய்
விசும்படைந்தாள் கற்பி னாளே. ௧௫௯

## துயரம்

சிறையிழந்த பசுங்கிளிபோற் சிறுமியர்வெந்
துயருழந்தார்; சிறந்த தொன்னூல்
துறைதெரிந்த கபிலனிரு கண்ணிழந்தா
லனையபெருந் துயர முற்றான்;

---

௧௫௭. இலம்—பொருளிலேம். வறுநெறி—மரங்களில்லாத வழி. முன நினைந்தவாறே என்றது 'அன்னவனைக் கொலலுயர்வு பழியெனினும் வழுவிலை' என்றகத்துட் கொண்டது. (பாரி 129)

௧௫௮. ஊர்தி—வானவூர்தி. செம்பொருள்—சிவபெருமான்.

௧௫௯. இணர்—பூங்கொத்து. கணவனிறந்தனன் எனவும் உயிர்ப்பிழந்து அவனொடும் போய் விசும்படைந்தாள் என இயைக்க.

முறையறிந்த இறைவனையும் இறைவியையும்
இழந்தபினைப் பறம்பு முற்றும்
சிறையிருளை அகற்றுமிரு சுடரிழந்த
நெடுவிசும்பு நிகர்த்த தம்மா. கசo

பறம்பை மூவேந்தரும் கைப்பற்றல்

பாண்டியனுக் கிழிவியற்றும் பாரியொழிந்
தனன்; அவன்றன் பறம்பும் நாடும்
வேண்டுநமக் கெளியவெனுந் தானையொடு
புறப்பட்டார் வெகுண்ட வேந்தர்;
ஆண்டகைதன் மலையடைந்தார்; அரணடைந்தார்;
அகம்புகுந்தார்; அந்தோ என்று
மாண்டவரை யெண்ணியெண்ணி மள்ளரெலாம்
படைவிடுத்து மாழ்கும் போது. கசக

மாலைப் பொழுது

நனவினிலுங் கனவினிலும் நங்கையரை
நினைந்துருகி நையுங் காம
மனவிருளும் புறங்கொடுத்த வசையிருளுங்
கொலையிருளும் வடிவங் கொண்டு
சினவழுதி பின்தொடர்ந்தூர் தொறும்புகுதல்
போலவிருள் செறிந்த தெங்கும்.
நனியுயர்மேல் வரைபுகுஞ்செஞ் ஞாயிறவன்
செயல்கண்டு நாணங் கொண்டே. கசஉ

பெற்றவரை யிழந்தலறும் பேதையரை
வரும்பகைவர் பிணங்கித் தம்மைப்
பற்றுவரோ கட்டுவரோ வெட்டுவரோ
என்றென்று பதைப்பார் தம்மைச்
சுற்றமும்பல் தோழியரும் பூவைகளுங்
கிள்ளைகளுந் துயரின் மூழ்கக்
கற்றறிந்த கபிலனழைத் துடனெழுந்தான்
கடிமணமுங் கருத்திற் கொண்டே. கசங

---

கசo. சிறை—சிறகுகள். இருசுடர்—ஞாயிறு திங்கள்.

கசக. ஆண்டகை—பாரி. மள்ளர்—வீரர். படை—போர்க்கருவிகள்.

கசங. பூவை—நாகண வாய்ப்புள். கிள்ளை—கிளி.

## திங்களின் தோற்றம்

வனப்புறுதங் கோயிலையும் வாயிலையுங்
கடந்திரவில் வளர்ந்து நீண்ட
பனிப்புறுபல் மரமிடைந்த வழியினைமின்
மினிவிளக்கப் படர்ந்தார் அம்மா;
தினைத்தனையும் பிறவுயிர்கட் கிடரியற்றார்க்
குறுவருத்தந் தீர்ப்பான் போலக்
கனைத்தெழுதெண் திரைக்கடலின் முளைத்தெழுந்தான்
மதிக்கடவுள் கதிர்கள் வீசி. ௧௪௪

## பறம்பை விட்டகறல்

கல்லதரின் நடக்கினிவர் கால்மலர்கள்
கன்றுமெனக் கங்குல் மங்கை
மெல்லிழைவெண் பட்டறுவை விரித்ததுபோன்
றொளிர்நிலவின் மெல்ல மாதர்
செல்லுழியாம் பெற்றிருந்தேம் எந்தையையுங்
குன்றையுமுன் திங்கட் போ(து);இன்(று)
இல்லமென இரங்கிஅற்றைத் திங்களெனும்*
பாமொழிந்திற் றேகி னாரே. ௧௪௫

## ஞாயிற்றின் தோற்றம்

புள்ளினத்துங் கண்டலறக் கதிரவனும்
புறப்பட்டான்; தன்னைப் பொய்கைக்
கள்ளுறுதா மரைமனைவி கண்டவுடன்
ஒளிர்தலையுங் கதிர்க்கை நீண்ட
ஒள்ளிதழ்வாய் விள்ளலையும் அளிக்குவிருந்
தூட்டலையும் உணர்த்த ஆங்கே
தெள்ளுதமிழ்த் திறமுணர்ந்த சிறுமியர்கள்
மனையறஞ்செய் திறங்கண் டாரே. ௧௪௬

---

௧௪௪. பனிப்பு—குளிர்ச்சி. கனைத்து—ஒலித்து.

*அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவின்
எந்தையும் உடையேம் எம்குன்றும் பிறர்கொளார்
இற்றைத் திங்கள் இவ்வெண் ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தர்எம்
குன்றுங் கொண்டார்யாம் எந்தையும் இலமே. (புறம். ௧௧௨)

௧௪௫. பட்டறுவை—பட்டாடை. இல்லம்—பெற்றிலேம்; இழந்தேம்.

௧௪௬. புள்—பறவை. கள்—தேன். விள்ளல்—விரிதல். அளி—வண்டு.

கொழுந்துவையும் ஊன்கறியும் முகைப்பதமும்
எமக்களித்த குன்றே! முன்பு
செழுந்தமிழின் சுவையுணர்ந்த செம்மலெமைப்
புரந்தனன்;அச் செம்மல் தன்னை
இழந்தனம்;இன் றிறைஞ்சுகின்றேம்; ஏகுகின்றேம்;
எமைத்தொடரும் இருவ ருக்கும்
பழங்குடியிற் பிறந்தகொழு நரைத்தேடி
யெனக்கபிலன் பாவொன் றியாத்தான்.* கசஎ

அருவிபல விழக்காண்பான் அழியுங்கொல்
எனப்பாடி யழிவான்† தெண்ணீர்
பெருகுசிறு குளங்காண்பான் அழியுங்கொல்
எனப்பாடிப் பெரிது நைவான்‡
கருவரையைக் கண்டழிவான்§ வளமிகுந்த
நாட்டினையுங் காண்பான் சோர்வான்$
இருவரையுங் கண்டழிவான் நடமினென
உரைத்துமெல ஏகு வரினே. கசஅ

பொன்னுதிர்க்குங் கொன்றையிவை; இவைகாயா;
மணியலர்த்தும் இவையே பூகம்;
நன்முத்த நன்கரும்பும் நங்கைமீர்!
காண்மினென நவில்வான்; செல்வான்;
முன்னிருக்கும் பழங்காண்மின்; முழவெனத்தோன்
றுதல்காண்மின்; மொய்த்து வண்டர்
இன்னறவம் உணல்காண்மின் எனப்பலவின்
சுளைகளெடுத் தீவான்; போவான். கசகூ

---

கசஎ. துவை—துவையல். முகைப்பதம்—முல்லையரும்பு போன்ற சோறு. புரந்தனன்—பாதுகாத்தான்.

*மட்டுவாய் திறப்பவும் மைவிடை வீழ்ப்பவும்
அட்டான் றானாக் கொழுந்துவை ஊன்சோறும்
பெட்டாங் கீயும் பெருவளம் பழுனி
நட்டனை மன்னோ முன்னே இனியே
பாரி மாய்ந்தெனக் கலங்கிக் கையற்று
நீர்வார் கண்ணேந் தொழுதுநிற் பழிச்சிச்
சேறும் வாழியோ பெரும்பெயர்ப் பறம்பே
கோல்திரள் முன்கைக் குறுந்தொடி மகளிர்
நாறிருங் கூந்தற் கிழவரைப் படர்ந்தே. (புறம். ககங)

கசஅ. † புறம் 115. ‡ புறம் 118. § புறம் 114. $ புறம் 117. காண்க.

கசகூ. பூகம்—கமுகு. பொன்—பொன்னிறம் போன்ற பூ. மணி—நீலமணிபோன்ற மலர். முத்து—முத்துப்போன்ற அரும்பு. முழவு—மத்தளம்.

முல்லைமுகை இவைகாண்மின்; பல்நிகர்க்கும்;
இவைகாண்மின் முருக்கம் போது
மெல்லிதழை நிகர்க்கும்;இனி இவைகாண்மின்
கருவிளம்பூ விழிக ளொக்கும்;
செல்லுநெறி யினில்தெரியுஞ் செழுமலரே
காந்தளம்பூ செங்கை யொக்கும்;
பல்லிதழ்த்தா மரைகளிவை முகமொக்கும்;
நடமினெனப் பகர்வான்; செல்வான். ௧௫௦

பூவையிவை காண்மின்முன மொழிபயிற்றி
வளர்த்தவைகள் போன்ற வாமால்;
பாவையினை நீரறிவீர் இவைகுரவம்
பாவை;சில பறித்துக் கொண்மின்;
மாவிலுறை குயில்காண்மின்; விறலியென
நடமாடு மயில்கள் காண்மின்;
மேவிமுனம் வளர்த்தவைபோ லுங்கிளிகள்
காண்மினென விளம்பிச் செல்வான். ௧௫௧

கண்ணுறுபல் மலர்களையுங் கவினுறுபல்
மரங்களையுங் களிக்கும் வண்ணம்
பெண்ணிருவர்க் கும்பகர்ந்து நடைவருத்தம்
அகல்வித்துப் பிறங்கல் தோன்றும்
தண்பறம்பு நாடகன்றான்; தையலர்கள்
பின்தொடர நடந்து சார்ந்தான்
வெண்கொடிகள் முகில்மின்னின் நெடுமாட
மிசையசையும் மிழலைக் கூற்றம். ௧௫௨

## இருங்கோவேளிடம் ஏகல்

கானவர் எறிதரு கணைகட் கஞ்சிய
மானினம் பொன்னொடு மணிகள் மேலெழத்
தேனலர் சிதைவுறக் கடுகிச் செல்லலைத்
தானறிந் தவர்க்குரைத் தான்தண் சாரலில். ௧௫௩

அங்ககன் றரசுறை கோயில் அண்மினன்;
மங்கையர் பின்வர மன்முன் ஏகினன்
கொங்கலர்த் தொடையிருங் கோக்கண் டையநீ
எங்கிருந் தடைகுதி இவர்கள் யாரென, ௧௫௪

௧௫௦. முல்லைமுகை—முல்லையரும்பு. மெல்லிதழ்—மெல்லிய உதடு. பல்லிதழ்—பல(பூ) விதழ்.

௧௫௪. கோயில்—அரண்மனை. கொங்கு—மணம்.

இவரியார் என்குவை ஆயின் ஏந்தலித்
துவரிதழ்த் தோகையர் துவள்முல் லைக்கொடிக்(கு)
இவர்தரு தேரினை ஈந்த பாரிவேட்
குவகைசெய் மகளிர்;கற் றுணர்ந்த மங்கையர். கருரு

வள்ளலப் பாரியை வழுதி கொன்றனன்;
புள்ளுறு பொழிலுடைப் பொருப்புங் கொண்டனன்;
கிள்ளையும் நாணுறு கிளவி யார்தமைக்
கொள்கென இவரெனுஞ் செய்யுள் கூறினன்.* கருசு

முன்னெமக் களித்திலன் முதல்வன்; மாய்ந்தபின்
என்னைநீ கொள்கென இயம்பு கின்றது;
தென்னவன் அறிவனேற் செய்வன் தீங்கெனு
மன்னவன் மறுத்திட வருத்த முற்றனன். கருஎ

எவ்விதொல் குடியினிற் புகுத்த எண்ணிய
வெவ்வினை பொறுக்க; நீ வாழ்க; வெல்கவேல்;
தெவ்வரும் ஒழிகென வெட்சிச் செய்யுளை†
அவ்வர சன்முனம் அறைந்த கன்றனன். கருஅ

## விச்சிக்கோனிடம் போதல்

தளர்ந்துதன் பின்வருந் தையலார்க்குநல்
வளங்களைக் காட்டிநீள் வழிந டத்தியே
விளங்குபொற் கலனணி விச்சிக் கோனிடங்
களங்கமில் மனத்தினன் கபிலன் சென்றனன். கருகூ

---

கருரு. துவரிதழ்—பவழம்போன்ற உதடு. இவர்தரு—தான் ஏறிய.

கருசு. கிள்ளை—கிளி. கிளவியர்—சொல்லையுடையவர்.

*இவர்யார் என்குவை யாயின் இவரே
ஊருடன் இரவலர்க் கருளித் தேருடன்
முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பிற் கோமான்
நெடுமாப் பாரி மகளிர் யானே
தந்தை தோழன் இவரென் மகளிர்
.................................
யான்தர இவரைக் கொண்மதி (புறம். 201)

கருஅ. †வெட்சிக் கானத்து............
எவ்வி தொல்குடிப் படிஇயர் மற்றிவர்
கைவண் பாரி மகளிர் என்றஎன்
தேற்றாப் புன்சொல் நோற்றிசிற் பெரும.
விடுத்தனன் வெலீஇயர் வேலே........... (புறம். 202)

மாரியும் நாணுற வழங்கும் வள்ளலாம்
பாரியின் மகளிரிப் பாவை அன்னவர்.
கூரிலை வேலினர் இரந்து கொண்டுபோய்ச்
சீருடை யான்றனைச் சீறிக் கொன்றனர். ௧௫௦

பெற்றவர் இன்மையின் வளர்த்த பெண்டிரைக்
கொற்றவ நினக்கியான் கொடுக்கக் கொண்மதி,
உற்றுழி உதவினர்க் குதவல் நன்றெனச்
சொற்றனன் பணிவரை யென்னுஞ் சொற்றொடை.* ௧௫௧

புலவரிற் பெரியவிப் பூங்கொம் பன்னவர்
நலமிலர் என்கலேன்; நயந்து வேட்பனேல்
வலமிகு தென்னவன் மாறு கொள்வனென்(று)
அலமரு நெஞ்சமென் றுரைத்த கற்றினன். ௧௫௨

உள்ளவர்க் குதவலே உலகத் தார்செயல்;
எள்ளலம்; ஏகுதும் என்றெ ழுந்தனன்;
கள்ளமில் லாரொடு கபிலன் கல்லுறு
பள்ளமும் மிசையினும் படர்ந்து சென்றனன். ௧௫௩

## சேரமானிடம் செல்லல்

புரவலன் பாரியைப் போலப் பாவலர்
இரவலர் செலுந்தொறும் ஈயும் வண்மையன்
திரணெடுந் தோளினன் செல்வக் கோவென
உரமிகு பாவலர் உரைக்கக் கேட்டனன். ௧௫௪

---

௧௫௧. கொண்மதி—கொள்வாயாக. உற்றுழி — துன்பம் நேரிட்ட விடத்து.

*பணிவரை நிவந்த...............
இவரே, பூத்தலை யறாஅப் புனைகொடி முல்லை
நாத்தழும் பிருப்பப் பாடா தாயினும்
கறங்குமணி நெடுந்தேர் கொள்கெனக் கொடுத்த
பரந்தோங்கு சிறப்பிற் பாரி மகளிர்
யானே, பரிசிலன் மன்னு மந்தணன் நீயே
வரிசையின் வணக்கும் வாள்மேம் படுநன்
நினக்குயான் கொடுப்பக் கொண்மதி சினப்போர்
அடங்கா மன்னரை யடக்கும்
மடங்கா விளையுள் நாடுகிழ வோயே. (புறம். 200)

௧௫௨. நலம்—அழகு, நற்குண முதலியன. வேட்பனேல்—மணஞ் செய்வேனால். வலம்—வலிமை. மாறு—பகைமை. அலமரும்—வருந்தும்.

௧௫௩. எள்ளலம்—பழிக்கிலேம். மிசை—மேட்டு நிலம்.

௧௫௪. வண்மையன்—கொடையாளி. உரம்—அறிவு.

காண்பதற் கெண்ணினன்; கருத்தைக் கூறினன்;
பூண்புனை மகளிரைப் போற்று கென்றொரு
மாண்புறு முதியவன் மனையிற் சேர்த்தனன்;
வீண்பொழு தாக்கிலன்; விரைந்து சென்றனன். கசுரு

முல்லையைக் காண்டொறும், முகமலர்ந்துதேர்
நல்கிய வள்ளலை நினைப்பன்; நைகுவான்.
கல்லுயர் அடுக்கலைக் காணிற் காவலன்
மல்லலம் பறம்பெணி மாழ்கி யேகுவான். கசுசு

மயிலினைக் காணினம் மகளி ரைத்தமிழ்
இயல்தெரி பாவலன் எண்ணி யேங்குவான்;
குயில்மொழி கேட்கினக் கொம்ப னார்கள்தம்
நயமிகு மொழியெணி நைந்து செல்வனே. கசுஎ

கள்ளூறு மலர்விரி காவிற் கண்டனம்;
எள்ளலீர் கபிலனை; யேகு கின்றனன்;
உள்ளமும் எண்ணமும் உங்கள் பாலெனுச்
கிள்ளைகாள் சொன்மினெங் கிளிகள் கேட்கவே. கசுஅ

வண்டுகாள் எஞ்சிறு மியர்கண் மானுதிர்;
கொண்டல்காள் கருநெடுங் கூந்தல் மானுதிர்;
கண்டிரோ அவற்றைநீர்? களவு கொண்டிரோ?
புண்படும் என்மனம் என்று போயினன். கசுகூ

மீனின மறைவுற வெங்க திர்நெடு
வானிடை யெங்கணும் வயங்கு மாறுபோல்
நானில மன்னவர் நலியத் தோன்றிய
ஊனயில் வேற்கடுங் கோவை உற்றனன். கஎ0

கப்பமும் வணக்கமுங் கொள்ளுங் காவலன்
செப்பருஞ் சீர்களைச் செவிக்கின் பந்தரும்
ஒப்பரும் பாடல்கள் ஒருபஃ தாக்கினன்;
அப்பதி கத்தினை அவன்முன் ஓதினன். கஎக

---

கசுசு. அடுக்கல்—மலை, மாழ்கி—வருந்தி.

கசுஎ. குயில் மொழி—குயில் மொழிபோன்ற இனிய மொழி.

கசுஅ. கிள்ளைகாள்—கிளிகளே.

கசுகூ. கொண்டல்காள்—மேகங்களே.

கஎ0. ஊன் அயில் வேல்—பகைவர் உடல் ஊனை உண்ணும் வேல்.

கஎக. பதிற்றுப்பத்து 7-ஆம் பத்தைக் காண்க.

மக்களின் மன்னவன் ஆகி வாழ்ந்தனன்;
ஒக்கலும் உலகமும் உவக்க வாழ்ந்தனன்;
தக்கவன் உரைத்தசெந் தமிழுங் கொண்டனன்;
மிக்கவர் எவரெனிற் பாரின் மீதினே. கஎஉ

என்றுளத் தெண்ணினன்; எதிர்ந்த வேந்தரை
வென்றவந் நாளினும் மிகம கிழ்ந்தனன்;
குன்றையும் பொன்னையுங் கொடுத்தக் கோமகன்
சென்றுநன் றுமலை நாடுஞ் சேர்த்தனன்.* கஎங

கொள்கெனக் கொடுக்குமக் கோவை யாதனை
வள்ளலைப் புகழ்ந்தனன்; பெற்று வாழ்த்தினன்
தெள்ளொளி மதிவினில் திகழக் கண்டனன்
எள்ளுவ துடையதென் றெண்ணி னனரோ. கஎச

நெய்யுறு வேலினர் நிலங்க வர்ந்துதன்
மெய்யொளி பரப்புமெம் வேந்தன் ஒத்தியோ?
பொய்யொளி பரப்புதி புறங்கொ டுத்தெனை
வையமெ னுந்தொடை மதிமுன் பாடினன்.† கஎரு

நல்லவிழ் ஊனுணு நம்பி கைகளை
மல்லுயர் தோளினன் பற்றி மற்றிவை
மெல்லிய வாலென வியக்க அன்னவன்
சொல்லினன் கடுங்கண்ண என்னுஞ் சொற்றொடை.‡ கஎசு

---

கஎஉ. ஒக்கல்—சுற்றத்தார்.

கஎங. சென்று—நன்றுமலைக்குச் சென்று.

*பாடிப்பெற்ற பரிசில்: சிறுபுறமென நூறாயிரங் காணங் கொடுத்து நன்றாவென்னுங் குன்றேறி நின்று, தன் கண்ணிற் கண்ட நாடெலாங் காட்டிக் கொடுத்தான் அக்கோ. (பதிற்றுப் பத்து 7-ஆம் பத்தின் பதிகம்)

கஎரு. †வையங் காவலர் வழிமொழிந் தொழுகப்
போகம் வேண்டிப் பொதுச்சொற் பொறாஅது
இடஞ்சிறி தென்னு மூக்கந் துரப்ப
ஒடுங்கா வுள்ளத் தோம்பா வீகைக்
கடுந்தடு தானைச் சேர லாதனை
யாங்கன மொத்தியோ வீங்குசெலல் மண்டிலம்
பொழுதென வரைதி புறங்கொடுத் திறத்தி
மாறி வருதி மலைமறைந் தொளித்தி
அகலிரு விசும்பி னானும்
பகல்விளங் கலையால் பல்கதிர் விரித்தே. (புறம். அ)

கஎசு. அவிழ்—சோறு. நம்பி—கபிலன்.
‡கடுங்கண்ண கொல்களிற்றால்
..............................

காவலன் பாற்செலுங் கடனைக் கூறினன்
ஆவலின் இருக்கென அவனு ரைக்கவும்
பாவலன் மறுத்தனன்; பாவை யாரிடம்
போவது கூறினன்; புறப்பட் டானரோ. ௧௭௭

திணைபிணைக் கூட்டிநீ ரூட்டத் தெண்புனற்
சுனைசெலுங் கலையினைக் கண்டு தோகையர்
தனிமையை யெண்ணுவன் சார்ந்து செய்செயல்
நினைகுவன் மீள்குவன் நீணெ றிக்கணே. ௧௭௮

## கபிலர் மீண்டு பாரிமகளிரை அடைதல்

இன்றிவண் வருகுவன் இடக்கண் துள்ளுமென்(று)
ஒன்றிய கருத்தினர் ஒளிமு கத்தெதிர்
சென்றவன் மீண்டனன் செம்பொற் காசொடு
கன்றெணி மீள்வுறுங் கறவை மானவே. ௧௭௯

## கோவலூர்க் காரியிடஞ் செல்லல்

வளர்த்தவம் முதியவன் மகிழப் பல்பொருள்
அளித்தனன் அவன்விடை கொண்டவ் வார்வலன்
வளைக்கையர் தம்மொடு வழிந டந்தனன்
களிப்புறு கோவலூர்க் காரி பாற்செல. ௧௮௦

தாவுபைங் கொடிகளைத் தாங்கிப் பல்மரம்
பூவொடு நின்றன போநெ றிக்கணே.
தூவியஞ் சிறையனந் துணைகண் டோடிநீர்
வாவியின் கரைவயின் மகிழ்ந்து நின்றதே. ௧௮௧

---

ஆவஞ் சேர்ந்த புறத்தை தேர்மிசைச்
சாப நோன்ஞாண் வடுக்கொள வழங்கவும்
பரிசிலர்க் கருங்கல நல்கவுங் குரிசில்
வலிய வாகுமநின் தாள்தோய் தடக்கை
புலவு நாற்றத்த பைந்தடி
பூநாற் றத்த புகைகொளீஇ ஊன்றுவை
கறிசோ றுண்டு வருந்துதொழி லல்லது
பிறிதுதொழி லறியா வாகலின் நன்று
மெல்லிய பெரும தாமே; நல்லவர்க்
காரணங் காகிய மார்பிற் பொருநர்க்
கிருநிலத் தன்ன நோன்மைச்
செருமிகு சேஎய்நிற் பாடுநர் கையே. (புறம். ௧௪)

வசிவள முடையதிம் மலைய நாடரோ;
பசிபிணி யில்லது; பெண்ணை பாய்வது;
வசையறு வழிச்செலு மக்கள் வாழ்வதென்(று)
இசைபெறு மகளிருக் கியம்பிப் பாவலன், க௮௨

முன்னமிங் கடைந்தனன்; முகமன் கூறிவேள்
மன்னவன் தேர்கலன் வழங்கினானெனக்(கு)
என்னிள மதலையீர் இன்று செல்லினும்
நன்மைசெய் வானென நடத்திச் சென்றனன். க௮௩

வடிவுறு வாவியின் மலர்ந்த தாமரை
இடமெனக் களிக்கவென் றிரந்த டைந்துதன்
உடல்பொடி யுறநற வுண்ணும் வண்டினைக்
கடிமலர்க் குழலியர் கண்டு சென்றனர். க௮௪

உழவொலி செவிப்பட உவந்து சென்றனர்;
முழவொலி செவிப்பட முகம லர்ந்தனர்;
விழவொலி செவிப்பட விருப்பி னேகினர்;
குழன்மொழி யவருறை கோவ லூரினே. க௮௫

நுண்ணறி வுடையரு நோக்கி யின்புறும்
வெண்ணெடு மாளிகை விளங்கு கோவலைக்
கண்ணினிற் கன்னியர் கண்டு பின்வரத்
தண்ணளிப் பாவலன் கோயில் சார்ந்தனன். க௮௬

## திருமணம்

### (வேறு)

ஓவியத் தெழுத வொண்ணா ஒள்ளிழை மகளிர் தம்மைக்
காவலன் மைந்தர் நோக்கி யாரெனக் கலங்கி நின்றார்.
பாவலன் பின்னே சென்ற இருவரும் பார்த்து மாடத்
தேவலர் இன்றி நின்ற இளவர சரையுங் கண்டார். க௮௭

நாணெகிழ்ந் தேகினாரந் நங்கையர் புலவன் றன்னோ(டு).
ஆண்மைநீத் துடைந்து நைந்தார் ஆளியன்னாரும் ஆங்கே.
காணுதற் கெண்ணி வந்த கபிலன்மன் னவன்முன் சென்றான்.
தூணெனுந் தோளினானும் வருகெனச் சொன்னான் நோக்கி. க௮௮

---

க௮௨. வசி—மழை. பசிபிணி—பசியும் பிணியும்.
க௮௪. தாமரை: விளிவேற்றுமை. கடி—மணம்.
க௮௬. கோவல்—கோவலூர். தண்ணளிப் பாவலன்—கபிலன்.
க௮௭. ஓவியம்—சித்திரம். காவலன் மைந்தர்—காரியின் மக்கள்.
க௮௮. நாண்—நாணம்.

துறைதெரி புலவன் தன்னை இருக்கையில் இருத்தித் தூயோய்
இறைவனும் பாரி வான மெய்தினன் போலும். இந்தப்
பிறைநுதல் வளைக்கை வேற்கண் பெண்டிர்யார்? பெற்றார் யாவர்?
அறைகென மொழியக் கேட்டங் கறிஞனும் உரைக்க லுற்றான். ௧௮௯

மன்னவன் வள்ளல் பாரி மறைந்தனன் தன்னை நல்கி.
அன்னவன் மகளிர் இந்த அணங்கனார்; எம்பாற் கற்றார்;
நன்னடை யுடையார்; பெற்ற நங்கையு மவன்பின் சென்றாள்
இன்னலே அடைகின் றார்முன் பின்பமே அடைந்த நல்லார். ௧௯0

கற்றவர்க் குதவும் வள்ளால்! காரி!நின் காளை யர்க்குப்
பெற்றருள் இவரை; இந்தப் பெண்டிராற் பெருமை உண்டு;
மற்றிவர் கொளத்தக் காரே; மறுத்துரை மொழியல்; ஈது
கொற்றவ! வேண்டு வேற்குக் கொடுக்குநின் பரிசில் என்றான். ௧௯௧

புலம்புரை கேட்டு வள்ளல் புலவனைக் காண்பான்; வாடும்
சிலம்பணி கொடியன் னார்தந் திருமுகங் காண்பான்; வேளிர்
குலம்பெறு தவத்தின் வந்த கோமகன் புகழைக் காண்பான்;
நலமிவர்க் குதவல் என்பான் நற்றமிழ்க் குதவு நாடன். ௧௯௨

மனைவியின் பக்கல் சென்றான்; மணவினை உரைத்தான்; கூவி
வினவினன் மைந்த ரோடும்; நன்றென மீண்டு வந்தான்;
இனியெம ராக; மக்காள்! இன்னல்கள் ஒழிக என்றான்.
நனிமகிழ் கபிலன் எய்த நங்கையர் வணங்கி நின்றார். ௧௯௩

முரசறை கென்றான்; கோவல் முழுமையும் புனைமின் என்றான்;
அரசருக் குரைமின் என்றான்; அமைச்சருக் குரைக்க என்றான்;
தெருவெலாம் பந்த ரிட்டார்; கோயிலுக் கழகு செய்தார்;
வருபவர் கண்ணி ரண்டே யென்றெணி வருந்து மாறே. ௧௯௪

பொன்னணி அணிந்து மாதர் பொலங்கொடி போன்று போனார்;
மின்னணி அணிந்து மைந்தர் வெம்புலி போன்று சென்றார்;
மன்னரும் பிறருஞ் சேர்ந்தார்; மணவறை யெங்குஞ் சூழ்ந்தார்;
இன்னிசை முழவுஞ் சங்கு மிசைத்தன; இயமு மார்த்த. ௧௯௫

---

௧௮௯. பிறைநுதல்—பிறைபோன்ற நெற்றி. வேற்கண்—வேல்போன்ற கண்கள்.

௧௯௧. மறுத்துரை மொழியல்—மறுத்துரைக்க வேண்டாம். ஈது—இவரை ஏற்றுக்கொள்ளும் இச்செயல்.

௧௯௨. கோமகன்—பாரி.

௧௯௪. முரசு—வாத்தியம். கோவல்—திருக்கோவலூர்.

கல்வியின் கரைகண்டார்க்குங் காவலின் கரைகாண் பார்க்கும்
நல்லற மகளிர் நால்வர் நன்மணம் இயைவித் தார்கள்
மெல்லிதழ் மாலை மாற்றிக் காதலர் விருப்பின் நின்றார்
பல்லியம் ஆர்த்த. வாழ்த்துப் பகர்ந்தனர் மகளிர் மாதோ.* ககூசு

கண்ணினாற் கண்டின் புற்றார். காதினாற் கேட்டின் புற்றார்.
உண்ணுணா மிசைந்தின் புற்றார். உயர்மணம் முகர்ந்தின் புற்றார்.
தண்ணறுஞ் சாந்தம் பூசித் தலைக்கலர் புனைந்தின் புற்றார்.
பெண்களு மாண்க டாமும் பெருமகிழ் வடைந்தா ரம்மா. ககூஎ

மருவலர்க் கேறு போலும் மன்னவன் வாழி யாதன்
தருபொருள் நாட னைத்துங் கொள்கெனக் கபிலன் தந்தான்;
முருகலர் மாலை வேய்ந்த முத்தவெண் ணகையி னாரவ்
விருவரும் இறைஞ்சிப் பெற்றார்; இல்லறம் புரிய லுற்றார். ககூஅ

தாமரைப் போது போலத்† தங்கொழு நரைக்கண் டாங்கே
தூமுக மலர்த்திக் கையால் தொடுந்தொறும் இன்பந் துய்த்துப்
பாமொழி புலவர்க் கூட்டிப் பாவையர் தேர்முன் பெற்ற
தேமலர் முல்லை போலத் திகழ்ந்திடக் கண்ணிற் கண்டான். ககூகூ

## கபிலன் துயரம்

கண்டவப் புலவன் உள்ளங் களித்திது காணா தற்கிப்
பெண்டிரைப் பெற்றார் பேறு பெற்றிலர் என்று நோவான்.
புண்டரு சுமையை மெள்ளப் போக்கினம்; புகழ்மிக் கானைத்
தண்டமிழ்த் தாயோ டேகிச் சாருவம் எனநி னைந்தான். உ00

பாரியில் லாத நாடு பாலை;நாள் பதடி வைகல்;
நீரினில் அன்றித் தீயில் தாமரை நிலவுங் கொல்லோ?
சீரியை யாத வாழ்க்கை சிறக்குமோ? இன்றின் றென்று
வேரிலாக் கொடிபோல் வாடி வினைவர இனைய லுற்றான். உ0க

---

ககூசு. கல்வியின் கரைகண்டார்—பாரிமகளிர். காவலின் கரைகாண் பார்—காரியின் மக்கள். பெண்டிர் மணச்சடங்கு புரிவித்தலை அகம் 86-ஆம் செய்யுளிற் காண்க.
*தெய்வக் கவிதைச் செஞ்சொற் கபிலன்
மூரிவண் தடக்கைப் பாரிதன் னடைக்கலப்
பெண்ணை மலையற் குதவி.......... (கோவலூர்க் கல்வெட்டு)

ககூகூ. †வள்ளல் பாரி வரலாறு 146-ஆம் செய்யுளைக் காண்க. கொழுநர்—கணவர். தேர்—பாரி கொடுத்த தேர். முல்லை—அவனிடம் பரிசில்பெற்ற முல்லை.

உ0க. பாலை—பாலை நிலத்திற்கு ஒப்பாகும். பதடிவைகல்—உள்ளீடில்லாத கருக்காய் போன்ற இன்பமில்லாத நாளாகும். வினை—தீவினை. இனையலுற்றான்—வருந்தினான்.

வடிவினை யெண்ணும் நெஞ்சம்; வாய்சொலும் அவன்றன் சீரைப்;
படிறிலாய் வருக வென்னும் பாரியைக் காணுங் கண்கள்;
அடிபெயர்ந் தணைக்குங் கைகள்; அதோவெனும் மீண்டுங் கண்கள்;
நொடிதொறும் பித்தன் போல நுவலுவன்; அணைப்பன்; நோவான். ௨௦௨

எண்ணிய தனைத்து மக்கள் இருவர்க்கும் உரைத்தான்; அன்னார்
கொண்கருக் குரைத்தார்; அன்னார் கொற்றவற் குரைத்தார்: கொண்ட
நண்பருக் குரைத்தார்; நாடு நலிவுற வடக்கிற் போகிப்*
பெண்ணையங் கரையைச் சார்ந்தான்; பெருந்தமிழ்க் கடலைச் சார்ந்தான்.

## வடக்கிருத்தல்

மலைகெழு நாட! பாரி! வாரல்; நீ யொழிகென் றேவிக்
கொலைவலார் இடம்போய் மாண்டாய்; கொண்டிலை நண்பன் என்றுன்
தலைமையில் வாழத் தெய்வந் தனியனைக் கூட்டு கென்று
கலையுணக் கிழிந்த என்னுங் கையறு நிலைமொ ழிந்தான்.† ௨௦௪

கொடிகளுஞ் செடிகள் தாமுங் குழைவுறக், கொன்றை பொன்னம்
பொடியுதிர்த் திடமுண் டாக்கப், பூவைபுள் ளொலியைப் போக்கக்
கடிமலர் நிழலில் தங்கிக் கனலினை எழுப்பிக் காலால்
முடியினைத் திறந்து தெய்வ முத்தமிழ்த் தாயைக் கண்டான். ௨௦௫

---

௨௦௨. படிறுஇலாய்—வஞ்சகமில்லாத கபில. அடிபெயர்ந்து—காலடிகள் இடம்பெயர்ந்து செல்ல.

௨௦௩. கொண்கர்—கணவர்; காரியின் மக்கள். நலிவுற—வருந்த.

*பெண்ணை, அலைபுன லழுவத் தந்தரிட் சஞ்செல
மினல்புகும் விசும்பின் வீடுபே றெண்ணிக்
கனல்புகுங் கபிலக் கல்லது. (கோவலூர்க் கல்வெட்டு)

பாரிவிளி. வாரல்—என்னோடு வரவேண்டாம். தலைமையில்—நின் தலைமையில்.

௨௦௪. †கலையுணக் கிழிந்த முழவுமருள் பெரும்பழம்
சிலைகெழு குறவர்க் கல்குமிசை வாகும்
மலைகெழு நாட மாவண் பாரி
கலந்த கேண்மைக் கொவ்வாய் நீஎற்
புலந்தனை யாகுவை புரந்த யாண்டே
பெருந்தகு சிறப்பி னட்பிற் கொல்லா
தொருங்குவரல் விடாஅ தொழிகெனக் கூறி
இனையை யாதலின் நினக்கு மற்றியான்
மேயினேன் அன்மை யானே ஆயினும்
இம்மை போலக் காட்டி உம்மை
இடையில் காட்சி நின்னோ
டுடனுறை வாக்குக உயர்ந்த பாலே. (புறம். ௨௩௬)

௨௦௫. புள்ளொலியைப் போக்க—பறவைகள் ஒலியெழுப்பி இடர் செய்யாதபடி அவற்றை அடக்க. கடி—மணம். கால்—காற்று. முடி—தலையோடு.

தொழுதனன் அறிவன் தாழ்ந்(து) அத் தூயசெந் தமிழ்மு தல்வி
எழுதரும் ஒளிகொள் தெய்வம் வருகென இயம்பி யேகிப்
பழுதரு பாரி முன்னஞ் சேர்த்தனள்; பாரி யோடு
முழுதுணா முதல்முன் சோத்தாள்; மூழ்கினன் இன்ப வெள்ளம். உ0சு

புலவன துடலைக் கண்டார்; புலன்களின் அழிவைக் கண்டார்.
மலரொடு பிறவுஞ் சூட்டி மண்மகள் மடியிற் சேர்த்தார்.
நலமிகு பாரி வேட்கும் நற்றமிழ்ப் புலவ னுக்கும்
இலகுகல் நாட்டி மாந்தர் எடுத்தனர் விழவு நன்கே. உ0எ

ஓரறி வுயிராம் முல்லைக் கூர்ந்ததன் தேரை ஈந்த
பாரியின் புகழைத் தொன்னூல் பகர்ந்தவா பகர்ந்தேன்; பின்னர்
மாரிபொய் யாத கொல்லி மலையினை யாண்ட வல்வில்
ஓரிமன் னவன்றன் சீரை உள்ளவா றுரைக்க றுற்றேன். உ0அ

ஆகச் செய்யுள் உசஎ

---

உ0சு. முழுதுணர்முதல்—எல்லாப் பொருள்களையும் ஒருசேர உணர்ந்தறியும் கடவுளாகிய சிவபெருமான்.

உ0எ. மண்மகள் மடி—நிலமகள் மடி. இலகு—விளங்குகின்ற. விழவு—விழா (திருவிழா).

# உ. வள்ளல் ஓரி வரலாறு

## கொல்லிமலைச் சிறப்பு

வருவா ரெவர்க்கு நிழலளிக்கும் ;
  மகிழ்ந்து குளிக்க நீரளிக்கும் ;
முருகார் கனிகாய் உவந்தளிக்கும் ;
  முடிக்க நறுமா மலரளிக்கும் ;
மருவார் சாந்த நனியளிக்கும் ;
  மணியு முத்தும் பலவளிக்கும் ;
தருவார் போலப் புலவோர்பால்
  தமிழுங் கொள்ளுங் கொல்லிமலை. க

## மக்கள் வாழ்க்கை

அகிலுஞ் சாந்து மழற்படுத்தங்
  கியானை மருப்பா லரணமைத்துத்
துகிலி னிழியு மலையருவித்
  தூநீர் பாய்ச்சிப் பயிர்வளர்த்துப்
பகலின் முத்தக் கவணோச்சிப்
  பாவை யன்னார் கிளிகடிய
நிகரில் தினையும் பிறவுமறுத்
  தில்லத் தெவரு நிரப்புவரே. உ

முயலும் வேங்கைக் குருளையுமுன்
  முடுக்கிப் பிடிப்பர் சிறுவர்பலர்.
அயிலு மம்புங் கொண்டேகி
  யடன்மா வடுவ ராடவர்கள்.
மயிலி னடந்து புனல்படிந்து
  மலர்கொய் தணிவார் மடமகளிர்.
எயினர் குறவர் போல்வலியார்
  இன்பந் துய்ப்பா ரெவரேயோ? ங

---

க. வருவார்—தன்னை வந்தடைபவர். முருகு—மணம். மரு—மணம்.

உ. சாந்து—சந்தனம். அழற்படுத்து—தீயினா லெரித்து. துகிலின் இழியும்—வெள்ளாடைபோல விழுகின்ற.

ங. குருளை—குட்டி. அடல்மா—வலிமைபொருந்திய விலங்கு. எயினர்—வேடர்.

## ஓரியின் வாழ்க்கை

கொல்லி வாழும் புலியீன்ற
குருளை யன்னான் வலியாதன்
மெல்ல மெல்ல நடைபயின்றான்;
விரும்பிக் கொடுக்குங் கொடைபயின்றான்;
கல்வி பயின்றான்; சிலைதேர்ந்தான்;
கடுகி யூரும் பரியூர்ந்தான்;
வல்விலோரி யெனப்புகழ
வாழ்ந்தா னுலக மிகமகிழ. ௪

சுருங்கச் சொல்லி விளக்கலையுஞ்
சொல்லும் பொருளு மினித்தலையும்
விரும்பி யுரைக்கும் பொருட்குவமை
வியக்க வெடுத்து விளம்பலையும்
மருந்தி னகலா மனநோயை
மாற்றி யின்பம் வழங்கலையுங்
கருங்கை மன்னன் கருத்திருத்திக்
கற்பான்; கேட்பா னற்றமிழே. ௫

பொற்பி னியைந்த மேனியினாள்
பொருப்பி னியங்கு மணங்கன்னாள்
கற்பி னுயர்ந்த காரிகையாள்
காதற் கொழுநது கருத்தொன்றி
நிற்கு நெறியி னுடனிற்க
நில்லா வுலகி னுடன்றொடரும்
பற்ப லறமன் பொடுபுரிவான்
படைத்த வுடம்பின் பயன்றெரிவான். ௬

வறிஞ னோக்கும் வயலென்ன,
மங்கை நோக்கு மகவென்ன,
அறிஞ னோக்குங் கடனென்ன,
ஆத னோக்கு வானுலகம்,

---

௪. குருளையன்னான்—குட்டியைப் போன்றவன். ஆதன்—ஓரி. சிலை—வில். கடுகியூரும் பரி—விரைந்து செலுததுமபடியான குதிரை.

௫. மனநோய்—மனத்திலுள்ள அறியாமையாகிய நோய். கருங்கை—வலிமையுடைய கை.

௬. பொற்பு—அழகு. பொருப்பின் இயஙகும் அணங்கு அன்னாள்—கொல்லிமலையில இயங்கித்திரிகின்ற கொல்லிப்பாவை போன்றவள். நில்லா உலகு—நிலையில்லா உலகு.

செறியு மன்பா லருகிருத்தித்
தேனு மூனு நனியருத்தி.
வெறிகொள் மலரு மணிகலனும்
விருப்பி னளிப்பான் புலவோர்க்கே. எ

முழவ மொலிக்கக் குழலிசைக்க
முதிரா மழலை யாழ்மிழற்ற
பழமுந் தேனு நிகராகும்
பாடும் பாண ரிசைகேட்பான்.
விழியிற் கையிற் கருத்துணர்த்தி
விறலி யாடு நடங்காண்பான்.
பொழிலு மலையு மனைவியொடும்
புகுவான்; விளையாட் டயர்வானே. அ

## வேட்டைக் கேகல்

(வேறு)

இவ்வாறுறை யும்போதினி லேவும்விலு மெடுத்துச்
செவ்வேள்வரை வேட்டையெணிச் செல்வானெனச் செல்வான்
ஒவ்வாநிறப் பன்மாமல ரொளிர்வானவி லென்ன
எவ்வாயினு மிலங்கும்வரைக் கொல்லிக்கத னிறைவன். கூ

புலவோர்புகழ் கொடையன்றமிழ்ப் புதல்வன்வர வறிந்து
நிலமாமகள் பலகூர்விழி கொடுகாண்பது நிகர்ப்ப
நலமார்கரு விளைதோன்றுவ. நங்கையிறும் பூதுற்(று)
இலகேர்மயிர் பொடித்தாலென எங்குந்திகழ் வனபுல். க0

கொன்றைமிளிர் பசும்பொன்விலை குவிக்கக்கழை யிணையா
நின்றங்கெழின் முத்தந்தரும்; நீள்காந்தளங் கெண்ணும்;
நன்றும்பழு துங்கண்கொடு நாடுங்கரு விளைதாம்;
சென்றங்குமிங் கும்வண்டுகள் செப்புஞ்சில குறையே. கக

---

எ. வறிஞனோக்கும்=வறிஞன்+நோக்கும். கடன்—கடமை. ஆதன்—ஓரி. வெறி—மணம்.

கூ. ஏவும்—அம்பும். செவ்வேள் — முருகன். வரை—மலை. ஒவ்வா நிறம்—ஒன்றோடொன்று மாறுபட்ட நிறம். எவ்வாயினும்—எவ்விடத்தும். கொல்லிக்கு அதன் இறைவன் செல்வான் என இயைக்க.

க0. நிலமாமகள் — நிலமாகிய மடந்தை. நங்கை — அந்நிலமடந்தை. இறும்பூதுற்று—வியப்படைந்து.

முதிரேனலின் புனம்வந்துதம் மொழியானமை வென்றார்
கதிர்போய்க்கவர் வாயென்றடை கிளியின்றிரள் கண்டு
நுதிவேலன கண்ணார்சிலை நுதலாரவை யிரிய
எதிர்வார்தமைத் தமரோட்டுதல் போலக்கவ ணெறிவார். கஉ

மாவின்கனி வெறுக்கிற்பல வின்றீங்கனி மாந்திக்
காவில்வளர் கொடியூசலிற் கடுவன்களித் தாடும்.
தாவிக்குதி கொள்ளுஞ்சில சாரன்மட மான்கள்.
மேவித்தினை தின்னுஞ்சில வேங்கைக்குடைந் தோடும். கங

கண்ணுக்கினி யனகாண்டொறுங் களிப்பான் ;வழி நடப்பான்.
வண்ணக்கலை மான்கண்டபின் மன்னன்செல றவிர்ந்தான்.
அண்ணல்சிலை வாங்கிக்கணை தொட்டான்.விரைந் ததுபோய்
மண்ணில்விழு முன்பற்பல மானூடுசென் றதுவே. கச

வெங்கட்புலி வேழத்தொடு வெகுளுமுழக் கொருபால்.
மங்குன்முழக் கொருபால்.எதிர் மதமாமுழக் கொருபால்.
கங்குல்வடி வென்னச்செலுங் கருமாமுழக் கொருபால்.
அங்கங்கெழு முழக்கம்வரக் கேட்டானட லரசன். கரு

முழக்கம்வரு வழிச்சென்றனன். முன்னின்றொரு கரியை
அழற்பெய்விழி யுழுவைவெகுண் டங்காந்தெதி ருருமப்
புழற் கொம்புடைப் புல்வாயுரல் போலுந்தலைக் கேழல்
வழிக்கட் செலக் கண்டான்;குறி வைத்தான்;கணை யுய்த்தான்.

காயுஞ்சுவைக் கனியும்பசுங் காம்புஞ்செழு வாழை
வீயின்மட லிலையைத்துளைப் பதுபோல்கணை விரையும்
காயுங்கரி பாயும்புலி கலைமான்கரு மாமேற்
போயங்குநில் லாமற்கழன் றுடமபின்புறம் புகுந்தே. கஎ

---

கஉ. நுதிவேலனகண்ணார் — கூரிய வேல்போன்ற கண்களையுடைய பெண்கள். சிலைநுதலார்—வில்போன்ற புருவத்தையுடைய பெண்கள். தமர்—சுற்றத்தார்.

கங. கடுவன்—ஆண் குரங்கு.

கச. செலறவிர்ந்தான் = செலல் + தவிர்ந்தான். (செல்லுதலை ஒழித்தான்.)

கரு. மங்குன் முழக்கு = மங்குல் + முழக்கு (மேகத்தினிடியோசை.) மதமா-யானை. கங்குல்—இரவு. கருமா—பன்றி.

கசு. அழற் பெய்விழி யுழுவை—நெருப்பை விடுகின்ற கண்களையுடைய புலி. அங்காந்து—வாயைத் திறந்து. புழற்கொம்புடைப் புல்வாய்—உள் துளையையுடைய கொம்புகளைக்கொண்ட மான். கணை—அம்பு.

கஎ. காய் முதலியன வாழைமரத்திலுள்ளவை. வீயின் மடல்—பூவின் மடல். கருமா—பன்றி. கணை துளைப்பதுபோல் போய்ப் புறம் புகுந்து விரையும் என இயைக்க. கரி முதலிய விலங்குகள் ஐந்தினுக்குமேற்பக் காய்முதலிய ஐந்திலக்குகள் கூறப்பட்டிருக்கின்றன.

## வன்பரணர் ஓரிவள்ளலைக் காணுதல்

விண்ணென்றொரு குரல்கேட்டனன்; விலங்கின்விளி கேட்டான்;
கண்ணின்முன மொருகூர்ங்கணை கடுகிச்செலல் கண்டான்;
எண்ணம்பல கொண்டான்; நிகழ் வென்னையென நின்றான்;
பண்ணுப்படப் பாடும்பல ருடன்வந்தவன் பரணன். ௧௯

சென்றக்கணை வாய்மண்ணிடைச் சேர்ந்தாழ்வுறப் புலவன்
கன்றும்பிணை யும்வந்துபோம் காட்டின்மெலப் போகி
நின்றங்கெவன் கணைதொட்டுமுன் னிற்போனென நோக்க
ஒன்றன்பினொன் றாப்பட்டபல் லுடல்கண்டனன் வியந்தான்.

வந்தானொரு வில்லன்மணி மாலையணி மார்பன்
சந்தார்தடந் தோளன்பெருந் தகைதானுயிர் கவர்ந்து
மைந்தோட்டிய பலமாவையுங் கண்டான்.வரு வார்க்குத்
தந்தேகுவ மெனநோக்குழித் தனைநோக்குதல் கண்டான். ௨௦

வடிவும்விளங் கணியும்விறன் மன்னன்னெனத், தன்னை
அடியானடந் தணுகுஞ்செய லருளாளனென் றியம்பக்,
கடிதேநடந் தடிமின்பறை; கையாற்றொடு மின்யாழ்:
எடுமின்பிரம் பிசைமின்வரி யென்றேயெதிர் சென்றான். ௨௧

அளவிற்கரு விகணின்றன; அவற்றாடெழுந் ததுபண்.
துளைகொளசெவி வழியாவிசை யுளத்திற்புகுந் தோறுங்
களிகூரசு ணம்போன்றனன்; கலுழிப்புனற் கலைவோன்
இளநீர்பரு குதல்போன்றன னிசையாளரை யெதிர்ந்தோன். ௨௨

பகரும்பணி னிசைகேட்டுளம் பதிப்பான்;பொருள் பார்ப்பான்.
மகிழுந்திறங் கண்டாரிசை வல்லார்தனை யறிந்து
புகழப்பெயர் மொழியின்முகம் புலர்வான்;அகங் குலைவான்.
மிகநாணுவன் மினனாணுற மின்னும்வடி வேலான். ௨௩

மன்னர்பல ருள்ளார் புகழ் மக்கள்பல ருள்ளார்.
உன்னைநிகர்ப் பாரில்லையென் றுரைப்பாருரைக் குகவான்.
தின்மின்கலை மானான்;பிழி தேனுண் ணுமி னென்று
பின்னுந்தனைப் புகழாவணம் பேசிக்கொணர்ந் தளிப்பான். ௨௪

---

௨௦. சந்து—சந்தனம். மைந்து—வலிமை.

௨௧. விறல்—வீரம். வரி—இசைப்பாட்டு.

௨௨. கலுழிப்புனல்—கலங்கல்நீர்.

௨௩. மினனாணுற = மினல் + நாணுற — மின்னலும் நாணங் கொள்ளும்படி.

கல்லின்வழி நடந்தீர்;கொடுங் காட்டின்வழிப் புகுந்தீர்;
அல்லல்பல கொண்டேகடந் தடைந்தீரிவண் போலும்.
நல்லூணறுந் தேனுண் ணுமு னவின்றீரிசை; அதுவுஞ்
சொல்லுந்திறத் ததுவோபல துறைமுற்றிய திறலீர்! ௨௫

## ஓரி பாணர்களைப் பிரிதல்

கனியுண்ணுமின்; காயுண்ணுமின்; கடும்பசி களைமின்;
தனியேயிவண் வந்தேனிடைத் தகவெண்ணிமிக் களிக்க
நனிபொன்மணி யில்லையென நன்பொன்மணி நல்கி
முனியன்மினென் றவ்வில்லவான் மொழிந்தான்.வழி நடந்தான்.

## பாணர்கள் ஓரியின் வில் திறமையைப் புகழ்தல்

(வேறு)

சென்றபி னிசைவல் லாளர் செம்மலைப் புகழ்ந்து செய்கை
நன்றுநன் றென்பார். அன்னா னயமிகு மொழிநன் றென்பார்.
தன்றிறங் கேட்டுச் சென்னி சாய்த்தன னென்பார். மாக்கள்
கொன்றது பரணன் கூறக் கேட்டனர் கூடிநின்றார். ௨௭

வலிமிகு யானை வீழ்ந்து மலையெனத் தோன்றல் காண்மின்.
புலியினைக் காண்மின்.ஆவி போயமான் பன்றி காண்மின்.
இலகுபூண் மார்பன் வில்லான் எத்தனை யம்பால் மாய்த்தான்?
கலைவலீ ரெண்மி னென்றான் கற்றவன் பரணன் மாதோ. ௨௮

குருதிசேர் புண்ணு டம்பு குன்றுறழ் கரிக்க ணில்லை.
வரியுடற் புலிமான் கண்ணும் வன்றியின் கண்ணு மில்லை.
ஒருகணை யுய்த்தான் போலும்; உருவியோ டிற்றுப் போலும்.
கருதுதோ றிறும்பூ துண்டாம்; காண்கவந் தென்றான் கண்டான்.

மண்ணுறு மாக்கள் பக்கல் வந்தனர் சிலர்முன் னின்று
புண்களைக் கண்டார். அம்பு போயமற் றைப்புண் கண்டார்.
அண்ணலெய் கணையு மொன்றே. அனைத்தையு மாய்த்த தொன்றே.
எண்ணுமக் கணையுங் காணோம். எங்குவீழ்ந் திருக்கு மென்றார்?

---

௨௫. துறைமுற்றிய திறலீர்—இசைத்துறையில் முற்றுப்பெற்ற திறமை யுடையவர்களே.

௨௬. தகவு—இசையின் தகுதி. முனியன்மின் — சினங்கொள்ளா தீர்கள்.

௨௭. செம்மல்—ஓரி. மாக்கள்—விலங்குகளை.

௨௯. குன்றுறழ் கரி — குன்றுபோன்ற யானை. வன்றி — பன்றி. இறும்பூது—வியப்பு.

கற்றவன் பாணன் முன்னங் கண்டவக் கணையைத் தேடப்
புற்றுடும் புயிரை யுண்டு புக்கவ ணிருக்கக் கண்டான்.
மற்றது கொண்டு காட்டி வலியது கணையோ? வில்லோ?
கொற்றவன் திறமை கொல்லோ? கூறுக வாராய்ந் தென்றான்.

கல்வியுந் திறலும் பெற்றான் கையினாற் றீண்டி னன்றி
நல்லிசை யாழின் பத்தர் நரம்பிடைத் தோன்றுங் கொல்லோ?
வல்லவ னெய்யி னன்றி வரிசிலை மாய்க்குங் கொல்லோ?
கொல்கணை மாய்க்குங் கொல்லோ கொற்றவன் றிறமீதென்றார்.

வழியிடைக் கண்டாம்; வள்ளல் மனையடை யாது செல்லல்
பழியென நினைந்தார்; மன்னன் படர்சிறு நெறியைப் பற்றி
எழிலிபெய் நீரி னன்மா சிகந்தபல் கருங்கல் பாகன்
கழுவிய கைம்மா வென்னக் காண்புறு வழியே போனார். ௩௩

பைந்தினைக் குரலுந் தேமாம் பழங்களும் பறித்துத் தின்னும்
மந்திகள் கண்டுந் தூசின் மலையிழி யருவி கண்டும்
சந்தன வேங்கைக் காவிற் றவழ்ந்துசென் றகிலு முத்தும்
உந்துநீ ராறு கண்டு முவகையி னடந்து சென்றார். ௩௪

மானின நிழலிற் றுஞ்ச மரையினந் தமைக்கண் டஞ்சத்
தேனினந் தளிகள் செல்லச் செழுங்கொடி மலர்ந்து நல்கக்
கானிடை மஞ்ஞை யாடக் கண்டுகண் டுவந்து பாணர்
வானிடைக் கொடிநு டங்கு மன்னவன் கோயில் சேர்ந்தார். ௩௫

## ஓரியைக் காணல்

உள்ளிட மகன்று பஃறூ ணெழுங்குறக் கொண்டு வண்ண
வெள்ளியங் குன்ற மென்ன விளங்கரண் மனையுட் சென்று
வள்ளலை வணங்கி மன்ன வாழ்கென வாழ்த்தி நெஞ்சைக்
கொள்ளைகொ ளிசைகள் பாடிக் கோனுளங் குளிர்வித் தாரே.

---

௩௨. சிலை—வில்.

௩௩. எழிலி—மேகம். மாசு—அழுக்கு. கைம்மா—யானை.

௩௪. குரல்—கதிர். தூசு—வெள்ளாடை.

௩௫. துஞ்ச—தூங்க. நுடங்கும்—அசைந்தாடும்.

௩௬. பஃறூண்=பல்+தூண்—பலவகைப்பட்ட தூண்கள்.

ஒன்னலர் பகழிக் கஞ்சா உரத்தினன் களிறு போல
இன்னிசை வயத்த னாகி யிருந்தனன்; இன்பந் துய்த்தான்.
அன்னவன் கொடையும் வில்லினாற்றலும் புகழ்ந்து வேழம்*
என்னுமின் சுவைகொள் பாவொன் றியப்பினன் பரணனென்பான்

புகழுரை கேட்கி னாணும் புரவலன் புலவ னன்பால்
பகர்தமிழ்ப் பாவைக் கேட்டுப் பணிந்தனன்; மிகம கிழ்ந்தான்.
அகமலர்ந் தடிசி லூட்டி யணிகலன் மணிப்பூ ணாடை
புகர்முகக் களிறு நல்கிப் போக்கினன் சின்னாட் பின்னர். ௩௮

பரிசில்பெற் றடைந்தார் வீடு; பாணர்தாம் பலர்க்குங் காட்டிக்
குரிசிலைப் புகழ்வார்; அன்னான் கொல்லியைப் புகழ்வார்; நாணசேர்
வரிசிலை வாங்கிப் பன்மா மாய்த்தமை புகழ்வார்; வந்த
கரிகளைக் கந்திற் சேர்த்துக் கவளமுண் பிப்பார்; காப்பார். ௩௯

காதணி கழுத்திற் பூட்டிக் கழுத்தணி காலிற் பூட்டி
மாதருந் தாமும் பார்த்து மயங்குவார். கறிசோ றுண்டு
போரணிந் துவப்பார். மீண்டும் பொருள்கொளற் கொணா. கற்ற(து)
ஏ(து)அதன் றிறமனன் கொல்லென் றெண்ணாத லொழிந்தார்; விட்டார்.

---

* வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
பேழ்வா யுழுவையைப் பெரும்பிறி துறீஇப்
புழற்றலைப் புகர்க்கலை உருட்டி உரற்றலைக்
கேழற் பன்றி வீழ வயல
தாழற் புற்றத் துடும்பிற் செற்றும்
வல்வில் வேட்டம் வலம்படுத் திருந்தோன்
புகழ்சால் சிறப்பின் அம்புமிகத் திளைக்குங்
கொலைவன் யார்கொலோ கொலைவன் மற்றிவன்
விலைவன் போலான் வெறுக்கைநன் குடையன்
ஆரந் தாழ்ந்த அம்பகட்டு மார்பிற்
சார லருவிப் பயமலைக் கிழவன்
ஓரி கொல்லோ அல்லன் கொல்லோ
பாடுவல் விறலியோர் வண்ண நீரும்
மண்முழா அமைமின் பண்யாழ் நிறுமின்
கண்விடு தூம்பிற் களிற்றுயிர் தொடுமின்
எல்லரி தொடுமின் ஆகுளி தொடுமின்

௩௭. ஒன்னலர்—பகைவர். பகழி—அம்பு. பரணன்
—வன்பரணன்.

௩௮. புரவலன்—அரசன். அடிசில்—சோறு. புகர்—புள்ளி.

௩௯. குரிசில்—ஓரி. கந்து—கட்டுத்தறி.

பழையதந் தொழிலை விட்ட பாணர்தம் நிலையைப் பார்ப்பான்.
உழையுலாங் கொல்லி மன்ன னோரியை நினைப்பான். நேர்ந்த
பிழையெணிப் பரண னாளும் பெருங்கவன் மனத்துட் கொண்டு
மழையணி குன்றத் தென்னும் வண்டமிழ் பாடி னானே.* ௪௧

## கழைதின் யானையார் வருகை

கல்வியில் வல்லன் தூயன் கழைதின்யா னையா னென்பான்
கொல்லிநா டாளு மன்னன் கொடைத்திறங் கேட்டு மெல்லச்
செல்லத ரறிந்து சென்று செம்மலைக் கண்டு தன்பால்
இல்லது மொழிந்து சொன்ன னீயென வென்னுஞ் செய்யுள்.†

---

பதலை யொருகண் பையென வியக்குமின்
மதலை மாக்கோல் கைவலந் தமினென்
றிறைவ னாகலிற் சொல்லுபு குறுகி
மூவேழ் துறையு முறையுளிக் கழிப்பிக்
கோவெனப் பெயரிய காலை யாங்கது
தன்பெய ராகலி னாணி மற்றியாம்
நாட்டிட னாட்டிடன் வருது மீங்கோர்
வேட்டுவ ரில்லை நின்னொப் போரென
வேட்டது மொழியவும் விடாஅன் வேட்டத்திற்
றானுயிர் செகுத்த மானிணப் புழுக்கோடு
ஆனுருக் கன்ன வேரியை நல்கித்
தன்மலைப் பிறந்த தாவி னன்பொன்
பன்மணிக் குவையொடும் விரைஇக் கொண்மெனச்
சுரத்திடை நல்கி யோனே விடாசிமை
யோங்கிருங் கொல்லிப் பொருநன்
ஓம்பா வீகை விறல்வெய் யோனே. (புறம் 152)

* மழையணி குன்றத்துக் கிழவ னாளும்
இழையணி யானை யிரப்போர்க் கீயும்
சுடர்விடு பசும்பூட் சூர்ப்பமை முன்கை
அடுபோ ரானா ஆதனோரி
மாரி வண்கொடை காணிய நன்றுஞ்
சென்றது மன்னெங் கண்ணுளங் கடும்பே
பனிநீர்ப் பூவா மணிமிடை குவளை
வானார்த் தொடுத்த கண்ணியுங் கலனும்
யானை யினத்தோடு பெற்றனர் நீங்கிப்
பசியா ராகன் மாறுகொல் விசிபிணிக்
கூடுகொ ளின்னியங் கறங்க
ஆடலு மொல்லார்தம் பாடலும் மறந்தே. (புறம் 153)

௪௧. உழை—மான். கவன் மனம்=கவல்+மனம். கவல்—கவலை.
௪௨. செல்அதர்—செல்லத்தகுந்த வழி. செம்மல்—ஓரி.

† ஈயென விரத்த லிழிந்தன் றதனெதிர்
ஈயே னென்ற லதனினு மிழிந்தன்று

சிலபக னல்லூ ஞூட்டிச் செவிச்சுவை கொள்ள வேட்டோன்
புலவர துரையைக் கேட்டுத் தன்னுளக் கருத்தைப் போக்கி
இலமெனப் பிறர்பான் மீட்டு மிரத்தலுக் கேகா வண்ணம்
பலமணி பசும்பொ னல்கிப் பரிவுடன் செலவி டுத்தான். சரு

## பிற்கால வாழ்க்கை

பகைவரை வென்று வாழ்வான் படைத்துணை யரசர் வேண்டின்
தகைபெறு தானை யோடு சார்ந்துபோர் வென்று மீள்வான்.
புகழ்மிகு மதிய னோடு புரிந்துநட் டுறவு கொள்வான்.
மிகுபுகழ் கொண்டு வாழ்வான் வேட்டுவக் குலத்து வேந்தன்.

தன்குடிக் கின்னல் செய்யான்; சார்ந்தசுற் றத்தா ராலும்
ஒன்னல ராலு நாட்டி லொளிந்துவாழ் கள்வ ராலும்
துன்னுபல் விலங்கி னாலுந் துயரடை யாமற் கொல்லி
மன்னவன் காவல் செய்வான்; மாணறம் புரிந்து வாழ்வான்.

நற்றமிழ்த் திறங்தெ ரிந்து நன்மைபற் பலபு ரிந்த
கொற்றவ னோரி வாழ்வைக் கூறினேன்: பின்னுஞ் சொல்வேன்.
செற்றமும் பகையுங் கொண்டு திரண்டுமுள் ளூரைச் சார்ந்த
பற்றலர் தம்மை வென்ற காரிசீர் பகர லுற்றேன். சசு

ஆகச் செய்யுள்: உகரு

---

கொள்ளெனக் கொடுத்த லுயர்ந்தன்று அதனெதிர்
கொள்ளே னெனற லதனினு முயர்ந்தன்று

* * * *

புள்ளும் பொழுதும் பழித்த லல்லதை
உள்ளிச் சென்றோர் பழியல ரதனால்
புலவேன் வாழிய ரோரி விசும்பிற்
கருவி வானம் போல
வரையாது கொடுக்கும் வள்ளியோய் நின்னே. (புறம் 204)

சரு. பரிவுடன்—அன்போடு.

சச. ஒன்னலர்—பகைவர்.

சசு. பின்—அதியமான் வரலாற்றில் கசுக ஆம் செய்யுள் முதலிய வற்றைப் பார்க்க. செற்றம்—சினம். பற்றலர்—பகைவர்.

# ௩. வள்ளல் காரி வரலாறு

## மலையமா னாட்டின் சிறப்பு

அண்மையில் வளர்குருந் தடைந்தி வர்ந்துபோய்
வண்மலர் மாலையின் மலர்த்தி மாடெலாந்
தண்மணம் பரப்புபைந் தளவஞ் சான்றது
பெண்ணைபாய் மலாடெனும் பெயர்கொ ளுடரோ. ௧

முதிர்கழை யசைத்துவெண் முத்தஞ் சிந்துவித்(து)
அதிர்கரி யுடனிடித் தாடிக் கோடுபோய்க்
கதிரவன் வெம்மையைக் களைய வெங்கணுஞ்
சிதர்பொழி முகிலுறு சிலம்பு கொண்டது. ௨

கயல்செலுங் காலுறை மேதி கன்றுதன்
அயல்வரல் கண்டுபா லருத்தும். நண்டுகள்
வயல்வளை நுழைந்துகண் வளரும். பேதைதன்
செயலெனத் தவளைதா லாட்டுச் செப்புமே. ௩

காதலன் வருகையைக் கண்டு வந்துமுன்
ஓதிய பாணனுக் கூட்டு மாதுபோல்
தீதில்வெங் கதிர்வரல் செப்பும் வண்டுணத்
தாதுறு மலர்நற வூட்டுந் தாமரை. ௪

## ஊர்மக்களியல்பு

வளமிகு மலையமா னாட்டின் மக்கடாம்
இளமையிற் பழகிய தொழிலை யெங்கணுந்
தளர்வறப் புரிந்துயர்ந் தொக்கல் தம்மொடுண்(டு)
உளமகிழ்ந் துறைதரு மூர்கள் பற்பல. ௫

## தலைநகரியல்பு

வாவியுஞ் சோலையு மதிலுங் கொண்டது ;
காவல னுறைவது ; கற்று ணர்ந்தபல்
பாவலர் புகழ்வது ; படைகள் வாழ்வது ;
கோவலூ ரென்பது கொடிகொள் மாநகர். ௬

---

௧. தளவம்சான்றது—முல்லைச் செடிகளை மிகுதியாகவுடையது.
௨. கழை—மூங்கில். சிதர்—துளி.
௩. மேதி—எருமை.

மாரியைப் போற்பொருள் வழங்கும் வண்மையாற்
பேரிசை கொண்டவன் ; பிறங்கு கேள்வியன் ;
போரினிற் புலியினைப் பொருவு மாண்மையன் ;
காரிதன் னாட்டினைக் காவல் செய்தனன். ள

கணவனே கடவுள் ; தற் காத்தல் தன்கடன் ;
உணவுநன் கூட்டுத லுவந்து செய்செயல் ;
குணமணி கலனெனக் கொண்ட மாதொடு
மணமல ரெனமன மினைந்து வாழ்ந்தனன். அ

மக்களைப் பெற்றனன் ; மனம கிழ்ந்தனன் ;
ஒக்கலைத் தழுவினன் ; கோலை யோச்சலில்
தக்கமன் னவனெனச் சாற்றத் தண்ணளி
மிக்கவ னிலமெலாங் காக்கும் வேளையில், கூ

கபிலர் வருகை

புலவரு மரசரும் புகழுஞ் சீர்த்தியன்
பலநிலம் புகுநதுபல் பரிசில் பெற்றவன்
இலகொளி மேனியன் கபில னின்றமிழ்
நலமறி மலையனைக் காண நச்சினன். க0

வளமிகு வாதவூர் கடந்து மாதுமாங்
குளிர்நிழ லிடைத்தினை குற்றும் பாட்டினைக்
கிளிகவர்ந் தகன்றுபோய்க் கிளந்து செம்மைசெய்
இளமர மிகுநெடு வழியி னேகினான். கக

நெடுமர வானகயி னெற்று மன்னர்கள்
அடுகளப் பறையென வார்க்கும் வெஞ்சுரச்
சுடுநெறி கடந்தனன் தூய செந்தமிழ்க்
கடலினைக் கடந்தவக் கபிலன் காலினே. கஉ

போனகா தலர்சொலார் பொய்ம்மை ; கொன்றையங்
கானமு நின்னொடு காரென் றோதினும்
நானுடன் படுவனோ நன்னு தாலெனும்
மானுரை கேட்டுள மகிழ்ந்து சென்றனன். கங

---

எ. மாரி—மேகம்.

கூ. ஒக்கல்—சுற்றத்தார். கோலை ஓச்சலில் — செங்கோல் செலுத்து வதில்.

கக. கிளந்து—சொல்லி.

கஉ. அடுகளம்—பகைவரை வென்றகளம்.

முல்லைவெண் முகையிவை ; முழங்குங் கொண்டலீ(து) ;
இல்லிருந் திளைவளெம் மிலங்கு பொற்றொடி ;
ஒல்லையிற் பாக!மா வோட்டென் னும்பெருஞ்
செல்வனின் சொல்லையுங் கேட்டுச் சென்றனன். கச

வெண்குரு காரலை விருப்பிற் றேர்ந்துண்ணும்
பண்ணைக ளெங்கணும் பாய்ந்து நெல்லையும
கண்ணுறு கரும்பையும் வளர்க்குங் காலுடைப்
பெண்ணைநா டடைந்தனன் பெரிது வந்தனன். கரு

தாவுபல் லரிகடித் துரைத்துந் தண்பணைக்
காவியை மிதித்தெழிற் கருமமை யுண்டுபின்
பாவடி யெருமைகள் படர்ந்து மூழ்குறும்
வாவிகள் கண்டனன் வழிநடந்தனன். கசா

அள்ளலஞ் செறுவிற்செவ் வாம்பல் வாய்நெக
ஒள்ளெரி நீரிடை யுற்ற தென்றுபல்
புள்சிறைக் கைகளாற போர்த்துப் பார்ப்பினைக்
கொள்வன கண்டுளங் குளிர்ந்து சென்றனன். கஎ

தண்டமிழ் நாட்டினுஞ் சார்ந்த நாட்டினுங்
கொண்டபண் டங்களைக் கொணரும் பற்பல
வண்டிகள் தான்செலும் வழியிற் சேறலைக்
கண்டனன். அவற்றையுங் கடந்து சென்றனன். கஅ

இல்லவர்க் கூணுடை யீயுங் கம்பலை
நல்லற நெறிகளை நவிலுங கமபலை
கல்வியின் பெருமையைக் கழறுங் கம்பலை
மல்லர்க ளெதிரெதிர் மலையுங் கம்பலை ககூ

பரியையுங் கரியையும் பழக்குங் கம்பலை
புரிகுழ லார்க்கிசை புகட்டுங் கம்பலை
இருசெவி யினும்படக் கேட்டின் பெய்திநீள்
தெருவினி னடந்துபோய்க் கோயில் சேர்ந்தனன். உ0

---

கச. கொண்டல்—மேகம். இளைவள்—வருந்துவாள்.

கரு. பண்ணை—வயல். கால்—கால்வாய்.

கசா. அரி—தவளை. பாஅடி—பரந்த அடி.

கஎ. அள்ளல்—சேறு. செறு—வயல். வாய்நெக—மலர. பார்ப்பு—குஞ்சுகள்.

ககூ. கம்பலை—ஒலி.

உ0. புரிகுழலார்க்கு—முடித்த கூந்தலையுடைய இளம் பெண்களுக்கு.

பொன்னையும் பொருளையும் பொருவில் தேரையும்
மன்னவ னுண்மகி ழிருக்கை வந்துதன்
முன்வரும் கூத்தர்தென் மொழியில் வல்லவர்
இன்னிசை பகர்பவர்க் கீதல் கண்டனன். உக

அரசனை யணுகினன் புலவன்; ஐய! நீ
பரிசில்கொள் கெனத்தரும் பரிசில் பல்லவால்;
வரிசையை யறிகிலை; வழங்க றிங்கென
ஒருதிசை யொருவனென் றுருசெய் யுட்சொனான்.* உஉ

நவின்மொழி கேட்டவம் மன்ன னன்று; நீ
இவண்சில பகலுறை யெம்மொ டென்றனன்.
உவகையி னறுசுவை யுணவ ருத்தினன்.
அவனொடு பழகினன். அன்பின் வாழுநாள், உ௩

## தமிழியல் புரைத்தல்

கற்றறிந் தடங்கிய கபிலன் பாவலன்
நற்றமிழ்த் திறஞ்சில நவில வெண்ணியெங்
கொற்றவ! தமிழ்மொழி கூறற் கின்மொழி;
மற்றவை வன்மொழி, வரம்பு றுமொழி. உச

கண்ணினுற் பார்ப்பன கருத்திற் காண்பன
உண்மையைத் தமிழறி வுறுத்து மேயலால்
எண்ணிய வாறெலா மின்மை யைச்சொலி
மண்ணிடை மாந்தரை மயக்க லில்லையால். உரு

---

உக. நாள மகிழிருக்கை—பகற்காலத்து மகிழ்ந்திருக்கும் ஓலக்கம்.

உஉ. வரிசை—(ஒருவருக்கும் மற்றொருவருக்குமுள்ள) மேம்பாடு.

* ஒருதிசை யொருவனை யுள்ளி நாற்றிசைப்
பலரும் வருவர் பரிசின் மாக்கள்
வரிசை யறிதலோ வரிதே பெரிதும்
ஈதல் எளிதே மாவண் தோன்றல்
அதுநற் கறிந்தனை யாயின்
பொதுநோக் கொழிமதி புலவர் மாட்டே. (புறம் 121)

உச. இன்மொழி—இனிய ஒலியையுடைய மொழி.
வன்மொழி—வல்லோசை மிகுந்த மொழி.
வரம்பு—இலக்கண வரம்பு. 'கணணுதற் பெருங் கடவுளும்' என்ற திருவிளையாடற் செய்யுளை நோக்குக. மற்றவை—வடமொழி முதலியன.

உரு. கண்ணினுற் பார்ப்பன—காட்சிப் பொருள்கள். கருத்திற் காண்பன—கருத்துப் பொருள்கள். இன்மை—இயற்கைக்கு மாறுபட்டவை. அவை: மலைக்குச் சிறகுகளிருந்தன. வானத்திலிருந்து கங்கை கொண்டுவரப்பட்டது என்றாற்போன்ற புராணக் கொள்கைகள்.

ஒலியெழு முறைமையி லெழுத்து ரைக்குமால்.*
சிலவொலி யெழுத்தினன் மொழிகள் சேர்க்குமால்.†
உலகிய லறிந்துநல் லறமு ரைக்குமால் ‡
பலதொழிற் றிறமெலாம் விரித்துப் பன்னுமால் § உசு

பிறமொழி யாவையும் பேசக் கேட்டிலேம்.
புறமக மென்பன பொருளி யல்வகை.
மறமிகு மன்னர்போர் வாழ்க்கை நன்புறம்.
உறவுகொள் காதல ருவகை வாழ்வகம். உஎ

புறத்தையு மகத்தையும் புரிந்து கற்றலிற்
சிறப்பொடு வாழ்திர்நீர். செந்த மிழ்த்திறம்
மறக்கினிம் மாநில மடமை யுற்றிடும;
பிறர்க்கடி மைப்படும்; பீடி ழந்திடும். உஅ

என்றெடுத் துரைத்தன னிறைவ னுக்(கு)அவன்
ஒன்றிய வதனதன் திறமு மோதினன்.
நன்றுநன் றின்றமிழ் நலம்;நின் நாநலம்
என்றுரைத் தனனர(சு). இன்ப மெய்தினன். உகூ

பொன்னிழை யுடையுடு; பொலியு முத்தணி;
தென்மொழிப் புலவநீ சிறக்கப் பூணெனப்
பன்னினன்; பூட்டிய பின்னும் பற்பல
மின்னவி ரணிகலம் வெறுப்ப நல்கினன். ௩0

திண்பரி நான்குமுன் பிணித்த சீர்கெழு
வெண்மருப் பாலியல் விளங்கு தேர்கொடுத்(து)
அண்ணலப் புலவனை யேற்றி னான்;அவன்
எண்ணிய பரிசில்பெற் றேமென றேறினான். ௩க

---

உசு. * தமிழ் நெடுங்கணக்கி லமைக்கப்பட்டிருக்கு முறையே ஒலி எழும் முறை. அம் முறையின் சிறப்பைச சிவஞான முனிவரால் திருத்தப்பட்ட நன்னூல விருத்தியிற் காணக. ஆங்கில நெடுங்கணக்கு அங்ஙனமில்லாமை காணக.

† தமிழ்ச் சொற்கள் ஓரெழுத்தாலும் ஈரெழுத்தாலும் மூவெழுத்தாலும் பெரும்பாலும் அமைந்திருத்தல் காண்க.

‡ திருக்குறள் முதலிய நீதிநூல்களைக் காண்க. மனுதருமநூல் அங்ஙமிலலாமை காண்க.

§ நானில மாக்கள் தொழில்களைப் புறநானூறு அகநானூறு முதலிய நூல்களிற் காண்க.

உஅ. வாழ்திர்—வாழ்கின்றீர்கள். மடமை—அறியாமை. பீடு-பெருமை. உடைஉடு—ஆடையை உடுத்திக்கொள். வெறுப்ப—வேண்டா என்று வெறுப்புக் கொள்ளும்படி.

௩க. வெண் மருப்பு—வெண்ணிறமுடைய யானைத்தந்தம்.

இவர்ந்தவன் மன்னவன் பிரிவுக் கேங்குவான்.
அவன்றமிழ்ப் புலவனின் பிரிவுக் கஞ்சுவான்.
உவந்தவர் வருந்தினர். பாக னோட்டினான்.
நவின்றனன் கபிலனன் னாளன் றென்பது* ௩௨

## நப்பசலையார் வருகை

கழியலை யசைதொறும் நெய்தல் காரிகை
விழியென வசையுமா றேக்க மீதினே
பிழையறக் கற்றுணர்ந் தடங்கிப் பேரற
வழிநடந் திசைபெறு மக்கள் பற்பலர். ௩௩

பெண்மையிற் பெரியள்நப் பசலைப் பேரினள்
அண்ணலின் வண்மையைக் கேட்ட டைந்தனள்;
நண்ணினள் குரிசிலை; நயந்தொன் னோரென†
வண்மையைப் புகழ்ந்தனள்; வரவைக் கூறினள். ௩௪

வேண்டிய பரிசிலை விருப்பி னீந்துதன்
மாண்டகு மனைவிபால வருகென் றின்மொழி
ஆண்டகை யுரைத்தழைத் தவட்குக் காட்டினன்.
காண்டலும் நீரைநீர் கலந்த தாயினர். ௩௫

பரிவொடு நல்லுரை பகர்ந்து பாநவில்
அரிவைதன் வாழ்க்கையைக் கேட்ட றிந்தனள்;
உருகினள்; உணவுநன் கூட்டி னாள்;பினும்
பொருள்கொடுத் துய்த்தனள் வந்த பூவையை. ௩௬

---

௩௨. இவர்ந்தவன்—தேரிலேறிய கபிலன்.

* நாளன்று போகிப் புள்ளிடை தட்பப்
பதனன்று புக்குத் திறனன்று மொழியினும்
வறிது பெயர்குவ ரல்லர் நெறிகொளப்
பாடான் றிரங்கும் அருவிப்
பீடுகெழு மலையற் பாடி யோரே. (புறம் 124)

௩௪. வரவைக் கூறினள்—வருகைக்கான காரணத்தைக் கூறினள்.

† ஒன்னார் யானை யோடைப்பொன் கொண்டு
பாணர் சென்னி பொலியத் தைஇ
வாடாத் தாமரை சூட்டிய விழுச்சீர்
ஓடாப் பூட்கை யுரவோன் மருக
... ... ... ...
இன்மை துரப்ப இசைதர வந்துநின்
வண்மையிற் றொடுத்தனம் யாமே. (புறம் 126)

## ஆரியர் போரிட வருதல்

ஊசியின் னேசெலு மொள்ளி ழையென
மாசிலாக் காதலி மன்னன் பின்செலப்
பேசுறு நல்வினை பேணி னான்;உல(கு)
ஆசெனத் தானிருந் தரசு செய்யுநாள், ஙஎ

(வேறு)

ஆயுஞ் சூழ்ச்சியொன் றில்லவர் பகைவர்முன் னணுகின்
மாயு மைந்தினர் வளமிகு வண்டமிழ் மொழிமேற்
காயுஞ் சொல்லினர் கரியெனப் பருத்தவர் கயமை
தோயு நெஞ்சினர் ஆரிய ரெனத்தமைச் சொல்வோர் ஙஅ

சேரர் செம்பியர் தென்னர்தம் மேற்கொளுஞ் சினமோ?
பாரு மக்களுந் தோன்றிய காலத்தே பகரும
பேரு மின்சொலும் பெற்றசெந் தமிழிடைப் பிணக்கோ?
வீர ருஞ்சில மன்னரு மெழுந்தனர் வெகுண்டே, ஙகூ

பொங்க ரூடுசெல் பெண்ணைபல் கால்கொடு போகி
எங்க ணும்பயிர் வளர்ப்பதெவ் வாறெனக் காணக்
கங்கை யார்ப்பொடு தென்புலம் படர்வது கடுப்பச்
செங்கை வேலின ரார்ப்பொடு படர்ந்தனர் தெற்கே. ௪0

பறைமு ழங்கின; சங்கின முழங்கின; பரிய
கறைய டிக்கரி முழங்கின; முழங்கின கலிமா;
அறைக ழற்பெரு மன்னர்தம் பின்வர வதிர்ந்து
முறையிற் சென்றன நாற்பெரும் படைகளு முன்பே. சக

நிலையி னீங்கலா நெடுமுடி மலைகளும் நிரைகொள்
கலையும் வேழமும் வேங்கையுந் திரிதரு காடும்
அலையு நீரிடை வேலெனச் சேல்செலு மாறுங்
குலைநெல் லோங்கிய கழனியுங் கடந்தனர் கூடி. சஉ

---

ஙஎ. உலகு ஆசு என—உலகத்தார் தங்களுக்குப் பற்றுக்கோடு என்று சொல்லும்படி.

ஙஅ. காயும்—வெகுளும்.

ஙகூ. செம்பியர்—சோழர். பேர்—பெருமை.

௪0. பொங்கர்—சோலை. தென்புலம் படர்வது கடுப்ப—தென்னாட்டுக்கு நடப்பதைப்போல.

சக. பரிய — பெரிய. கறையடி — கறைபொருந்திய அடி, உரல் போலும் அடி எனினுமாம். கலிமா—குதிரை.

சஉ. கலை—கலைமான். கழனி—வயல்.

விந்த நீங்கினர்; வேங்கட நீங்கினர்; விளங்கு
செந்த மிழ்நில மணுகினர்; சிலநகர் கொண்டார்;
முந்த திர்ந்துபன் முரசுகள் செலமன முரணி
மைந்த ருந்திறன் மன்னரு நடந்தனர் வழியே. ௪௩

வள்ளு கிர்ப்புலி வாழ்முழை சென்றுயிர் மாய்க்க
உள்ளி மானின முருத்தெழுந் தணைதலி னுளத்தே
கள்ள மிக்கவ ராரியர் காரிதன் முள்ளூர்
மெள்ள வந்தனர் எழுப்பினர் செருப்பறை விரைந்தே. ௪௪

## காரியின் சீற்றம்

(வேறு)

கண்டா ரோடிக் காவலன் முன்னங் கடுகிப்போய்
வண்டார் மார்ப ஆரிய மன்னர் வடநாட்டார்
தண்டே னூற்றுந தண்டலை முள்ளூர் தனைச்சூழ்ந்து
கொண்டா ரென்று கூறினர். கேட்டுச் சினங்கொண்டான். ௪௫

தின்றான் பல்லைச்; சென்னியசைத்தான்; சிரித்தான்மன்;
தன்றோள் கொட்டி நின்றுவி ழித்தான் தழல்சிந்த.
வென்றீ ரோசெந் தமிழரை முன்னம் வடவேந்தீர்!
இன்றே வெல்வீர்? நாளையே காண்பீ ரெனச்சொல்வான். ௪௬

சேர ரல்லீர். செம்பிய ரல்லீர். அவர்தாமும்
வீரங் காண்பர். எம்படை வேண்டி விரைவாரே.
கூரம் பேவிக் கூற்றுயிர கொள்ளக் குறித்தீரே.
வாரம் பாடின் ஊர்பல கொண்டு மகிழ்வீரே. ௪௭

கொடையில் வல்லா ரென்றெவர் நம்மைக் குறிக்கின்றார்?
நடையில் வல்லா ரென்றெவர் நம்மை நவில்கின்றார்?
படையில் வல்லா ரென்றெவர் நம்மைப் பகர்கின்றார்?
கடையீர்! நீவிர் காவல ரென்று கருதேமே. ௪௮

ஆற்றல் காட்ட ஆரிய ரேயிங் கடைந்தீரோ?
மாற்றார் வந்தா லோடுவ ரோதென் வளநாட்டார்?
தோற்றால் வாழேம்; இன்றெனி னும்மைத் துணித்தேமென்(று)
ஊற்ற மிக்கான் கூற்றெனக் கூறி யுருத்தானே. ௪௯

௪௪. வள்ளுகிர்—கூரிய நகம். முழை — குகை. செருப்பறை—போர்ப் பறை.

௪௫. கடுகி—விரைந்து. தண்டலை—சோலை.

௪௬. தன்றோள் = தன் + தோள். தழல்—நெருப்புப்பொறி.

௪௭. வாரம் பாடின்—பாணரைப்போல் இசைப்பாட்டுப் பாடிவந்தால்,

௪௯. மாற்றார்—பகைவர். ஊற்றம்—வலிமை.

## காரி போருக்குப் புறப்படல்

(வேறு)

பறைமு ழக்கென மன்னவன் பன்னினன்.
அறைமு ழக்கெழுந் தெங்கணு மார்த்ததே.
உறையு டோறு மிருந்தவ ரோடிவந்(து)
இறைவன் கட்டளை கேட்டன ரின்பொடே. ௫0

மள்ளர் கூடுவர். மைந்தர் களிகொள்வர்.
உள்ள முந்த வுரைப்பர் தமர்க்கெலாம்
கள்ளுண் டாரிற் களித்துவில் வேலொடு
கொள்வ கொண்டு குதித்து நடந்தனர். ௫௧

வாளை பாயு மடுவின் முழுகிநல்
வேளை பார்த்து விரைவர் பலர்.முனம்
ஆளை மாய்த்தடன் மாவடு வேனெனச்
சூளு ரைத்துத் துணிந்துசெல் வார்பலர். ௫௨

புதல்வ ரில்லவர் மாழ்கிப் புலம்புற
முதிய மாதர்தம் மக்களை முன்னழைத்(து)
எதிரும் யானை குதிரை யெறிமினோ
நுதிகொள் வேலினா லென்று நுவல்வரே. ௫௩

பீடு மன்னன் வழிநின்று பெண்ணைபாய்
நாடு காப்பதும் நற்றமிழ் காப்பதும்
நீடு சீர்த்தி நிலவந டப்பதும்
ஆட வர்க்கழ காமென் றறைவரே. ௫௪

இன்னே வம்மி னெனக்கொடி யாடுறும்
மன்னன் வைகும் வளமிகு கோயிலை
முன்ன முன்ன நுமக்கென முந்துவர்
மின்னி லங்குவேற் கையுடை வீரரே. ௫௫

பல்லி யங்கள் செவிடு படுத்துமே.
கொல்க ளிற்றினங் கூற்றிற் பிளிறுமே.
மல்லர் சொல்லிடி மானும். பிறவொலி
எல்லை யிற்கடற் பேரொலி யேய்க்குமே. ௫௬

---

௫0. பன்னினன்—சொன்னான். அறை முழக்கு—அறைதலாலெழும் ஓசை.

௫௨. அடன்மா=அடல்+மா—வலிமையுடைய யானை குதிரை. சூள்—வஞ்சினம் (சபதம்).

௫௩. மாழ்கி—வருந்தி. எறிமின்—வெட்டுங்கள்.

௫௬. பல்லியம்—வாத்தியம். ஏய்க்கும்—ஒக்கும்

முறையிற் செல்கென் றிறைவன் மொழிதலுஞ்
சிறைக டந்து திரைக்கடல் செல்லல்போல்
பறைமு ழக்கொடு தானை படர்ந்தது.
இறைவன் வெல்கென் றியம்பின ரூரினர். ருஎ

தோளிற் பூண்கள் சுடர வலிமிகு
காளை காரிதன் காரிமீ தேறினன்.
தூளி செல்லுந் துறக்கமொன் னாருயிர்
நாளை நண்ணுமா லென்று நவிலவே. ருஅ

குடைநெ ருங்கலிற் கூடு மிருளையொண்
படைய கற்றிப் பகல்செயும். பாய்பரி
நடையி னாலெழுந் தூளி நனைந்துசே(று)
அடைய மாமத மூற்றுமா லியானையே. ருகூ

(வேறு)

வெற்றிகொள்வம்; வெற்றிகொள்வம்; வம்மின்; வம்மின் வீரர்காள்.
கற்ற றிந்த விற்றி றத்தைக் காட்ட வின்று வம்மினோ.
நற்ற மிழ்க்கு லத்தீர் வந்த நஞ்சு போலு வார்தமைச்
செற்று வெற்றி கொள்ள வம்மின்; சேர்ந்து வம்மின்; வம்மினே.

வன்மை யற்ற நாட்டி லஞ்சு மக்க ளாய்ப்பி றந்திலம்.
இன்மை யுற்று டன்மெ லிந்தி கழ்வ டைந்தி ருந்திலம்.
பொன்னை நச்சிப் போரை யஞ்சு பூவை யால்வ ளர்ந்திலம்.
சென்மின், சென்மின்; வெற்றி கொள்வஞ் செந்தமிழ்த்தாய் மைந்தர்காள்

வாள்க ளுண்டு. வேல்க ளுண்டு. வல்வி லுண்டு.முன் செலும்
தாள்க ளுண்டு. தோள்க ளுண்டு. சாவஞ் சாநெஞ் சம்முண்டு.
கோள்க ணாள்க டாமென் செய்யும்? கூற்றம்வந்தெ திர்க்கினும்
மீளன் மின்னோ. வெல்லி னன்றி மீளன் மின்னோ வீரர்காள். சூஉ

---

ருஎ. சிறை—கரை. தானை—சேனை.

ருஅ. தூளி—தூசி. துறக்கம்—வானுலகம். ஒன்னாருயிர்—பகைவருயிர். தூளி நவிலத் துறக்கம் செல்லும் என இயைக்க.

ருகூ. பகல்—ஒளி. தூளி—தூசு.

சூக. இன்மை—வறுமை. பூவையால்—பெண்ணினால்.

சூஉ. சாவஞ்சா—இறப்பதற்கு அஞ்சாத. கோள்கணாள்கடாம்=கோள்கள்+நாள்கள்+தாம். கோள்கள்—ஞாயிறு முதலியன. நாள்கள்—அசுவினி முதலியன.

(வேறு)

என்று மள்ள ரிசையொடு பாடிமுன்
சென்று சென்று சிலபதி தாண்டினர்.
பின்றொ டர்ந்தன பீடு நடைப்பரி.
குன்று போல நடந்தன கோட்டுமா. ௬௩

கழனி தாண்டினர். காலி னடந்துபோய்.
நிழனி வந்த நெடும்பொழி னீங்கினர்.
வழியி னேகி வளங்கொண்முள் ளூரடைந்(து)
அழல்வி ழிக்கட் படமுனிந் தார்த்தனர். ௬௪

இருவர் தானையுங் கூடி யெதிர்ந்தன.
ஒருவர் முன்னொரு வர்விரைந் தோடினர்.
பெருகு வெஞ்சினங் கொண்டுரை பேசினர்.
கருவி ழிக்கட் கனலுகுத் தேகினர். ௬௫

திரைபு ரண்டு திரிகடன் மீன்களாம்
இரைகண் டேகி யெறியுஞ் சுறவினில்
விரைம லர்புனை வீரர் வெகுண்டுசில்
உரைப கர்ந்துயி ருண்பர்மாற் றாரையே. ௬௬

ஓடி யோடி யுருத்து மலைந்தனர்.
கூடிச் சென்றெதிர் வார்தமைக் கொன்றனர்.
தேடித் தேடிச் சிலரைச் சிதைத்தனர்.
சாடி மாய்த்தனர் குத்தியுஞ் சாய்த்தனர். ௬௭

வாளு ருத்து வயவ ரெறிதொறுந்
தாளுந் தோளுமற் றேபலர் சாய்வரால்.
ஆளுங் கொய்யுளை மாவு மலமந்து
மாளும் வண்ண மிதிக்கு மதகரி ௬௮

சென்று சென்று தலைகளைச் சீவுவர்.
நின்று வில்லி னெடுங்கணை யேவுவர்.
கன்றி யோடிக் கரிபரி யாட்களைக்
கொன்று கொன்று குவிப்பர் நிலத்தினே. ௬௯

வியக்குந் தோறும் வியப்பினைச் செய்யுமே
செயிர்த்து மள்ளர் செலுத்திய வெம்படை.
வயிற்றிற் கண்களின் மார்பினிற் றைத்தலின்
உயிர்த்து நின்றன ரொன்னல ராரியர். ௭௦

---

௬௪. காலின்—கால்களினால். காற்றைப்போல எனினுமாம்.
௬௬. எறியும்—கொல்லும். மாற்றார்—பகைவர்.
௬௭. உருத்து—வெகுண்டு. ௬௮. கொய்யுளைமா—குதிரை.

மறவ ரிங்ஙன மண்டி யெறிவரேல்
இறைவன் வந்திடி னெங்ங னெறிவனோ ?
அறிவி லாம லடைந்தோம். உயிரினைப்
பறிகொ டுத்தன மென்று பகர்வரே. எக

நாடு வெளவு நசைகொண்ட வேந்தர்காள்
ஏட லர்த்தொடை யெங்கோன்சீர் கேண்மினோ.
கூடி வந்த குலமன்னர் தோற்றுமுன்(பு)
ஓடி யுய்ந்தனர் காரிவே லொன்றிற்கே. எஉ

கோவல் வேந்தன் மலையன்செங் கோலினன் ;
பாவல் லார்புகழ் பண்பினன் ; தெவ்வர்தம்
ஆவுஞ் செல்வமு மெங்கட் களிப்பவன் ;
நீவிர் நும்முயிர் வேண்டின்மு னில்லன்மின் எந

மன்ன னின்னே வருகுவன் ; வந்ததும்
கன்னி கர்க்கு மவன்றிண் டோள் காணுமின் ;
மின்னிற் பாய்ந்துகொல் வேல்வலி காண்மினென்(று)
அன்ன வன்படை யண்ண லியம்பினன். எச

காரி போரிடல்

போரி னெஞ்சம் புகுந்த புரவலன்
காரி தூண்டினன் காலின் விரைவென.
நீரி டைப்படு மம்பி நிகர்ப்ப வஃ(து)
ஆரி யப்படை யார்கலி யுற்றதே. எரு

காலெ டுப்பதும் வைப்பதுங் கண்டிலர்
மேலெ ழுந்து விரையுஞ் சுழல்வளி
போல நான்கு புறத்துஞ் சுழலுமே
வேலெ டுத்தகை வேந்தன் விடுபரி. எசு

மலையன் பாய்பரி கண்ட வடவர்கள்
கொலைசெய் கூர்ம்படை கொண்டு மலைந்தனர்.
பலகை யாற்படை மாற்றிப் பகைவர்மேல்
இலையி னன்னவே லுய்த்தன னேந்தலே. எஎ

---

எஉ. நசை—அவா. ஏடு அலர் தொடை—இதழ்களையுடைய பூக்களால் கட்டப்பட்ட மாலை.

எந. கோவல்—கோவலூர். தெவ்வர்—பகைவர்.

எச. கன்னிகர்க்கும் = கல் + நிகர்க்கும்—கல்லை ஒக்கும். படையண்ணல்—படைத்தலைவன்.

எரு. அம்பி—தோணி. ஆர்கலி—கடல்.

எசு. சுழல்வளி—சூறுவளி.

## ஆரியர் தோல்வி

கூரி லங்குவேல் கொண்டு முருகெனுங்
காரி மன்னவன் கன்றி யெறிதொறும்
ஆரி யப்படை யாடி யுலவைமுன்
பாரிற் பட்ட பதரிற் பறந்ததே.* எஅ

கடக்க ருஞ்செங் களத்தே வுரத்தொடு
விடற்க ரும்பெரு மானமும் விட்டனர்.
வடக்கி ருப்பவர் போல்வடக் கோடினர்
உடற்க ணையுறு பற்றுடை யொன்னலர். எகூ

வில்லை மண்ணிடை வீசினர் மேவலர் ;
கொல்லும் வேலையுங் கோலையுந் தள்ளினர் ;
புல்லுங் கோலும் பிடித்தனர் ; போயினர்
கல்லு முள்ளுந்தங் கால்களில் தைக்கவே. அ0

ஆர்த்து மள்ள ரரசனை வாழ்த்தினர்.
போர்ப்பு றம்பறை விம்மப் புகழ்ந்துமுள்
ளூர்க்க ணுள்ளவ ரேத்த வுவப்பொடு
சீர்த்தி மன்னவன் சின்னா ளிருந்தனன். அக

மின்னு மன்னமும் வீதியி னின்றெனத்
துன்னி நின்றலர் தூவி மகளிர்தம்
மன்ன னையெதிர் கொள்ள மறவரோ(டு)
அன்ன வன்மீண் டடைந்தனன் கோயிலே. அஉ

## பிற்கால வாழ்க்கை

சிறுவர் மாட்டுக் கலைகள் சிறக்கவும்,
அறிஞர் மாட்டற மன்பு பெருகவும்,
நிறைம டந்தையர் மாட்டு நிலைக்கவும்,
வறுமை நீங்கவு மன்னன்கோ லோச்சினான். அங

---

எஅ. ஆடி உலவை—ஆடிக்காற்று. பதர்—நெற்பதர்.

*"ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்
பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது
ஒருவேற் கோடி யாங்கு" (நற்றிணை 170)

எகூ. உறுபற்று—மிகுந்த பற்று. ஒன்னலர்—பகைவர்.

அ0. மேவலர்—பகைவர். கோல்—(1) அம்பு. (2) ஊன்று கோல்.

மற்ற வன்பெற்ற மக்க ளிருவரும்
நற்ற மிழ்கற்று நல்லறி வெய்தினர்.
விற்ப யிற்சியும் பெற்றனர். வேந்தன், அக்
கற்ற மக்களைக் கண்ணெனக் கொண்டனன். அச

தன்னை வென்ற தகடூ ரதியனைப்
பின்னர் வென்றுதன் னுடைலாம் பெற்றனன்.
நன்மை பற்பல செய்தனன் ; நற்றமிழ்
அன்னை காட்ட இறைதா ளடைந்தனன். அரு

கோவ லூர்மன்னன் வாழ்க்கையைக் கூறினேன்.
பாவி னுற்பின் விரித்துப் பகர்வனுல்.
தாவி லாத தகடூ ரதியர்தங்
கோவின் வாழ்க்கையைக் கூறலுற் றேனரோ. அசு

ஆகச் செய்யுள் ௩எக.

---

அசு. பின்—அதியமான் வரலாற்றில் ககஅ ஆம் செய்யுள் முதலியவற்றைப் பார்க்க.

# ச. வள்ளல் அதியமான் வரலாறு

## கொங்குநாட்டுச் சிறப்பு

கன்னல் வளரும் வயலெங்கும்.
கதிர்முத் தொளிரு மயலெங்கும்.
தென்னை யீனும் விரிபாளை.
தேமா வீழ்த்தும் மடுவாளை.
நன்னீ ரோடும் பன்னண்டு.
நாளும் பாடும் பொன்வண்டு.
பொன்னி பாயுந் தென்னாடு.
பொருவில் கொங்கு நன்னாடே. க

வண்டு காட்டுங் கருநெடுங்கண்;
வள்ளி காட்டு நுண்மருங்குல்;
தொண்டை காட்டுஞ் செவ்வுதடு;
தோகை காட்டு மென்சாயல்;
கண்டு காட்டுங் கனிவாய்ச்சொல்;
காந்தள் காட்டுங் கவின்விரற்கை;
கொண்டல் காட்டுங் கருங்கூந்தல்;
கொங்கு காட்டு மங்கையெழில். உ

காரூர் வெற்பிற் பெயலோங்கும்.
கல்லென் னருவி யொலியோங்கும்.
நீரூர் நிலத்தே நெல்லோங்கும்.
நெற்போ ரோங்கு மூரோங்கும்.
ஊரூர் தோறும் பொருளோங்கும்.
ஒழுக்க மோங்கும் விழுப்போங்கும்.
தேரூர் தெருவில் விழவோங்கும்.
செங்கோ லோங்கு நாடெங்கும். ங

---

க. கன்னல்—கரும்பு. தேமா—தேமாவின் பழத்தை. பொன்னி—காவிரி.

உ. வள்ளி—கொடி. தொண்டை—கொவ்வைக்கனி. தோகை—மயில். கண்டு—கற்கண்டு. கொண்டல்—மேகம்.

ங. பெயல்—மழை. விழுப்பு—சிறப்பு. விழவு—திருவிழா.

## நகரச் சிறப்பு

தெங்கு கமுகு நெடும்பலவு
　　தேமா வாழை வளர்செந்நெல்
துங்க ஞாயி லரணுகச்
　　சூழ்ந்து விளங்கு நகரென்ப
மங்குன் முழங்க மயிலாடும்
　　வண்ணப் பளிக்கு வெற்பன்ன
அங்கண் முழவ மெழுமகளிர்
　　ஆடு மாடத் தகடூரே. ௪

காலி லணிந்த கழலுடையர்
　　கையி லிலங்கு வேலுடையர்
நூலி னியைந்த வறிவுடையர்
　　நாழி லாட்டுந் திறலுடையர்
மாலை மலர்ந்த மார்புடையர்
　　மழவ ரதிய ரெனுமறவர்
ஆலி னுயர்ந்து கிளைதுவன்றி
　　யதன்கண் வாழ்வா ரகமகிழ்வார். ௫

## அதியமான் வாழ்க்கை

பூவி னியைந்த மணமென்னப்
　　பொன்னி னியைந்த மணியென்ன
ஆவி யியைந்த அழகுடம்பிற்
　　கணிசெய் நெற்றிப் பொட்டென்ன
நாவி னியைந்த பாவாணர்
　　நாளும் புகழு மதியர்குலத்(து)
ஏவி னியைந்த வில்வல்லான்
　　எழினி நெடுமான் தோன்றினுல். ௬

மழலை மென்சொ லின்ருர்க்கு
　　வழங்கும் பொழுதே பள்ளியினிற்
பழகு சிறுரோ டின்றமிழ்த்தேன்
　　பருகினுன்.பன் னூலறிவு
குழவி நிலவின் கலையென்னக்
　　கூடிக் கூடி நிறைவெய்த
அழகு நன்னூ லறிந்தாரோ(டு)
　　அளவ ளாவி யகமகிழ்வான். ௭

---

௪. மங்குல்—மேகம். அங்கண் முழவு—அழகிய கண்ணையுடைய மத்தளம்.
௬. ஏவின் இயைந்த வில்—அம்போடு பொருந்திய வில்.

வில்வாள் பயின்றான்; மாவேறும்
வித்தை பயின்றான்; வேத்தியனூல்
வல்லாங் குணர்ந்தான்; முறையுணர்ந்தான்;
வடிவார் குழலி தனைமணந்தான்;
செல்வா னுலகந் தந்தைசெலச்
செம்பொற் கட்டின் மீதிவர்ந்து
நல்லார் புகழக் குடிமகிழ
ஞாலங் காத்தான் நெறியறிந்தே. ௮

குடையு முலகைக் குளிர்விக்கும்;
குறுகி நோக்கி முறைவேண்டின்
விடையு முலகைக் குளிர்விக்கும்;
வேண்டு வாருக் கவனளிக்குங்
கொடையு முலகைக் குளிர்விக்கும்;
கொலைபுன் களவு துயர்போக்கிப்
படையு முலகைக் குளிர்விக்கும்;
பகைவர் நெஞ்ச மெரிவிக்கும். ௯

பாடிப் புணர்த்தும் பாணரொடும்
பாணித் தாடும் விறலியொடும்
நாடி வரும்பல் புலவரொடு
நாட்டா ரோடு நாட்கழிப்பான்.
ஊடி யொருபா லொதுங்கியிருந்
துரைக்கும் வடிவார் குழலிமுனம்
வாடி நின்று துனியுணர்த்தி
மருவி யிரவை யகற்றுவனே. ௧௦

## ஔவையார் வருகை

(வேறு)

அன்ன காலை யருந்தமிழ்ப் பாடினி
மென்ம யில்புரை மெல்லிய லாளௌவை
மன்ன னஞ்சி வயின்பரி சில்பெற
உன்னி யாழ்கொண் டுவந்தெழுந் தாளரோ. ௧௧

---

௮. மா ஏறும் வித்தை—குதிரையேற்றம், யானையேற்றம். வேத்திய னூல்=வேந்து + இயல் + நூல்—அரசியல் நூல்.

௧௦. புணர்த்தும்—பாட்டை யாழ் முதலியவற்றோடு பொருத்தும். பாணித்து—தாளத்தோடு பொருந்தி. துனி—ஊடல்.

௧௧. பாடினி—பாடுதலில் வல்லவள். அஞ்சிவயின்—அஞ்சியிடம்.

மின்னி லத்திடை மென்னடை கொள்ளல்போல்
அன்னம் பொய்கை யகன்றதர் செல்லல்போல்
பொன்னம் பூங்கொடி கால்கொடு போகல்போல்
நன்னு தற்பெண் ணணங்கு நடந்தனள். கஉ

பொன்ன ளிக்கும் புரவலன் பாற்செலுந்
தன்னை யொப்பத் தழைத்துப் பழந்தரு
நன்ம ரங்களை நாடிப் பறவைவான்
சென்று றைகண் டுவந்துமேற் சென்றனள். கங

வண்டு பாடி வருந்தொறுங் கைதைவாய்
விண்டு சோறு விருந்திடக் கொன்றைபொன்
கொண்டு செல்கென நின்று கொடுப்பது
கண்டு கண்டு களித்து நடந்தனள். கச

தீந்த மிழ்த்திறந் தேர்ந்த அதியமான்
வேந்தன் வாழும் வியன்றக டூருக்குக்
காந்தள் சென்னெறி காட்டக் களிப்பொடு
சேந்த மெல்லடி சேப்ப நடந்தனள். கரு

செல்லு மூர்தொறு முண்டுபின் செல்கெனச்
சொல்லு வாரில்லஞ் சேர்ந்து சுவைக்கறி
முல்லை யன்னநென் மூரனன் மோரிடு
புல்லின் சோறு பிறவுண்டு போயினாள். கசு

ஓடு தீம்பலாத் தேனி னுயர்ந்தநெல்
மாடு நின்று வணங்கவும் மாடமேல்
ஆடு மாமயில் வாவென் றகவவும்
நீடு மாமதி லூரை நெருங்கினாள். கஎ

அகழ்க டந்தரண் வாயி லகன்றுபல்
புகழ்க டந்த புலமையோர் சூழ்தர
மகிழ்க டந்தவேன் மன்ன னுறையவை
துகள்க டந்தமென் றோகை புகுந்தனள். கஅ

---

கங. அதர்—வழி. கால்கொடு—காலினால்.

கச. கைதை—தாழை. (1) விண்டு—விரிந்து; (2) வரவேற்றுப் பேசி.

கரு. சேந்த—சிவந்த. சேப்ப—சிவப்ப.

கசு. நென்மூரல்=நெல்+மூரல்—நெற்சோறு. புல்லின் சோறு—கம்பு முதலியவற்றின் சோறு.

கஅ. துகள் கடந்த—குற்றம் நீங்கிய. மென்றோகை—மெல்லிய சாயலை யுடைய மயில் போன்ற ஔவையார்.

### ஔவையார் அதியமானைக் காணுதல்

வாழ்க மன்னவ! மன்னுக கோலென
ஏழி சைமுர லியாழொ டிறைஞ்சினள்.
சூழ்கு வேலவன் முன்னம் வருகெனத்
தாழ்வி லாதோ ரிருக்கையைத் தந்தனன். ௧௯

என்று காண்குவ மென்றெழு நெஞ்சினன்
மன்ற லந்தொடை மன்னன் மகிழ்ந்தெமக்(கு)
இன்று நின்வர வின்ப மளித்தது.
நன்று நின்வர வென்று நவின்றனன். ௨0

இருந்த ஔவைதன் யாழை யெடுத்ததள்
நரம்பு தொட்டு நலந்திகழ் நைவளம்
திருந்து கைவிரல் கொண்டு தெறித்திசை
விருந்த ளித்து மிகுசுவை யூட்டினள். ௨௧

தொடுத்த பாடலைத் தோகையஞ் சாயலாள்
மிடற்றிற் பாடிச் செவிக்கு விருந்திட
உடற்று வெம்பசி யோடிற்(று). உவகையோ(டு)
இடத்தி னீங்கா திருந்தனா மாந்தரே. ௨௨

ஆவின் பாலின் னடிசில் கனிகளை
நாவி னுண்சுவை மெய்க்கு நலஞ்செயும்.
பாவி னுண்சுவை பாடு மிசைச்சுவை
ஆவி மெய்யிரண் டிற்குமின் பாக்குமே. ௨௩

திவவி யாழிசை சீரிது; வாயிசை
தவவு யர்ந்தது; தண்டமிழ்ப் பாடலும்
நவில்பண் ணும்பொரு ளுமமிக நல்லவென்(று)
உவகை யுற்றனர் வேந்துமற் றோருமே. ௨௪

### அதியமான் பரிசில் நீட்டித்தல்

(வேறு)

இன்மொழி கூறி யில்ல மேகித்தன் றுணைக்குக் காட்டித்
தன்னரு கிருத்திப் பொன்னந தட்டினிற் சுவையூ ணூட்டி
மென்னறுந் திரைய னல்கி விருப்பொடு பழகிப் பனுவள்
பொன்மணி யீயா தஞ்சி போக்கினன் பிரிவுக் கஞ்சி. ௨௫

---

௧௯. கோல்—செங்கோல். தாழ்விலாது—காலந்தாழ்ககாமல்.

௨௨. மிடறு—கழுத்து உடற்று—வருத்துகின்ற.

௨௩. இன் அடிசில்-இனிய உணவு. ௨௪. திவவு-யாழின் வலிக்கட்டு.

௨௫. மெல் நறுந்திரையல்—மெல்லும் நறுமணமுடைய வெற்றிலை.

கல்வியில் வல்லன் ; கண்டு கனிந்துரை யாடல் வல்லன் ;
வில்லினில் வல்லன் ; யார்க்கும் விருந்திடல் வல்லன் ; மாவிற்
செல்லலில் வல்லன்; செங்கோல் செலுத்தலில் வல்லன்; செல்வம்
நல்கலி லல்லன் போலும்.நாட்கழிக் கின்றான் வேந்தன். உசு

என்றெணி யாழெ டுத்தாள் ; இறைவன்பாற் செல்லாள்; வாயில்
நின்றவன் பாற்போய் வேந்தென் னிலைமைகண் டையான் ; காடு
சென்றுகொ ஃறச்சன்போலச் செல்வர்பாற் பரிசில்கொள்வேன்.
நன்று;போய் வருவ லென்று நவின்றனள் வாயி லோயே.* உஎ

வாயிலோன் விரைந்து மன்ன ! வணங்குவன் ; ஔவை பெற்ற
தாயினு மினியாள் யாழைத் தாங்கினள் ; வெகுண்டு பாடிப்
போயின ளென்றான். அஞ்சி யஞ்சினான் ; புறம்போய்க் கண்டு
நீயிரங்கு குக ;யாய் ! மீள்க நீயெர் மனைக்கென் றானே. உஅ

## பரிசில் பெற்றேகல்

மீண்டனள் வெருளி நீங்கி. விளங்குபொன் மணிமெல் லாடை
ஆண்டகை யளிப்பக் கொண்டாள். அடைபுனற் பொய்கை போன்றாள்.
பூண்டபே ரன்பி னானைப் புகழ்ந்தனள். விடைகொண் டம்மா
தாண்டுநின் றகன்றாள். வள்ளல் வள்ளுவ னணியூர் சேர்வாள்.

---

உசு. மா—குதிரை, யானை.

* வாயி லோயே வாயி லோயே
........................ ........
கடுமான் றோன்றல் நெடுமா னஞ்சி
தன்னறி யலன்கொ லென்னறி யலன்கொல் ?
அறிவும புகழு முடையோர மாய்ந்தென
வறுந்தலை யுலகமு மன்றே அதனால்
காவினங் கலனே சுருக்கினங் கலப்பை
மரங்கொ ஃறச்சன் கைவல் சிறாஅர
மழுவுடைக் காட்டகத் தற்றே
எத்திசைச் செலினு மத்திசைச் சோறே. (புறம். 206)

உஎ. கொஃறச்சன்=கொல்+தசசன்—வெட்டுகின்ற தச்சன். வருவல்—வருவேன்.

உஅ. யாய்—தாயே.

உகூ. அடைபுனல் பொய்கை போன்றாள்—வந்து நிறைந்த புனலையுடைய பொய்கைபோன்று மனநிறைவு பெற்றாள். ஊர்—நாஞ்சில்.

### பெருஞ்சித்திரனார் வருகை

முத்தமிழ் கற்ற மேலோன் மூதறி வாளன் பாகில்
தித்திக்கு மழலைப் பற்பல் சிறுவரைப் பெற்ற செம்மல்
நித்தலு மிடியன் துப்பு நிறைவிலான் பரிசில் கொள்வான்
சித்திர னென்னும் பேரான் செய்யுளோ வியம்போற் செய்வான்

முதியவன் மலையுங் குன்று முகிலுறை பொழிலு நீங்கி
அதியர்கோன் கோயி லேகி வந்தவா றவற்கு ணர்த்த,
மதிமிகு சுற்றத் தோடு வன்பகை யடக்கச் சூழ்ச்சி
எதுவெனத் தேர்வோன் காணா தேவல்பாற் பரிசி லுய்த்தான்.

பெற்றருள் கென்ன வந்தென் பெருமைகண் டயா னாயின்
மற்றிது கொள்ளே னென்று மறுத்தனன் புலவன்.* ஏவல்
சொற்றசொல் கொண்டு கூறச் சூழ்ச்சியி னீங்கிப் போந்து
கொற்றவன் கொடுப்பப் பெற்றுக் கொணடுளங குளிாந்து சென்றான்.

### ஔவையார் வள்ளுவனிடம் பரிசில்பெற்று மீளுதல்

போஞ்சிறு நெறியிற் கோடைப் பொழுதிடை நிழன்முன் னீந்து
தீஞ்சுவைக் கனியின் நல்கிச் சேர்பவாக் குதவு மாநீள்
நாஞ்சிலை நண்ணி நால்வாய் வள்ளுவ னல்கப் பெற்றுப்†
பூஞ்செழுங் கழனித் தன்னூர் போயௌவை தகடூர் மீண்டாள்.

மீண்டவள் பரிசில் கொள்வாள். மேலுந்தன் னூர்போய்மீள்வாள்.
ஆண்டகை மழலை மக்கட் கருளல்போ லருள்வ னென்பாள்.‡
நீண்டுழி யொருநாள் வாட னெஞ்சமே கோடு சேர்ந்த
மாண்டகு கவளங் கைம்மா வாயுறல் போலு மென்பாள்.§ ௫௪

---

௫0. பாகு—வெல்லப்பாகு. மிடியன்—வறிஞன். துப்பு—உணவு. சித்திரன்—பெருஞ்சித்திரன். ஏவல்பால்—ஏவலாளியிடம்.

௫௨. *குன்றும் மலையும் பலபின் னொழிய
வந்தனென் பரிசில், கொண்டனென் செலற்கென
நின்ற வென்னயந் தருளி யீது கொணடு
ஈங்கனஞ் செல்க தானென வென்னை
யாங்கறிந் தனனோ தாங்கருங் காவலன்
காணா தீத்தவிப் பொருட்கு யானோர்
வாணிகப் பரிசில னல்லேன் பேணித்
தினையனைத் தாயினு மினிதவர்
துணையள வறிந்து நல்கினர் விடினே. (புறம். 208)

௫௩. மா—மரம். நால்வாய்—யானை. கழனி—வயல். † புறம் 140-ஆம் செய்யுளை நோக்குக.

௫௪. மழலை மக்கள்—மழலை பேசுகின்ற சிறுவர். ‡ புறம் 92-ஆம் செய்யுளை நோக்குக. வாடனெஞ்சமே=வாடல்+நெஞ்சமே. வாடல்—தளர்ச்சி யடையாதே.

§ புறம் 101-ஆம் செய்யுளை நோக்குக.

## எழுவரை வெல்லல்

### (வேறு)

பகைகொ ணெஞ்சின னஞ்சிபால் வெஞ்சினம் படைத்தோன்
மிகைகொள் சூழ்ச்சியம் மன்னவன் வழிவந்த மேலோன்
தகைகொள் செந்தமிழ்ப் புலவருக் கரும்பொருள் தருவோன்
தொகைகொ டானைய னெழினியென் றுரைபெறு தூயோன்

கொண்ட சீற்றமும் பகைமையு நாடொறுங் கூடத்
திண்டி றற்குறு மன்னரை வயின்றொறுந் தேடிக்
கண்டு கண்டுதன் கருத்தினை மொழிந்திது காலம்
மிண்டி மேற்செலன் மேலென விளம்பினன் வினைஞன். ௩௬

இணங்கு மன்னவ ரறுவரை யுடனழைத் தெழுந்து
கணங்கொள் வெம்படைக் கடலெனத் தொடர்தரக் கல்லும்
மணங்கொள் சோலையுங் கடந்துதன் மதினகர் புகுந்து
திணங்கொள் வேற்படை யொடுமியை வித்தெழ நினைந்தான்.

உரைசெய் தான்படைத் தலைவரை மேற்செல. வோங்கு
வரைந டந்தென நடந்தன மாமத வேழம்.
திரையெ ழுந்தென வெழுந்தன கொய்யுளைத் திண்மா
நிரைகொ டேர்ப்படை யாட்படை சென்றன நெருங்கி. ௩௮

படைமு ழங்கவும் பறைதுடி முழங்கவும் பற்பல்
குடைவி ளங்கவுங் கொடிபல விளங்கவுங் குளிர்பூந்
தொடைவி ளங்கெழு வேந்தருந் துணைபரி யேறிப்
புடைவி ளங்குபல் புலவர்கள் புகழ்ந்திடப் போனார். ௩௯

வருகை கேட்டவேன் மன்னவ னதியன்மும் மதத்தோ(டு)
இருமருப்புமா வேட்டெழு தருபுலி யென்னப்
பொருகை வில்லொடுங் கணையொடு மலர்த்தொடை புனைந்து
செருமு னைப்புறஞ் சேர்ந்தனன் படையைமுன் செலுத்தி. ௪0

என்னு ரத்தினை யிகழ்ந்தியா மெழுவ ரெம்படையும்
வன்மை மிக்கன வென்றெணி வந்தமன் னவரை
முன்னெ ழுந்துவெம் முரணழித் திலனெனின் முற்றும்
இன்ன லென்குடிக் கியற்றினே னாகவென் றெழுந்தான். ௪௧

---

௩௫. தொகைகொ டானையன = தொகை + கொள் + தானையன. தானை-சேனை.

௩௬. வயின்றொறும் — பலவிடங்களிலும். மிண்டி — நெருங்கி.

௩௭. திணம் — கொழுப்பு.

௩௮. வரை நடந்தென — மலை நடந்தாற்போல.

௪0. மா — யானை. செருமுனை — போர்க்களம்.

அடலம் பாய்பரி யலைபட, வணிமணி யானைப்
படகு தென்பட, மின்னயின் மீன்றுளப், படையாங்
கடல்வி ரைந்துமுன் னணைதரக் கற்சிறை யென்ன
உடலுந் தானையு மதியனுந் தாங்கின ரொருங்கே. ௪௨

(வேறு)

கிட்டினர் முன்முனம். கேடயம் பற்றினர்,
தட்டினர் தோளிணை; சாற்றினர் தம்புகழ்;
விட்டனர் வேல்கணை; வில்லிணைத் தேவினர்;
கொட்டின ராவலம் கொல்லென வார்த்தனர். ௪௩

குத்தினர்; வெட்டினர்; கொத்தினர்; முட்டினர்;
கத்திசு ழற்றினர்; கைப்படை தொட்டனர்;
ஒத்தவு ரத்தினர் பற்றியு ருத்தனர்;
செத்தனர் பற்பலர் சீறுமு ளத்தினர். ௪௪

வீழ்ந்தத லைபனங் காயின்வி ளங்கும்.மெய்
ஆழ்ந்தக ணைகுறட் டாரையிற் றோன்றுவ.
சூழ்ந்துகி டப்பவர் தொல்லுல கத்திடை
வாழ்ந்தது போன்றுடன் மாய்ந்தவ ரொப்பரே. ௪௫

பிளிறுமும் மாமதம் பெய்திரு கோடுகொள்
களிறுதன் மேல்வரல் கண்டவன் பாய்ந்தமெய்
ஒளிரயில் வாங்கிமே லோச்சமண் வீழ்வது
குளிர்பிறை மின்னொடு கொண்மூவீழ் வொக்குமே. ௪௬

இமிழ்திரை யாழிவா யேகியங் காழ்வுறுந்
திமிலினை யொத்திடும் சீறிமுன் மேல்வருங்
கமழலங் கல்புனை காளைய ரூடுபோய்
உமிழழல் வாளியே றுண்டுவி ழும்பரி. ௪௭

---

௪௨. படகு—தோணி. கற்சிறை—கல்லணை. உடலும்—வெகுளும்.

௪௩. ஆவலம்—வாய்கொட்டி யார்த்தல்

௪௫. கணை—அம்பு. ஆரையில்—ஆரைக் கால்களைப்போல.

௪௬. கோடு—தந்தம். அயில்—வேல். வீழ்வொக்கும்—வீழ்வதை ஒக்கும். கோடு, அயில், களிறு மூன்றிற்கும் பிறை, மின், கொண்மூ மூன்றும் உவமைகள்.

௪௭. இமிழ்—ஒலிக்கின்ற. வாளி—அம்பு. வாளி யேறுண்டு விழும் பரி ஆழ்வுறும்: திமிலினை ஒத்திடும் என இயைக்க.

தடுத்தனன் கேடகந் தாங்கியொன் னார்படை.
தொடுத்தனன் கூர்ங்கணை தோள்புடைத் தார்த்துமுன்
அடுத்தவ ராருயி ருண்டதி யன்றெவர்
கடுத்தெதிர் நிற்றலைக் கண்டனன்; சென்றனன். ௫அ

வந்தனன் வேனெடு மானென மன்னவர்
வெந்தழல் காலயில் வேல்கணை யேவினர்.
செந்தமிழ் வேன்முரு கன்னவன் சீறிமுன்
மைந்துகொ டுந்தினன் வல்விலிற் கொல்கணை. ௫௯

தானையெ லிக்கர வாயின; சார்மனர்
யானைக ளுக்கெதிர் யாளிக ளாயின;
கொனெழி னிக்கருங் கூற்றுக ளாயின
ஊனடு வேனெடு மான்விடு வொண்கணை. ௬0

(வேறு)

புண்ணொடு நெடுமான் றோன்றல் போரிடல் கண்டாள்; மாற்றார்*
ஒண்கணை களத்தே போகட் டோடுதல் கண்டாள்; ஒல்கி
மண்ணிடை யெழினி வீழ்ந்து மாய்வது கண்டாள்; ஒளவை
திண்பிணி முரச மென்னுஞ் செய்யுளைப்†பாடி னாளே. ௬௧

---

௫அ. ஒன்னார்—பகைவர். கடுத்து—சினந்து.

௫௯. வெந்தழல்கால்—வெம்மையான நெருப்பைக் கக்குகின்ற. மைந்து—வலி. உந்தினன்-செலுத்தினை; விட்டான்.

௬0. மனர்: மன்னர் என்பதன் இடைக்குறை. கணை—அம்பு.

௬௧. *இமிழ்குரல் முரசின் எழுவரொடு முரணிச்
சென்றமர் கடந்துநின் னாற்றல் தோற்றிய
அன்றும் பாடுநாக் கரிியை. (புறம், 99.)

௬௧. †திண்பிணி முரச மிழுமென முழங்கச்
சென்றமர் கடத்தல் யாவது வந்தோர்
தார்தாங் குதலு மாற்றா வெடிபட்டு
ஓடல் மரீஇய பீடின் மன்னர்
.................... ...........
வாள்போழ்ந் தடக்கலு முய்ந்தனர் மாதோ
.............. . ........................
அருஞ்சமந் ததைய நூறிநீ
பெருந்தகை விழுப்புண பட்ட மாறே, (புறம், 93.)

வன்றிற லெழினி வீழ்ந்து மாய்ந்தபின் தொடர்ந்த சுற்றம்
நின்றவ ணழுதின் றூனை நீத்தபன் மகார்போ லேங்கக்
கொன்றுயி ருண்ட கூற்றே கொடியைவித் துண்டா யென்று
கன்றம ராயம் பாடிக் கலுழ்ந்தன னரிசி லூரான்*. ருஉ

முரசமுங் குடையுங் கொண்டு பல்லிய முழங்க மள்ளர்
இருபுடை தொடர முன்னஞ் சாமரை யிரட்டப் போந்தைச்
சுரியிரும் பித்தை சூடிப் பரிமிசை யிவர்ந்து தோன்றல்
செருமுனைக்கோலத்தோடுஞ் சினத்தொடுங் கோயின்மீண்டான்.

அதியமான் தவமகனைக் காணல்

பண்ணமர் மொழியாள் செம்பொற் பாவைதன் காதற் செல்வி
வண்ணவாண் மகவு பெற்றாள். வந்துகாண் கென்று கூற
அண்ணலு மேகி நோக்கி யகமகிழ்ந் திடவு மாறாக்
கண்ணமர் சிவப்புக் கண்டு கையது மொழிந்தா ளௌவை.† ருச

அங்ககன் றிருக்கை யெய்தி யாற்றலாற் பகையை வென்ற
வெங்கணை மறவர் நெஞ்சம் விழுப்புக ழௌவை நெஞ்சம்
துங்கமார் பாணர் நெஞ்சந் துடியர்நெஞ் சுவப்பச் செம்பொன்
திங்களங் குடையா னல்கிச் சேர்ந்தனன் தனது மாடம். ருரு

---

ருஉ. *கன்றம ராயம்.....................
பொய்யா எழினி பொருதுகளஞ் சேர
ஈன்றோள் நீத்த குழவி போலத்
தன்னமர் சுற்றந் தலைத்தலை யினைய
..................................
வாழ்தலின் வரூஉம் வயல்வள னறியான்
வீழ்குடி யொருவன் வித்துண் டாஅங்கு
ஒருவ னுருயி ருணவு யாயின்
நேரார் பல்லுயிர் பருகி
ஆர்வை மன்னோ அவன் அமரடு களத்தே. (புறம், 230.)

ருங. பல்லியம்—பலவாத்தியம். சுரியிரும்பித்தை—சுருண்ட கரிய மயிர்.

ருச. †கையது வேலே காலன புனைகழல்
மெய்யது வியரே மிடற்றது பசும்புண்
..................................
வரிவயம் பொருத வயக்களிறு போல
இன்னும் மாறாது சினனே அன்னோ
உய்ந்தன ரல்லரிவன் உடற்றி யோரே
செறுவர் நோக்கிய கண்தன்
சிறுவனை நோக்கியுஞ் சிவப்பா னாவே. (புறம், 100.

நிறையுறு மனைவி பெற்ற நிகரிலாண் மகப்பே றெண்ணிச்
சிறையுறை மாக்க டம்மைச் செல்கென விடுவித் தானால்.
இறைதர லொழிக ; செல்வ மில்லவர் பெறுக; மெய்யிற்
குறையுறுப் புடையார் சோறுங் கூறையுங் கொள்க வென்றான்.

தந்தையின் வடிவைப் பெற்ற தன்சிறு வனைத்தா யேந்தி
மைந்தநீ நுந்தை போன்று மன்னரை வென்று வாழ்க ;
செந்தமிழ் வளர்க்க ; நாட்டைச் செம்மையிற் புரக்க ; செல்வம்
வந்திரப் பார்க்கீ கென்ற வாய்ச்சொலோ டவாள் பாலே. ருஎ

குறுநடை நடப்பான்; வாயாற் குதலைகண் மொழிவான்; பண்டம்
சிறுகையாற் கொண்டு தின்பான; சிறுமியர் சிற்றின் மாய்ப்பான்;
நெறியினிற் சிறுதே ருய்ப்பான்; நெஞ்சினி லிரக்கங் கொண்டு
வறியவர்க் களிப்பான் செல்வ மகன்பொருட் டெழினிமாதோ.

மழலைவாய்க் குழவி யோடு மயிலியன் மனைவி யோடும்
நிழலெனத் தொடரு மௌவை நிகரறு மிசையி னோடும்
முழவொடும் யாழி னோடு முகமலர்ந் தருகி யாழ்ந்து
பழகுநல் லின்பந் துய்த்துப் பன்னெடு நாட்க ழித்தான். ருகூ

## ஔவையார் தூதுக் கேழுதல்

மறிதிரை யெறியு முத்தின் வடிவமு நிறமுங் கொண்டு
சிறியவர் மருளப் புன்னைச் செழுமுகை கிடக்குஞ் சேர்ப்பன்
பொறியளி பாடுந் தாரான் புகழிளந் திரைய னென்பான்
அறிவுநூல் வல்லான் தொண்டை நாட்டினுக் கரச னவான். சுo

என்வலி யெண்ணு னம்மா. இரும்படை வலிமை யெண்ணான்.
தன்வலி யெண்ணான். சாருந் தானையின் வலிமை யெண்ணான்.
தொன்மதிற் றகடூர் கொள்ளச் சூழ்வா னென்பா ரொற்றர்.
அன்னவன் முன்றா தொன்று விடுப்பதற் கவாவு முள்ளம். சுக

செந்தமிழ்த் திறமுஞ் சூழ்ச்சித் திறமையுந் திரையன் முன்னென்
மைந்தெடுத் துரைக்கு மாண்பும் வாய்ந்தநீ செல்வை யாயின்
கொந்தணி குழலி நன்று. கொள்ளுவான் கேண்மையென்னு
வெந்திற லதியர் கோமான் விளம்பின னௌவை பக்கல். சுஉ

---

ருகூ. கூறை—ஆடை.

ருஎ. நுந்தை—உன் தந்தை. புரக்க—ஆளுக.

சுo. மறிதிரை—சுருண்டு விழும் அலை. மருள—மயங்க.

சுஉ. மைந்து—வலிமை. கொந்து—பூங்கொத்து.

(வேறு)

மன்னன்மொழி கேட்டாள்எழின் மங்கைமன மிசைந்தாள்.
பின்னர்விடை பெற்றாள். நகர்ப் பெருவாயில்க டந்தாள்.
அன்னம்மெனச் சென்றென்றுகொ டைவாளெனப் பழனக்
கன்னல்கசிந் தொண்ணித்திலக் கண்ணீர்விட நடந்தாள். ௬௩

வண்டார்மலர்க் குழன்மாதரின் மையுண்விழிக் குடைந்த
கெண்டைகருங் குவளையொடு கிளர்செம்முகக் குடைந்த
தண்டாமரை தங்கும்புனற் றடமும்வய லிடமும்
கண்டேவழி நடந்தாடமிழ்க் கடலின்கரை யடைந்தாள். ௬௪

மயலார்விலங் குணரா;நயம் வழங்காவுரை; இவணஞ்
செயல்காண்குவள்; திறங்கூறுவள்; தேர்ந்தாளெனத் தெளிந்து
குயில்பாடுவ; வரிவண்டினங் குழலூதுவ; அழகார்
மயிலாடுவ முகில்கூடுபன் மரமார்வழி யெங்கும். ௬௫

தமிழின்சுவை கொள்வான்றலை கீழாத்தவம் புரியும்
நிமிர்நெட்டிலை வாழைபலா நீண்மாபழுத் தெதிர்ந்து
கமழ்தீம்பழ முண்டெஞ்சுவை காண்பின்மொழி யெனல்போல்
உமிழ்தேன்விழு நிலத்தௌவைமு னுதிர்க்கும்பல கனியே. ௬௬

சொல்லிற்பொலி தொடைசெய்யுழித் தொடுத்துப்புக ழெம்மை
வில்லிற்பொலி நுதலாயென விழியாற்சொலும் விளைகள்.
செல்லும்பொழு தடிபற்றிவண் செங்காந்தள் கைநீட்டும்.
பல்லிற்பல காட்டிப்படர் பசுமுல்லைக ளிரக்கும். ௬௭

நெறியிற்செலு மடவாள்விழு நெல்லிக்கனி யுண்டும்,
உறுமன்புடை யிளங்காளைபின் னுடன்செல்லுமான் கண்டும்,
வறுமைப்படு குடியிற்சினை வறள்பன்மரங் கண்டும்,
அறனில்லிறை கோலிற்சுடு மத்தத்திடைச் சென்றாள். ௬௮

---

௬௩. நித்திலக் கண்ணீர்—முத்துக்களாகிய கண்ணீர்.

௬௬. தலைகீழாத்தவம் புரிதலாவது மக்களைப்போலின்றி உணவு உண்ணும் வாயாகிய வேர்ப்பகுதியைக் கீழாகவும் கால்போன்ற கிளைப் பகுதியை மேலாகவும் கொண்டு நிற்றல்.

௬௭. விழியாற் சொலும் விளைகள்—கருவிளைகள் தம் கண்களாகிய விழிகளால் சொல்லும்.

இடுவாரெவ ணுள்ளாரென வெதிர்ந்தாளொரு விறலி.
சுடுநீள்சுரங் கடந்தொண்மலர்ச் சோலைகடந் தன்னுய்
கடுமான்விடு நெடுமான்முகங் காணின்மிடிப் பகையை
அடுவானட வென்றங்கொரு தலைப்பாமொழிந் தகன்றாள்.* ௬௯

பிரிவார்தினைப் புனங்காப்பவர் பெறுவீர்துயரென்று
மருவார்தொடை மைந்தர்முன மலர்த்துங்கணி களையும்.
வருவார்தணந் தவரென்றலர் மகளிர்முன மலர்த்தும்
முருகார்தள வையுநோக்கியம் முதியாள்பினு நடந்தாள். ௭௦

புள்ளுக்குர லெழுப்பிப்புகும் புட்கள்பிடிப் பாரைத்
துள்ளித்திரி யிளங்கன்றையுந் தொடர்பல்விலங் கினையுங்
கள்ளத்தொடு பார்வைகளைக் காட்டிப்பிடிப் பாரைப்
புள்ளிப்பிணை மானன்னவள் காண்பாள்;மெலப் போவாள். ௭௧

மலர்கள்பறித் தணிவாரையு மடுவாடுவார் தமையும்
பலநன்கிழங் ககழ்வாரையும் பழுங்கொள்பவர் தமையும்
உலர்செந்தினை கொய்வாரையு முயர்கல்லினைத் தம்முன்
சிலசொன்மொழி விப்பாரையு நோக்கிப்பினுஞ் செல்வாள். ௭௨

விழுதீம்புன லருவிச்செழும் வெற்பும்பல கடந்தாள்.
அழகார்கய லெதிரும்புன லாறும்பல கடந்தாள்.
தழையார்பசுங் காடுங்கவின் காவும்பல கடந்தாள்.
உழவா லுயர் குடிவாழ்வுறு மூரும்பல கடந்தாள். ௭௩

மருவொன்றிய முடத்தாழையின் மலரையவண் போந்த
குருகென்றெணி வெருவிச்செலுங் குளிர்நீர்க்கயல் கண்டும்,
வருகென்றழைப் பனைபோற்கரை வருவெண்டிரை, யலையும்
கருநெய்தனன் மலர்நோக்கியுங், கயநோக்கியு நடந்தாள். ௭௪

---

௬௯. *ஒருதலைப் பதலை தூங்க வொருதலைத்
தூம்பகச் சிறுமுழாத் தூங்கத் தூக்கிக்
கவிழ்ந்த மண்டை மலர்க்குநர் யாரெனச்
சுரன்முத லிருந்த சில்வளை விறலி
செல்வை யாயின் சேணோ னல்லன்

.....................................
பகைப்புலத் தோனே பல்வே லஞ்சி
வலத்தற் காலை யாயினும்
புரத்தல் வல்லன் வாழ்க அவன்றாளே. (புறம் 103)

௭௦. தொடை—மாலை. கணிகள்—வேங்கை மரங்கள். தணந்தவர்—பிரிந்தவர். முருகார் தளவு—மணமுடைய முல்லை.

௭௧. பார்வை—பழக்கப்பட்ட விலங்குகள்.

௭௨. மடுஆடுவார்—ஆற்றிடைப் பள்ளத்தில் நீராடுகின்றவர்கள். கல்—மலை. கல்லை மொழிவித்தலாவது அதனெதிர் நின்று சில சொற்களைச் சொல்லி அதனிடம் எதிரொலியுண்டாக்கல்.

## காஞ்சிமாநக ரடைதல்

பச்சைப்பசுங் கவின்கம்பல விரிப்பன்னபுல் பரந்த
அச்சத்தரு நெறியைக்கடந் தருகேவர மாடத்(து)
உச்சிக்கொடி வருகென்றழைப் பதுபோலுவந் தாட
மெச்சத்தமிழ்த் தொடையாப்பவள் வியன்காஞ்சியைச் சார்ந்தாள்.

வான்றோய்நெடுமா டத்திடை மாதர்மணிப் பந்தேழ்
மூன்றானனி யெற்றிப்பிடித் தாடும்முறை நோக்கித்
தேன்றோளி யொப்பத்தமிழ்ச் செய்யுட்சுவை தேருஞ்
சான்றோருறை மறுகின்வழித் தையன்மெல நடந்தாள். எசு

குறுவேர்வுறச் சிறுகால்வலி கொளவாயமு தொழுக
மறுகூடெழும் பொடிமேலுற மதிநேர்முக மலரச்
சிறுதேரொடு செலுஞ்சேயரைக் கண்டாள்;மெலச் சிரித்து
நறுமாமுகிற் குழல்வேல்விழி நங்கைநடந் தகன்றாள். எஎ

மேவிச்செழும் பஞ்சானனி மென்னூலிழை நூற்குங்
காவிக்கருங் கண்ணார்திறங் கண்டாள் திறங் காட்டிப்
பாவிற்பல நிறவூடையிற் பழம்பூதளி ராக்கி
ஆவிக்கிணை துகினெய்பவ ரகன்வீதிக டந்தாள். எஅ

குழனன்றுகொல் குழந்தைசொலுங் குதலையினு மென்று
மொழிகின்றபன் மடவாரையு முழவந்துடி முழங்க
விழவின்புற வெடுப்பாரையு மினலாடுவ போல
அழகொன்றுற நடிப்பாரையு மவண்கண்டுகண் டகன்றாள். எகூ

பண்டம்பகர் கடைகள்கலை பயில்விக்குநற் பள்ளி
கொண்டல்பயில் மாடம்பெருங் கோயில்வழக் கியல்பு
கண்டுண்மைசொன் மன்றம்பிணி களைவிக்குநீண் மன்றம்
வண்டன்னகண் ணாள்கண்டுகண் டடைந்தா ளரண்மனையே. அ0

## இளந்திரையனைக் காணல்

குன்றங்குயின் றதுபோலுள கோயின்முதல் வாயில்
சென்றங்கது கடந்தொண்சுடர்ச் செம்பொன் னணைசேர்ந்த
மன்றன்மலர் மன்னன்வயின் வருகையுரைத் தேகி
நின்றக்கடை தந்தானிட நெஞ்சைத்தமிழ்க் கீந்தான். அக

---

எரு. அச்சத்தரு நெறி = அசசத்து + அருநெறி — அச்சத்தைத் தருங் கொடிய வழி. தமிழ்த்தொடை — தமிழ்ப்பாட்டு. யாப்பவள் — பாடுகின்றவள்.

எகூ. குதலை—மழலைச் சொல். விழவு—திருவிழா. அவண்—அவ்விடத்தில்.

நலங்கேட்டனன்; உடல்பார்த் துள நைந்தான்; அவனடந்த
நிலங்கேட்டனன்; ஆங்காங்குள நிகழ்வென்னெனக் கேட்டான்.
கலம்பூட்டிய தோளான்விருந் துணவூட்டினன். கணைகொள்
இலங்காட்டிய நினைவான்வர வென்னையென வினவான். அஉ

வருகென்றழைத் துடன்செல்லுழி மாதுன்வள நாட்டிற்
பொருமள்ளரு முளரோவெனப், புடைக்குந்தடிக் கஞ்சாக்
கருமெய்யர வம்போன்றவன் கண்ணுருளர். காற்றின்
உருடண்ணுமை யொலிகேட்டெழு முரவோ னுளனென்ன, அங

## படைக்கலக் கொட்டில் காட்டல்

வெவ்வேல்விழி மடவாருறை வீடு(து);இவண் வருக;
அவ்வேபரி; அவைமும்மத யானை அவை யம்பாம்;
இவ்வேசிலை; எஃகமிவை யெனக்காண்குவித் தவட்குச்
செவ்வேற்படைத் திரையன்வலி செப்பாதுரந் தெரித்தான். அச

மன்னன்குறிப் பறிந்தாள்.இவை மாலைமயிற் பீலி
நன்னெய்யணிந் திவண்மின்னுவ. நண்ணூருட லேறி
முன்வாய்சிதைந் தெங்கோன்படை கொல்லன்னுலை மூழ்கும்.
என்னும்பொரு டரப் பாடின ளிவ்வேத்தொடை யெளவை* அரு

## ஞாயிற்றின் மறைவு

தொடையின் றறிப் புணர்ந்தான். உளஞ் சோர்ந்தான். வலியிழந்தான்.
இடைமென்கொடி யனையாளுரைக் கிற்றேமனந் தளரும்
படைமன்னன துரநாணியொண் பகலோன்குட வரைமேல்
புடையின்மர மிடைதண்பொழில் புகுவானென வடைவான்.

---

அஉ. கணைகொள் இலம்—படைக்கலக் கொட்டில் காட்டிய—காட்டு தற்கு.

அச. அவ்—அவை. இவ்—இவை. சிலை—வில். எஃகம்—வேல்.

அரு. *இவ்வே பீலி யணிந்து மாலை சூட்டிக்
கண்டிரள் நோன்காழ் திருத்திநெய் யணிந்து
கடியுடை வியனக ரவ்வே. அவ்வே
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து
கொற்றுறைக் குற்றில மதோ
.......................................................
அண்ணலெங் கோமான் வைந்நுதி வேலே.

அசு. தொடை—செய்யுள். குடவரை—மேற்குமலை.

### திங்களின் தோற்றம்

அரையன்றனை வென்றாளெவ ளறிவாமென உயர்த்தும்
திரையங்கடன் மடமங்கைதன் செழுமாமுக மொப்ப
உரைதங்குதண் மதிமேலெழுந் தோங்கும். பகர் வார்போல்
கரைவந்தலை யலறும். விடு கதிர்முத்தந கைக்கும். அஎ

### ஞாயிற்றின் தோற்றம்

பிரிந்தாரிரு வரும் செந்தமிழ்ப் பெருமாட்டியன் றிருந்தாள்.
தெரிந்தான்பக லவன். போய்விடை திரையன்வயிற் பெற்றாள்.
புரிந்தன்னவன் பெரும்பாண்கொளப் பொன்னும்பல பூணும்
சொரிந்தின்புறு முன்றின்மதில் சூழ்காஞ்சிக டந்தாள். அஅ

### அதியமானைக் காணல்

நடந்தாளொடு வழியேபல நாளிற்றக டூரை
அடைந்தாள் நிகழ் வினைத்தும்விரித் ததியன் வயினுரைத்தாள்
தடந்தோள்பருத் துளம்விம்முறக் கேட்டான்செவி சாய்த்து.
மடந்தையிட முன்னையினும் வைத்தான்பெரு நட்பே. அகூ

அன்னையென நினைப்பான்.மனை யகத்தன்பொடு நடப்பான்.
பொன்னைநனி யீவான்றொடை புகலுந்தொறும். அமைச்சர்
நின்னின்னெவ ருள்ளார்?வழி சொல்லாயென நிற்பான்.
நன்னூல் பயிற் றெழினிக்கென நவில்வான். நலம் பெறுவான்.

(வேறு)

### வேட்டைக் கேகல்

இன்னண மதியர்த மிறைவன் வாழுநாள்
மின்னவிர் முகிலுறை விளங்கு கோடுகொள்
தன்னருங் குதிரையைச் சார்ந்து நோக்குவான்
உன்னினன்; பரியிவர்ந் தூர்க டந்தனன். கூக

படிமிசை நீளிடைத் தோன்றும் பன்மரம்
கடிதரு கடைந்தெழில் காட்டக் கண்டுமுன்
நெடிதுபோய் விரைபரி நிறுத்திக் கீழிழிந்(து)
அடியினி னடந்தன னருநெ றிக்கணே. கூஉ

---

அஎ. திரையங்கடல்—அலையையுடைய கடல்.
அஅ. திரையன்—இளந்திரையன்.
கூ0. எழினி—பொகுட்டெழினி.
கூக. கோடு—சிகரம். குதிரை—குதிரைமலை.
கூஉ. படிமிசை—நிலத்தில். கடிது—விரைந்து.

மாங்குயில் வருகென, வண்டு பாண்செயப்,
பூங்கொடி யாட,நீள் புன்கு பூம்பொரி
ஆங்கிடக், கனிபலா வளிககக் கண்டிசை
ஓங்கிய மன்னவ னுவகை கொண்டனன். ௬௩

பலவினிற் பழுத்ததீம் பழத்தை மாம்பழக்
குலையசைத் துதிர்க்கவக் குலையைத் தென்னைதன்
உலர்பழ மெறிந்துகீ ழுதிர்க்குஞ் சோலையை
இலகணி மார்பின னோக்கி யேகினன். ௬௪

அருவிபாய்ந் திருந்தினை யடர்ந்த சாரலிற்
பரணிருந் தொருமகள் குறிஞ்சி பாடநீள்
குரல்கொளா தயலக லாத கோட்டுமா
அரசுகண் டதனையெய் யாத கன்றனன். ௬௫

நாகிளங் கன்றுட னக்கி நக்கியஃ(து)
ஏகுறு நெறியினி லேகு மானினை
வாகையந் தார்புனை மன்னன் கண்டகத்(து)
ஆகரு ளாலலைக் காத கன்றனன். ௬௬

தேந்தள வரும்பினிற் சிரித்தி கழ்ந்திடக்
காந்தளின் முகைகளைக் கண்டங் கோடியே
பாந்தளென் றலகினுற் பற்று மஞ்ஞையை
வேந்துகண் டதனழ கெண்ணி வீழ்ததிலன். ௬௭

## அரசன் துறவியை காணுதல்

புல்லிடைக் கிடந்தெழும் புலியைக் கண்டனன்
வில்லிணைத் தொருகணை விடுமுன் கான்புகுந்(து)
ஒல்லையின் மறைந்ததங் கோடிக் காண்புழி
நல்லுளத் துறவியை நம்பி கண்டனன். ௬௮

---

௬௫. ஒருமகள்—ஒரு குறிஞ்சிநிலப் பெண். குறிஞ்சி—குறிஞ்சிப் பண். குரல்—தினைக்கதிர். கோட்டுமா—கொம்பையுடைய யானை.

௬௬. நாகு இளங்கன்று—மிகவும் இளமையான கன்று. உடனக்கி= உடல்+நக்கி. அலைக்காது—கொல்லாமல்.

௬௭. தேந்தளவு அரும்பினில்—தேனையுடைய முல்லை தன் அரும்பினால். முகை—அரும்பு. பாந்தள்—பாம்பு. மஞ்ஞை—மயில்.

௬௮. கான்—காடு. ஒல்லையில்—விரைவில்.

படைகளை யெறிந்துபோய்ப் பணிந்து நின்றனன்.
அடைகென விருக்கென வருளி மன்னநின்
கொடையையுங் கோலையுங் கூறக் கேட்டனன்.
நடையையுங் கேட்டனன். நல்லை யென்றனன். ௯௯

மருக்கிளர் தொடையணி மன்னன் றன்னொடு
பொருப்பிவர்ந் தருமிசைப் புக்கு நெல்லியின்
திருக்கிளர் கனிபறித் தடைந்தச் செம்மல்பால்
விருப்பொடு நல்கினன். மேன்மை செப்புவான். ௧௦௦

கண்ணுறுங் கனிகளோ கணக்கி லாதன.
உண்ணினீர் வேட்கையை யொழிக்கு மக்கனி.
மண்ணிடைச் சாதலை மாற்றும் மன்ன ! இஃ(து)
எண்ணரு நலத்ததென் றியம்பி யேகினான். ௧௦௧

வணங்கினன். சிவனென மனத்தி லெண்ணினன்
தணந்தமைக் கிரங்கினன் தான ருந்தலில்
அணங்கனா ளௌவையுண் டானன் றுமெனா
மணங்கமழ் தாரினன் வாய்ப்பெய் துண்டிலன். ௧௦௨

மென்மெல வருநெறி யறிந்து மீண்டனன்
முன்னமே யாத்தநல் லிவுளி முன்புபோய்
அன்னதன் கட்டவிழ்த் தேறி யாண்டகை
தன்னகர் மீண்டனன். கோயில் சார்ந்தனன். ௧௦௩

## நெல்லிக்கனியை ஔவைக் களித்தல்

கல்விசா லௌவையை யழைத்துக் கானிடைக்
கொல்களி றின்னிசை கோடல் கூறினன்.
நெல்லியங் கனியருந் தென்று நீள்கையால்
நல்கினன் செந்தமிழ்க் குயிரு நல்குவான். ௧௦௪

---

௯௯. கோல்—செங்கோல். நல்லை— நீ நல்லவன்.

௧௦௦. திருக்கிளர்—அழகு மிகுந்த.

௧௦௧. உண்ணினீர்—உண்ணின் + நீர்.

௧௦௨. தணந்தமை—பிரிந்தமை. அணங்கனாள்—தெய்வப் பெண் போன்றவள்.

௧௦௩. யாத்த—கட்டிய. இவுளி—குதிரை.

௧௦௪. கோடல்—கொள்ளுதல், கேட்டல்.

வாங்கியக் கனியினை வாய்ப்பெய் துண்டனள்.
ஈங்கித னின்சுவைக் கீடொன் றில்லையால்.
தீங்கரும் புதவிய செம்ம றோன்றலே!
யாங்குப்பெற் றனை? இனு மீக வென்றனள். ௧0௫

பொய்யுரை யறிகலான் போன கானிடைத்
தெய்வமோ துறவியோ தெளிக லேனிது
மெய்யுணிற் சாதலை விலக்கு மென்றனன்
கையில்வே றில்லையென் றூனக் காவலன். ௧0௬

கேட்டனள்; திகைத்தனள்; கேண்மை போலும்நம்
மாட்டிவன் தந்தது; மனைவி மைந்தருக்
கூட்டிலன்; உணர்ந்தவன் றானு முண்டிலன்;
காட்டின னன்பெனக் கருதி னளரோ. ௧0௭

## அதியமானை வாழ்த்துதல்

நலம்புரிந் திசைகொளு ஞாலங் காவல!
பொலம்பிறை சென்னியிற் பொலியுஞ் செல்வனில்
நிலந்தனிற் புகழொடு நீடு வாழ்கென
வலம்படு வெனுந்தொடை பாடி வாழ்த்தினள்.* ௧0௮

மன்னனை யெண்ணுவாள். வரம்பி லாதுசெய்
நன்மையை யெண்ணுவாள். நயந்து பாடுவாள்.
சென்னெறி தொறுமுடன் றிரிவ ளௌவை.அம்
மன்னனு மன்னவண் மனத்துள் வாழ்ந்தனன். ௧0௯

---

௧0௫. ஈடு—ஒப்பு. செம்மல்—அதியமான் முன்னோரிலொருவன். அதியமானின் முன்னோரிலொருவன் தன்னாட்டிற்குக் கரும்பைக் கொண்டு வந்தானென்று ஔவையார் புறம் 99-ம் செய்யுளில் பாடுகிறார்.

௧0௭. நம்மாட்டு—நம்மிடம்.

௧0௮.*வலம்படு... ..........அஞ்சி
பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி
நீல மணிமிடற் றொருவன போல
மன்னுக பெரும நீயே தொன்னிலைப்
பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதல் நின்னகத் தடக்கிச்
சாதல் நீங்க எமக்கீந் தனையே. (புறம், 91.)

௧0௯. அன்னவள்—அவ்வௌவையார்,

## எழினிக்குக் கல்வி கற்பித்தல்

சிறுபுலி யன்னவன் செம்மை நன்னடை
பெறுமியல் பினன்பொருட் டெழினி பீடுகொள்
அறமுதன் மூன்றுநன் கறியக் கூறுவாள்;
திறமுணர்ந் தவன்றனக் கொன்று செப்புவாள். கக0

## தமிழியல் புரைத்தல்

நிலமிசைப் புகழுலா னிற்ப தொன்றிலை.
வலிமனன் புகழ்சொலும்; வன்மை தான்சொலும்;
உலகவன் புகழ்சொலும்; உரைக்குஞ் செந்தமிழ்;
தலையது பின்னது; சாற்றக் கேட்டியால். ககக

அன்னையப் பனைமுன மழைக்க வல்லது.
தன்னையும் பிறரையுஞ் சாற்ற வல்லது.
நன்மையுந் தீமையு நவில வல்லது.
தொன்மையிற் றென்மைய தினிமை தோய்ந்தது. ககஉ

தொன்மையைப் பின்னவர்க் கெடுத்துச் சொல்லுழித்
தன்னைநல் லணிகளாற் புனைவித் தாரையும்
அன்னவர்க் குதவிய வரசர் தம்மையும்
பன்னுமால். பிறர்செயல் பகர்த லில்லையே. ககங

வலிமையும் வண்மையு முலக மக்களும்
ஒலிகழ லரசர்தம் புகழை யோதினும்
சிலபக லொருபுடைத் திகழ்வ தல்லது
நிலமெலாம் பலபக னிலவ லில்லையே. ககச

பிறந்தவ ரெத்தனை பெயர்? அவர்களில்
இறந்தவ ரல்லதிங் கிருப்பர் யாவரே?
சிறந்தசெந் தமிழ்புகல் சிலரை யல்லதிங்
கறிந்திலம் பிறரையென் றறிவித் தாளரோ. ககரு

அருந்தமி ழியல்பினை யெளவை தான்சொலத்
திருந்திரு செவிகளாற் செம்மல் கேட்டனன்.
பொருந்துசெந் தமிழையும் புலவர் தம்மையும்
பெரும்புகழ் கொள்ளுவான் பெரிதும் போற்றுவான். ககசா

---

ககங. அணி உவமை முதலியன. புனைவித்தாரையும—அழகுபடுத்திப் பாடிய புலவர்களையும். பன்னும்—சொல்லும்.

ககச. சிலபகல்—சிலநாள். ஒருபுடை—ஒருபக்கத்தில்.

டகன்செய லறிவையு மனைவி மாண்பையுந்
தகவுறு தமிழறி தையல் சால்பையும்
புகழுவன் ; பேறெனப் புகலு வான்மனன் ;
அகமிக மகிழுவான். அன்ன நாளினில், ககஎ

## காரியோடு போருக்கெழுதல்

(வேறு)

வணங்கு கின்றேன் மன்ன னேமலாடர் கோன்முன் போவிலே.
பிணங்கு கின்ற னன்.ப ழித்துப் பேசு கின்ற னன் படைக்
கணந்தி றம்ப டைத்த தென்றுங் காவலர்தன் மேல்வரின்
மணங்க மழ்பூ மாலை மார்பன் மாய்ப்ப னென்றும் பேசுவான்.

என்று வந்த வொற்றர்கூவர் கூறக் கேட்டி றையவன்
நன்று நன்றி கழ்ந்து ரைத்தான் நம்மை யுஞ்சேர்த் தேயெனுக்
குன்றெ னப்ப ணைத்த தோள்கு லுங்க நக்குத் தன்னகர்க்
கின்று போர்ப்ப றைய றையென் றேவ லானை யேவினுன். ககசு

ஏவ லன்போய்க் கொட்டி னுன்.எ ழுந்து வந்து மள்ளர்கள்
யாவ ரும்ப டைக ளேந்தி யாளி போல வேகுவார்.
போவ தெங்கெம் மன்ன னேடு போர்கொ லென்பார் பற்பலர்.
கோவன் மன்னன் றன்னே டென்று கூறு வார்கள் பற்பலர்.

மறக்கு டிப்பி றந்த மூதின்மங்கை யர்க டம்முனேர்
சிறப்பி னைப்பு துக்க மக்காள்! சென்மி னென்று முன்பு போய்ப்
பிறப்பெ டுத்த பின்பு கழ்ச்சி பெற்றி றந்தா ரேயலால்
இறப்பை யஞ்சி னுர்முன் னேரி லில்லை;சென்மி னென்பரால்.

கரியெ றிந்து மீளெனக்க ணைகணல்கி யுய்ப்பரால்.
பரியெ றிந்து மீளெ னப்ப டைகணல்கி யுய்ப்பரால்.
வரிவி லேந்தி முன்ன நண்ணு மள்ள ரையெ திர்க்கையில்
வெரிநி டிற் றெடாதே யென்று வேல்க ணல்கி யுய்ப்பரால்.

---

ககஅ. மலாடர்கோன்—காரி. பிணங்குகின்றனன்—மாறுபடுகின்றனன்.
படைக்கணம்—படைக்கூட்டம்.

ககசு. பணைத்த—பருத்த.

கஉ0. மள்ளர்கள்—வீரர்கள். கோவன் மன்னன் = கோவல் + மன்னன்.

கஉஉ. கணை—அம்பு. படை — படைக்கருவி. வெரிநிடின் — புறமுது
கிட்டால்.

முன்ன முன்ன ராமெ னாமு னைந்து வந்த மள்ளரும்
வன்மை மிக்க வீரர் தாமும் மற்றை முப்ப டையொடு
பன்ன ரும்ப றைமு ழங்கப் பார திர்ந்து சோர்வுறத்
துன்னு தூளி விண்ணெ ழத்தொ டர்ந்த தர்ந டந்தனர். ௧௨௩

காலம் பார்த்துக் கொக்கெ னக்க ரந்து வெல்லு நெஞ்சிலான்
வேலன் போலு முன்பி னன்வி ளைகு றித்தெ ழுந்தவன்
ஞால மீது சூறை போன டைகொ ளுந்தன் கொய்யுளை
மேல மர்ந்து சென்ற னன்வி ரும்பி யெளவை பின்வர. ௧௨௪

நிலைகொ ணீண்ம லைக ளாநி லத்தி னுட்பு குத்தவோ?
அலைக டற்ப ரப்பெ லாம வற்றி னானி ரப்பவோ?
மலைய மானை வெல்ல வோ? இவ் வன்மை மிக்க தானையுஞ்
சிலைவல் கோவு மேகு வாரென் றாரி யம்பச் சொல்லுவார். ௧௨௫

விண்ணெ ழுந்த தூளி காயும் வெம்ப கன்ம றைக்கவும்,
ஒண்க திர்வி ரித்த யில்வேல் வல்லி ருட்டை யோட்டவும்,
அண்ணல் வாழ்க வாழ்க வென்ற னைவ ரும்பு கன்றுபோய்ப்
பெண்ணை பாயுந் தண்வ யல்பி றங்கு நாட டைந்தனர். ௧௨௬

காவி கள்கண் ணீர்வி டக்க லங்கி ஞெண்ட ளைபுகத்
தாவி மீனி னம்பு குந்து சாய்ந்த நெல்வ யல்வழி
ஆவி கொள்ளுங் கூற்றன் னார்க ளார்ப்பி னோடு சேர்ந்தனர்
வாவி காவ ழித்து நல்வ ளங்கொள் கோவ லூரையே. ௧௨௭

தூளி மேலெ ழுந்தெ ழுச்சி சொல்லத் தோற்ப றைக்குலம்
நாளை வாவெ னக்க றங்க நாடு ரைக்க நோக்கியிவ்
வேளை யேநந் தானை காஞ்சி வேய்ந்து போருக் கேகென
மீளி காரி யேவ வோடி வெங்க ளம்பு குந்தனர். ௧௨௮

போர்ப்ப றைமு ழக்கினர். பு லிக்கு லம்போ லார்த்தனர்.
ஆர்த்து வந்த தானை முன்ன டைந்த னாமி டைந்தனர்.
கூர்த்தெ ழுந்து வேந்து சீர்த்தி கூறி னார்பின் சீறினார்.
கார்ப்பெ யல்க டுப்ப வாய்க டித்து வாளி யுய்த்தனர். ௧௨௯

---

௧௨௩. முனைந்து—முற்பட்டு. தூளி—தூசி. அதர்—வழி.

௧௨௪. முன்பினன்—வலிமையுடையவன். கொய்யுளை—குதிரை.

௧௨௫. நீண்மலை=நீள்+மலை. தானை—சேனை. சிலை—வில்.

௧௨௬. தூளி—தூசி. வெம்பகல்—ஞாயிறு.

௧௨௭. கண்ணீர் விட—(1) கண்களாகிய மலரிலிருந்து நீரைவடிக்க, (2) தேனாகிய நீரை வடிக்க. ஞெண்டு—நண்டு. கோவலூரைச் சேர்ந்தனர் என இயைக்க.

௧௨௮. கறங்க—ஒலிக்க. மீளி—வலிமையுடையவன்.

௧௨௯. கார்ப்பெயல்கடுப்ப—மேகம் பெய்கிற துளிகளைப்போல. வாளி—அம்பு.

குன்ற மென்ன நிற்கு மால்;வெவ் கூற்ற மென்னச் செல்லுமால்;
சென்று சென்றி ரண்டி ரண்டு சேர்ந்து வேழ முட்டுமால்.
வென்றி கொள்கொ டிஞ்சி வையம் வெஞ்சி னங்கொண் டேகுமால்
வன்றி ரைக்க டற்க ணேம ரக்க லம்வி ரைந்தென. ௧௫௦

வேலும் வாளுஞ் சென்று சென்று வீரர் மார்பு பாயுமால்.
கோலு மெஃகு மேகி யேகிக் கொய்யு ளைமா வீழ்த்துமால்.
காலுங் கையும் வீழ யானை கல்லெ னப்பு ரண்டிட
மேலு மேலும் வாளை யேவி வெட்டு வார்பல் வீரரே. ௧௫௧

தாள்கள் வீழும்.கைகள் வீழும் தார்பு னைந்த மார்பொடு
தோள்கள் வீழும். சென்னி வீழும். சோரி வீழும் யானையின்
நீள்கை வீழும் கோடு வீழும் நின்று சென்று மீளிகள்
வாள்க ளேந்தி மாறு கொண்டு மாய்க்கு மக்க ளத்தினே. ௧௫௨

குருதி யாறு பாயு மால்.கு றையு டன்மி தக்குமால்.
கரியு டற்கு றைபெ ருங்க ரையெனக்கி டக்குமால்.
எருவை யுண்டு வக்கு மாலி னைய வெங்க ளத்தினில்
ஒருவர் தானை வென்ற தென்று ணர்ந்தி லர்மொ ழிந்திலர். ௧௫௩

அன்ன காலை வெஞ்சி னங்கொண் டஞ்சி வேல்வி லம்பொடு
மின்னு வாளெ டுத்து முன்வி ரைந்து சென்ற னன். பல
ஒன்ன லர்கண் டோடி வந்து ருத்து நிற்ப வம்மினோ.
என்க ணைபெற் றேகு மின்க ளென்று ரைத்தெ டுத்தனன். ௧௫௪

எடுத்த தைக்கண் டாரிலை. யி ழுத்து நாணொ டம்புகள்
தொடுத்த தைக்கண் டாரிலை. து ணிப்ப தைககண் டாரிலை
வடுப்ப டுத்து பல்சு டர்கால் வாண மொக்கும் வில்லிடைக்
கடுப்பு டன்பு றப்ப டுங்க ணைகள் பாயக் கண்டனர். ௧௫௫

ஆளி யன்னோ னேவு பற்ப லம்பு தங்கள் கண்ணினும்
தோளு மார்புங் கையும் பாயத் தொண்டை வாய்து ளைத்திட
நீளி மைக்கண் காது பாய நெற்றி யூடு மோடவே
வாளி யுண்ட மிச்சி லாகி மள்ள ரெல்லா மோடினர். ௧௫௬

௧௫௦. கொடிஞ்சி—தேர் மொட்டு. வையம்—தேர்.

௧௫௧. கோல்—அம்பு. கொய்யுளைமா—குதிரை.

௧௫௨. சோரி—இரத்தம். கோடு—தந்தம்.

௧௫௩. குருதி—இரத்தம். உடன்மிதக்கும=உடல்+மிதக்கும். எருவை—பருந்து.

௧௫௫. பல்சுடர் கால் வாண மென்ன—பல தீப்பொறிகளைக் கக்குகின்ற வாணத்தைப்போல. வாணம—பொறிவாணம். வாணம் வில்லுக்கும் அதிலிருந்து புறப்படும் பொறிகள் அம்புக்கும் உவமை. கடுப்புடன்—விரைவோடு.

வில்லெ றிந்தங் கோடினர். தம் வேலெ றிந்தங் கோடினர்.
கொல்லி யானை சில்லி வையங் கொய்யு ளைகொண் டேகினர்.
செல்க செல்க வென்று மள்ளர் செப்பி முன்முன் போயினர்.
வல்லே காரி மீதி ருந்த மன்ன னும்வி ரைந்தனன். கருஎ

தமரெ லாநெ ருங்கினர்;த லைவ ணங்கி நின்றனர்;
கமழ லங்கல் வாகை யானைக் கண்டு கண்டு வந்தனர்.
தமிழ லங்கல் சூட்டி யெங்குஞ் சாரு மௌவைத் தையலும்
அமரர்ப் பேணி யென்னுஞ் செய்யு ளாக்கி னுள்நன் கூக்கினுள்.*

## ஞாயிற்றின் மறைவு

செருக்க ளத்தி ரிந்து மேற்கென் செய்ய வோடி னனெனக்
கருத்தி ருத்தி ஞாயி றோங்கு கல்வ ரையி வர்ந்த(து) இங்(கு)
இருக்கு மள்ள ருக்கி கழ்வென் றும்பல் வாயெ டுக்குமால்.
செருக்கு வார்க்கி ரங்கு மேகொல்? முல்லை யுஞ்சி ரிக்குமே. கருகூ

## திங்களின் தோற்றம்

வென்ற வக்க ளத்தி லஞ்சி வேந்தன் சூழ்ச மைத்தனன்.
பொன்று விக்கும் வேலு ழைந்து புண்ண டைந்த மைந்தரைச்
சென்று கங்கு லின்கண் கண்டு கண்டு செம்மன் மீண்டனன்.
நன்று மன்னன் செய்கை யென்று திங்க டோன்றி நாடுமே. கசய

வாளில் வேலில் வென்ற நாட்டின் மாண்பு றச்செய் வீட்டினில்
ஆளி யன்ன மன்னன் றங்கி யாவி போலு மாதினை
நீள நெஞ்சி லெண்ணி னுன்றன் னேரி னிற்க னேக்கினுன்.
நாளை யேகு வேனென் றுன்னி நமபி யஞ்சி துஞ்சினுன். கசக

பாவல் லோர்கள் பாடினுர்:பல் பாணர் யாழி சைத்தனர்.
ஏவல் லார்க ளீண்டி னுர்;எ ழுந்த தென்றூ ழார்கலி.
காவ லன்று யின்றெ ழுந்து கைம்ம லையிவர்ந்து போய்க்
கோவ லூர டைந்த டிப்ப டுத்தி னன்;கு ளிர்ந்தனன். கசஉ

---

கருஎ. கொல்லியானை = கொல் + யானை. சில்லிவையம்—உருளையை யுடைய தேர்.

கருஅ.* அமரர்ப் பேணி... ......
அனறும் பாடுநர்க் கரியை இன்றும்
பரணன் பாடினன் மற்கொல் மற்றுநீ
முரண்மிகு கோவலூர நூறிநின்
அரணடு திகிரி ஏந்திய தோளே. (புறம், 99.)

கருகூ. ஓடினுன் : காரி. கல்வரை—மேற்குத்தொடர்ச்சி மலை.

கசய. பொன்றுவிக்கும்—இறப்பிக்கும். மைந்தர்—வீரர்.

கசஉ. என்றூழ்—ஞாயிறு. ஆர்கலி—கடலில். கைம்மலை—யானை.

திகிரி மண்ணை யெண்ணி யாங்கு செய்பவன்க லம்வனைந்(து)
அகம கிழ்தல் போன்று கோவ லூரை நண்ணி யாண்மையில்
புகழு லாவக் கொண்டு நெஞ்சு வந்து பூம்பொ ழின்மிகுந்
தகடூர் சேர மன்ன னெண்ணித் தன்னெ டுந்தே ரேறினான். ௧௪௩

விறன்மி குந்த தானையோடு வேந்தன் மீண்ட னன். கடை
திறமி னென்று பாணர் பாடச் சேலெ னுங்கண் மாதரார்
இறுநு சுப்பொ டேகி மின்னின் வாயி னின்றெ திர்கொள,
மறவ ரைப்பெற் றுரு வக்க மன்னன் வீதி சேர்ந்தனன். ௧௪௪

மாரி சேரு முன்ன மீள்வ னென்ற மன்னன் வந்திலன்.
போரி யத்தின் வானி டித்துப் போழும் வாளின் மின்னுமென்(று)
ஏரி லங்கு வேற்கண் மாதி ரங்கும்போ தியத்தொலி
தேரிழுக்கு மான்க னைப்புச் சேர்ந்த வாற்செ விக்கணே. ௧௪௫

நீடு கூந்த லூடு கண்க ணெற்றி பெற்ற வெண்மதி
கூடி யாயி ரந்தொடர்ந்து கொற்ற வன்றன் மீள்கையை
மாடநின்று நோக்கி யாங்கு மாதர் மைக்கண் வாண்முகம்
நாடி நோக்கி யின்பங் கொள்ள நண்ணி னான்றன் கோயிலே. ௧௪௬

மெய்வ டுப்ப டச்செ குத்து மீண்ட வர்க்கு மாண்டவர்
மொய்கு ழன்ம னைவி யர்க்கு முத்த மிழ்வல் லார்க்குநன்
செய்யும் பொன்னு நல்கி னான்;சி றப்பு மற்று நல்கினான்;
நெய்யி லங்கு வேற்கை மன்ன னேரி ழைமு னேகினான். ௧௪௭

முல்லை முன்ன ரும்பிக் காவி முன்ம லர்த்திக் கொவ்வையின்
நல்லி யற்ப ழம்ப ழுத்து நைந்து நின்ற பூங்கொடி
சில்லு ரைகண் மெல்ல முன்பு செப்ப வைம்பொ றிப்பயன்
வில்லெ றிந்த தோளி னான்வி ருப்பி னோடுந் துய்த்தனன். ௧௪௮

---

௧௪௪. விறல்—வீரம். நுசுப்பு—இடை. மின்னின்—மின்னலைப்போல.

௧௪௫. மாரி—மழைக்காலம். போரியத்தின்—போர்ப்பறைபோல. போழும்வாளின் — வெட்டும் வாள்போல. மாது—அஞ்சியின் மனைவி. இயத்தொலி—அஞ்சி மீளும்பொழுது கொட்டப்பட்ட வெற்றிப்பறையின் முழக்கம் தேரிழுக்கும் மான் கனைப்பு—அஞ்சி ஏறிவரும் தேரை இழுக்கும குதிரையின் முழக்கம். சேர்ந்தவால் ஆல் அசை. (சேர்ந்தன).

௧௪௭. செகுத்து—பகைவரைக் கொன்று. மொய் குழல்—நெருங்கிய கூந்தல். நேரிழை — நேர்மையான அணிகலங்களை யணிந்த அஞ்சியின் மனைவி.

௧௪௮. முல்லை—முல்லை யரும்பு போன்ற பல். காவி—காவிமலர் போன்ற கண்கள். கொவ்வை — கொவ்வைக் கனி போன்ற உதடு. பூங்கொடி—பூங்கொடி போன்ற அஞ்சியின் மனைவி. ஐம்பொறிப் பயன்—கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றறியும் புலனுகர்ச்சி. துய்த்தான்—அனுபவித்தான்.

இடித்து மின்னிப் பெய்யும் வான மேநீ யெம்மை யென்செய்வாய்;
தொடிக்கை யுண்க ணீண்ட கூந்தற் றோகையன்ன சாயலாள்
படுக்கை மீதெம் பக்க லுள்ளாள்;பாவை பக்கல் யானுளேன்.
அடுத்த டுத்துப் பெய்க. நாட்டுக் காக்க மாகு மென்பனே. கசகூ

திருந்த ணையி ருந்து நாடு செம்மை யிற்கோ லோச்சுவன்;
விருந்து வந்த போதெ லாம்வி ருப்பி னோடு மூட்டுவன்;
அருந்த மிழ்த்தி றந்தெ ரிந்தி யானை தேர ளிப்பனால்;
பருந்த டக்கை மன்னன் செய்கை யாவரேப கர்பவர்? கருo

ஈத லுங்க ளம்பு குந்தெ திர்ந்து வென்றி கொள்ளலும்
சாத லும்பு கழ்ச்சி யென்று மாறன் சோழன் றும்விடும்
தூதர் வந்த ழைக்கு மூன்று ணைக்கெ ழுந்து செல்லுவான்.
ஆத னோடு மன்பு கொண்ட கங்க ணிந்து வாழ்வனே. கருக

## காரி, சேர லிரும்பொறையிடம் சேரல்

(வேறு)

போரிற்பகை முன்புபு றங்கொடுத்த
காரிப்பரி மன்னவன் கான்வழிபோய்
வேரிற்பழம் வீழ்ந்துவிள் ளும்பலவின்
சாரற்கிறை சேரனைச் சார்ந்தனனே. கருஉ

மின்னார்வடி வேலதி யன்விளங்கு
தன்னோடுக வர்ந்தமை தான்மொழிந்து
மன்னுபெருந் தானையு டன்வருக
என்னுட்டினுக் கென்றவ னையிரந்தான். கருங

இரந்தானுரை கேட்டவி ரும்பொறைகூர்
அரம்போலறி வார்ந்தவ மைச்சரையும்
உரஞ்சார்படை கட்குமுன் னோன்றனையும்
அரண்சூழ்மனைக் கப்பொழு தேயழைத்தான். கருச

கொடையாற்புகழ் கொண்டவன் றன்னுடைய
படையோடுமு னின்றுப கையெதிர்ந்தோன்
நடையானனி நல்லவன் காரிபகைக்
குடையாவிரைந் துற்றத வர்க்குரைத்து, கருரு

---

கருக. மாறன்—பாண்டியன். ஆதன்—வல்வில் ஓரி.

கருஉ. விள்ளும்—விரியும். சேரன்—பெருஞ்சேர லிரும்பொறை.

கருரு. நனி—மிக. உடையா—உடைந்து; தோற்று.

இகலாலெதிர்ந் தாரெழு மன்னரையும்
தகடூரதி யன்மலைந் தான்றனியே.
புகழ்சேர்படைக் காரியொ டும்பொருதான்.
இகழ்வா னமையுஞ்சில நாளிருக்கின். ௧௫௬

மாயும்வழி கண்டுடன் மாய்க்கினலால்
நோயும்பகை யும்பினர் நோவுதரும்.
ஆயும்பெரி யீர்பகைக் கஞ்சிவிடின்
ஏயும்பெருந் துன்புமி கழ்ச்சியுமே. ௧௫௭

மறத்தாற் பகைநாட்டினை வெளவுதலும்
அறத்தாற்றினி னாட்டினை யாளுதலுஞ்
சிறப்பார்தமிழ்த் தீந்தொடை கொள்ளுதலும்
இறப்பில்புக ழெய்துமெ ழிற்செயலாம். ௧௫௮

பன்னாளென துள்ளம்ப கைவரைவென் (று)
அன்னார்க்கர சாவத னைநினைக்கும்.
தொன்னூலுணர்ந் தீர்வழி சொல்லுமினோ
என்னாமொழிந் தான்மலை நாட்டிறைவன். ௧௫௯

அரசன்மொழி கேட்டவ மைச்சர்பகை
உரமுந்துணை வன்மையு மோர்ந்தனர்.பின்
வரவென்னென நோக்கினர். வந்தவிறை
கரவின்மனத் தானெனக் கண்டனரே. ௧௬0

அதியன்றக டூரைய டைதலினும்
உதவிக்கெழு மோரியின் மேற்செலன்மேல்.
எதிர்வானதி யன்வரி னங்கெளிதின்
மதுகைகெடுத் தோட்டுநம் வன்படையே' ௧௬௧

என்றார்மதி வல்லவர். கேட்டிறைவன்
வன்றோள்பணைத் துள்ளம கிழ்ந்துமிக
நன்றாம்வழி நோக்கினீர். நன்றுரைததீர்.
இன்றேமுயல் வேன்செலற் கென்றெழுந்தான். ௧௬௨

---

௧௫௬. இகல்—பகைமை. எழுமன்னர் · எழினி முதலிய எழுவர்.

௧௫௭. நோவு—துன்பம். ஏயும்—பொருந்தும்; (வினைமுற்று).

௧௬0. உரம்—வலிமை. வரவு—வரும் பயன்.

௧௬௧. மதுகை—வலிமை.

## ஆனிரை கோடல்

### (வேறு)

மல்லுயர் தோள்வலி மைந்தரைக் கூவி
வில்லினில் வல்லவன் மேவல னாதன்
கொல்லியின் மேய்வுறு மானிரை கொள்ளச்
செல்கென, வன்னவர் நன்றெனச் சென்று, கசுரு

வெண்பளிங் கன்ன விளங்கொளி மெய்ய
கண்கவர் புள்ளிய திண்கருங் கால
ஒண்பிறை போலெதி ரோங்கிரு கோட்டா
வெண்ணில கொண்டடைந் தாரிறை வன்முன். கசுச

## முரசறைவித்தல்

நோயினர் பற்றறு நோன்பினர் பைம்பொன்
ஆயிழை மங்கைய ராண்மக வில்லார்
போயரண் சேர்கென போர்முர சோச்ச
ஏயினன் வள்ளுவ னைவிளி தேந்தல் கசுரு

## போர்க்கெழுதல்

போரணி கொள்ளுக வென்றுபு கன்றான்.
வீரர் ரிந்தனர் மெய்புள கித்தார்.
கூரரி வாள்கணை வேல்சிலை கொண்டார்.
ஆர்கலி நாணுற வார்த்தும கிழ்ந்தார். கசுசு

குதிரைமி சைப்ப ணமைத்தனர் கூடி.
அதிர்மணி யாத்தனர் யானையின் மீது.
புதியபே ராழி பொருத்தினர் தேரில்.
பதலையும் பேரியும் பமபையு மார்த்த. கசுஎ

வெண்குடை பற்பல விண்ணில் விளங்குந்
தண்மதி மண்ணிடைச் சார்ந்தன போல்வ.
விண்ணிடஞ் சேர்ந்தசை யுங்கொடி மின்னல்
ஒண்கொடி போல வொளிர்வன தோன்றும். கசுஅ

---

கசுரு. ஆதன்—ஓரி. ஆனிரை—பசுக்கூட்டம.

கசுச. மெய்ய—மெய்யையுடைய பசுக்கள். புள்ளிய—புள்ளியையுடைய பசுக்கள். கோட்டு ஆ—கொம்பையுடைய பசுக்கள்.

கசுரு. அரண்—பாதுகாவலான இடம். ஏயினன்—ஏவினன்.

கசுஎ. ஆழி—சக்கரம். பதலை—ஒருவகைப் பறை.

வெஞ்சின மள்ளர் வெருண்டனர்; நின்றார்.
செஞ்சிலை யேந்தி யடைந்தனன் சேரன்.
நெஞ்சிலி ருக்கு நினைப்பை முடிக்கக்
குஞ்சிம லேந்தனன் கொங்குசேர் வஞ்சி. கசுக

மிடைதரு பல்லிய மிக்கதிர்ந் தார்க்கக்
குடைசெல விட்டனன்; கூரிய வெவ்வாட்
படைசெல விட்டனன்; பற்றலன் கூற்றம்
அடைதர விட்டனன் றானை யனைத்தும். கஎ0

விரும்பிவெண் சாமரை மங்கையர் வீச
அருந்திறல் பாடிமுன் பாணரங் கார்ப்பக்
கருங்குதி ரைக்கழற் காரிமுன் செல்ல
இரும்பொறை தேரிவர்ந் தேகின னன்றே. கஎக

மாடமி சைப்பொலி மங்கையர் மூத்த
ஆடவ ரெங்கணும் வாழ்த்தெடுத் தார்த்துக்
கூடலன் மேற்செலுங் கொற்றவன் வாகை
சூடுக வென்றலர் தூவுவர் மேலே. கஎஉ

கண்டார் கூற்று

போந்தையந் தோடு புனைந்தமன் னன்வில்
ஏந்தினன். மாய்பவ ரெத்துணை யாரோ?
பாய்ந்துகொல் வேங்கைதம் பக்கல டைந்தால்
காய்ந்தெதிர் நிற்குமோ கானுழை யென்பார். கஎங

எழுக்கிணை தோளினன் சீறியெ திர்க்குந்
தெழிப்பினில் வாளினில் வேலினிற் றீய
அழுக்கறு வார்பொருள் போலழி வெய்தும்.
பழிப்படை யும்பகை வன்படை யென்பார். கஎச

வெயிலுறு வெண்ணெயிற் றன்படை வீய
உயிரிழந் தான்கழு வுண்முனம். மத்தில்
தயிருடைந் தாலென வோரியின் றானை
துயருறு மாலிவன் முன்னெனச் சொல்வார். கஎரு

---

கஎ0. மிடைதரு பல்லியம்—நெருங்கிக் கூடிய வாத்தியம். பற்றலன் கூற்றம்—பகைவனுகிய ஓரியின் கொல்லிக் கூற்றத்தை.

கஎங. போந்தையந்தோடு—பனந்தோடு. கானுழை—காட்டு மான்கள்.

கஎச. எழுக்கு இணை—கணைய மரத்திற்கு ஒப்பாகின்ற. தெழிப்பு—உரப்பியொலித்தல். அழுக்கறுவார்—அழுக்காறு கொள்பவர்.

கஎரு- கழுவுள்: இடையர் தலைவன். பதிற்றுப்பத்து, 8. 1-ஆம் செய்யுளை நோக்குக.

என்பொருள் வேண்டினை யென்றவை யீயின்
வன்கழு தொப்பம கிழ்ந்தகல் வானால்.
முன்வரிற் பின்னடை யான்முனிந் தேகின்
இன்னுயிர் கூற்றெனக் கொள்ளுவ னென்பார். ௧௭௬

வில்லெடுத் தாதனை வேந்தன் வெகுண்டான்.
கொல்லியை வெல்லுவ மென்றுளங் கொண்டு
கல்லனைத் தும்படர்ந் தாங்குக னன்று
செல்கரி காண்மினென் பார்பலர் சேர்ந்தே. ௧௭௭

பாரினில் வாழ்வுறு பாய்பரி தம்முள்
ஓரியுங் காரியு மொப்புயர் வற்ற.
போரிடல் காண்பமென் றேகுதல் போன்று
காரிமுன் செல்பரி காணுமி னென்பார். ௧௭௮

செய்கட னென்றுதந் தெவ்வரை யண்மி
மெய்துளை பட்டுயிர விட்டவர் தம்மைத்
தெய்வநி லம்புகுத் தற்குறுந் தேரில்
வையம்வி ளங்குமெ னப்பகர் வாரே. ௧௭௯

காட்டுயி ரத்தனை யுங்கணை தம்மால்
வேட்டன னென்றுபல் வேங்கை வில்லோரி
நாட்டினை வெல்லந டப்பன போல
ஆட்படை செல்லுதல் காண்மினென் றார்ப்பார். ௧௮௦

இன்னன கூறவி லங்கணி மார்பன்
மன்னவ னேகினன். மாசறு கேள்வித்
தென்மொழி வல்லவர் சென்றனர். தானை
முன்னந டந்தன வெஞ்சொன் மொழிந்தே. ௧௮௧

### ஓரி, அதியமானிடம் தூதுவனை அனுப்புதல்

ஆனிரை கொண்டவ ருந்திறற் சேரன்
தானையொ டும்பொரு வானமைச் சார்வான்.
ஊனுயி ருண்ணுநம் மம்புள வேனும்
வேனெடு மான்றனை வேண்டுவ மென்னா, ௧௮௨

---

௧௭௬. கழுது—பேய்.

௧௭௭. கல்லனைத்தும்—அவன் நாட்டு எல்லா மலைகளும்.

௧௭௯. தெவ்வர்—பகைவர். வையம்—தேர்.

௧௮௨. ஆனிரை—பசுக்கூட்டம். பொருவான்—போரிடுவதற்கு.

சொல்லவல் லானொரு தூதனைக் கூவி
வில்லவன் சீற்றமுன் கூறு.பின் வீரம்
மல்குதன் றானையு டன்வரல் வேண்டு.
செல்லென ஓரிசெ லுத்தினன். சென்றான். கஅங

வெயிலுழை யாவுயர் விண்டொடு காவில்
மயிலன சாயனன் மங்கைய ரூசல்
வயின்வயி னாடிம கிழ்தக ேர்போய்
எயிலுறு கோயிலை யெய்தினன் றூதன். கஅச

நரம்பிசை யா(து)எது நாவிசை யென்று
தெரிந்துண ராவகை செவ்வழி பாடி
இருந்துக லந்தொடு மௌவைதன் பாடல்
விருந்துணும் வெந்திறல் வேந்தனைச் சார்ந்தான். கஅரு

காவலன் பாற்செலுங் காலம றிந்தான்.
ஆவலொ டுமபணிந் தண்ணலை வாழ்த்தி
நாவலி யான்முன டந்தவ னைத்தும்
ஓவறக் கூறினன்; பின்னுமு ரைப்பான். கஅசு

கொல்லியை யாளுமெங் கொற்றவ னைச்சார்
அல்லனின் னல்லல்.அஃ தன்றென தென்னாய்.
வில்லவ னாற்படை மிக்கவன். எங்கோன்
வல்வரல் வேண்டினன் மன்னவ! வென்றான். கஅஎ

அதியன் சூழ்ச்சி

நன்றுநன் றென்றுந கைத்தனன். நம்மோ(டு)
அன்றுப கைத்துயிர்க் கஞ்சிய காரி
சென்றபின் சூழ்ந்தது போலுமிச் செய்கை
என்றும னத்துணி னைந்தன னேந்தல். கஅஅ

இற்றவன் வாழுவன் சேரனொ டென்றன்(று)
ஒற்றரு ரைத்தனர். ஓரியி னாட்டைப்
பற்றுதற் கின்றெழுந் தான்பனந் தாரான்
கொற்றவ வென்றிவன் கூறுவ னென்னே. கஅகூ

கஅங. வில்லவன்—சேரன். தானை—சேனை.

கஅச. வயின்வயின்—இடந்தொறும். எயில்—மதில்.

கஅரு. செவ்வழி: ஒருவகைப் பண். கலம் - யாழ்.

கஅசு. நாவலியால்—பேசுந் திறமையினால். ஓவற—ஒழியாமல்.

கஅஎ. அஃது எனது அன்று என்று இயைத்துக்கொள்க. வல்வரல்—விரைந்து வருதலை. கஅஅ. ஏந்தல்—அதியமான்.

கஅகூ. இற்றவன் — தோற்றவனாகியகாரி. பனந்தாரான் — பனம்பூ மாலையையுடைய இரும்பொறை.

சேரனுங் காரியுஞ் சேர்ந்தனர் போலும்.
ஓரியை முன்வெலற் குன்னின ராவர்.
போரினில் வென்றபின் பொங்கியெ ழுந்திச்
சீருறு நந்நகர் சேருவர் போலும். ககம0

தூதன றிந்துமுன் சொன்னது மெய்யே.
தீதறு பல்படை சேரனுக் குண்டால்.
ஆதனி டத்துநம் பாலுமன் னனைப்
பேதுறுத் தற்குள வோபெருந் தானை? ககக

உள்ளன வென்னினு மொத்தவு ரத்தான்
மள்ளரை வெல்வது மற்றெளி தேயோ?
தெள்ளிதி னய்ந்தெழுந் தெவ்வை யடக்க
எள்ளலி றானையி னுங்கொள னன்றே. ககஉ

ஆற்றள வுக்கணை யாக்குத னன்றும்.
சீற்றமி கும்பொறிச் சிற்றர வையும்
ஏற்றகு றுந்தடி கொண்டெறி யென்ப.
தோற்றபி னோவலிற் சூழ்பய னென்னே? ககந

வன்படை வேண்டுமுன் வையைநா டாளுந்
தென்னனு மார்புனை சென்னியு மீவார்.
அன்னவர் நந்துணை பெற்றவ ரன்றோ.
மன்னவர் நன்றிம றப்பவ ரேயோ. ககச

செவ்விய றிந்துமுன் செப்பவல் லாரில்
ஔவைசி றந்தவள். ஐயுற வில்லை.
தெவ்வரு முன்புதி ருமபுதல் வேண்டும்.
மெய்வலி யாரை விடுப்பது நன்றே. ககரு

## அதியமான் பாண்டியன் சோழனிடம் தூதனுப்புதல்

என்னநி னைந்தன னேடவிழ் தாரான்.
சொன்னலங் கொள்ளிரு தூதரைக் கூவி
மன்னரி டஞ்செலு மின்.வரு மாற்றார்
புன்செய லத்தனை யும்புகன் மின்னே. ககசா

---

ககக. பேதுறுத்தற்கு—துன்புறுத்துவதற்கு.

ககந. எறி—அடி. நோவலில்—வருந்துவதில்.

ககச. தென்னன் — பாண்டியன். ஆர்புனை சென்னி — ஆத்திமாலை அணிந்த சோழன்.

ககரு. செவ்வி—காலம். ஐயுறவு—சந்தேகம். தெவ்—பகைமை.

பெரும்படை வேண்டுமின். பெற்றதுங் கொண்டு
திரும்புமின். காற்றெனச் செல்லுமி னென்ன
அருந்திறன் மன்னவ! வங்ஙனஞ் செய்தும்.
விரும்பிவ ணங்குது மென்றுவி ளம்பி, ௧௬௭

அகன்றனர் தூதுவர். ஆரதர் சென்று
திகழ்வள வன்கணுந் தென்னவன் பாலும்
புகன்றனர். வேண்டினர் போர்ப்படை. பெற்று
மகிழ்நதவற் றோடுதம் மாநகர் மீண்டார். ௧௬௮

தன்னகர் துன்னிய தானைகண் டஞ்சி
மன்னனு வந்தனன். வன்பசி கொண்டார்
இன்னடி சில்பெறி னின்படை யாரோ?
பொன்னடைந் தார்க்கிலம் பாடுபோ மன்றோ? ௧௬௯

போர்ப்பறையறைவித்தல்

நிறைகுளத்துப் பகலலர்ந்த தாமரையிற்
றிகழ்முகத்து நெடுமா னன்றே
அறைகழல்கட் டியமறவ ரனைவருக்கும்
போர்நிகழ்ச்சி யறிவித் தாங்கே
பிறைமருப்பிற் கரிபரிதேர்க் கணிசெய்மின்.
கொல்லுலையிற் பேணிச் செய்த
குறைவறுபல் படைகளையுஞ் சென்றுகொணர்
மின்னென்று கூறி னானே. ௨௦௦

போரெங்கு நிகழ்ந்தாலும் பொருபடையுந்
தானுமுனே போய்த்த மக்கு
நேரெங்கு மில்லையெனப் பேர்கொண்ட
நெட்டிலைவே னெடுமான் றோன்றல்
ஊரெங்கும் போர்முரச மோச்சென்ன
வள்ளுவன்கேட் டுவந்து சென்று
கார்தங்கு மாடநெடு மறுகெங்கு
மறைந்தனனாற் காலந் தாழான். ௨௦௧

மகளிர் மகிழ்ச்சி

செழுமுரசி னீடோசை செவியூடு
புகுந்தோறுந் திண்டோள் மள்ளர்
குழலிசைகேட் டுளமகிழ்ந்து குதிகொள்ளும்
பையரவிற் கூடி யார்ப்பார்.

---

௧௬௮. ஆரதர்—செல்லுதற்கு அரிய வழி. வளவன்—சோழன்.
௧௬௯ இன்னடிசில் — இனசுவையையுடைய உணவு. இலம்பாடு — வறுமை. ௨௦௧. நோ—நிகர். பேர்—புகழ். ஓச்சு—அடி. மறுகு-தெரு.

எழுமுகிலின் குரல்கேட்டுப் பசுந்தோகை
விரித்தாடி யின்பங் கொள்ளும்
அழகொழுகு மயிலினம்போ லாங்காங்கு
கூடிமகிழ் வடைவார் மாதர். ௨0௨

வரிசிலையு மெறிகணையு மள்ளரெடுத்
தரசனரண் மனைபோய்ச் சேர்வார்.
பரிவொடுதங் கிடுகெடுத்துப் படைபிடித்து
வீரர்பலர் படர்வார். பாம்பின்
உரியனைய வெளிதுடுத்து மலர்முடித்துக்
கலன்புனைந்த வுரவோர் கொண்ட
தெரிவையர்வொள் வாள்கொடுத்துச் செல்கென்ன
விடைகொண்டு செருக்கிச் செல்வார். ௨0௩

பிணியடைந்து மாண்டவனும் பேணுதார்
படைக்குமுனம் பேடி யாகித
துணிவிழந்து மீண்டவனு முனதுமறத்
தொல்குடியிற் றோன்றி ஞரில்.
அணியுறுப்பு நுந்தையைப்போ லமைந்தமைந்த
உரத்தினிலு மமைக வென்று
கணையனைய கண்ணியொரு காளையிடஞ்
சிலமொழிந்து களத்துக் குய்ப்பாள். ௨0௪

பெற்றனைநன் குணவூட்டிப் பேணிவளர்த்
தென்கடனைப் பிள்ளாய் தீர்த்தேன்.
நற்றமிழ்கற் பித்துந்தை நல்லறிவு
பெறுவித்தான். நாடு காககுங்
கொற்றவன்போர்த் தொழிலுணர்த்தித் தன்கடனை
முடித்தனன். நீ கூற்றிற் சென்று
பற்றலரைத் துணியென்று பகர்ந்தொருபெண்
தன்மகனைப் படர்விப் பாளே. ௨0௫

---

௨0௨. மள்ளர்—வீரர். முகில்—மேகம். தோகை—பீலி.

௨0௩. வரிசிலை—வரியையுடைய வில். பரிவு—அன்பு. கொண்ட தெரிவையர்—மணஞ்செய்துகொண்ட மனைவியர்.

௨0௪. பேணுதார் — பகைவர். தோன்றிஞர்இல் — பிறந்தார்களில்லை. கணையனைய—அம்புபோன்ற. களத்துக்கு—பாசறைக்கு.

௨0௫. உந்தை—உன் தந்தை. பற்றலரைத்துணி—பகைவரை வெட்டு. படர்விப்பாள்—செல்லவிடுவாள்.

ஈன்றுனது முகநோக்கி யின்புற்றேன்
முன்னம் பின் னினிய பாகு
போன்றசிறு குதலைமொழி புகலக்கேட்
டுவந்தனன். நற்புலமை யானென்(று)
ஆன்றவர்சொல் லுரைக்குவந்தேன் யானையெறிந்
ததுகேட்கி னடைவே னின்பம்
ஊன்றிகழும் வேல!வென வுரைத்துவிடுப்
பாள்போருக் கொருவ னற்றாய். உ0சு

மக்களுடல் பெறலரிது; மறக்குடியிற்
பிறப்பதுமற் றரிது; வன்மை
மிக்கவுடல் கொளலரிது; விற்பயிற்சி
பெறலரிது; வினையாற் பெற்றாய்!
புக்கமரிற் புண்படுத லரிது;வென்றி
கொளலரிது; போய்நீ கொள்க
தக்கபடை கொடுசெல்க வெனமொழிந்து
விடுவாளோர் தனித்த தையல். உ0எ

நெடுங்கைமத களிறெறிந்தங் கெந்தைநிலத்
திடைமாய்ந்து நின்றான் கல்லில்.
அடைந்தனன்விண் ணுலகுந்தை. அரசனவ
னருஞ்செயல்கேட் டளித்தா னன்று(டு)
உடம்புறுபல் கணைதாங்கக் களத்திடைவீழ்ந்
துயிரிழந்தா னுனக்கு முன்னோன்
நடந்தெதிர்நது பகைவரொடு பொருகவெனத்
தனிமகன்பா னவின்றய்ப் பாளே. உ0அ

எழுவரொடு பொருதபொழு திருகளிறு
நிலத்துவிழ வெய்தாய் மட்டார்
செழுமலர்வேய் மலையனொடு பொருதபொழு
தவன்வேலாற் செமபுண் கொண்டாய்.
வழுவகன்ற மறமைந்த வினிமலையன்
றலையெறிந்து வருகவென் றோர்
எழுதரிய மயிலனையா டன்மகனைச்
செருக்களத்துக் கியக்கு வாளே. உ0கூ

உ0சு. பாகு—வெல்லப்பாகு. குதலை மொழி—மழலைச சொல். புலமையான்—அறிவுடையவன்.

உ0எ. புக்கு—புகுந்து. அமரில்—போரில்.

உ0அ. எந்தை—என் தந்தை. முன்னோன்—அண்ணன்.

உ0கூ. எழுவர்—எழினி முதலிய எழுவர். இவ்வரலாறு 35-ம் செய்யுள் முதலியவற்றைப் பார்க்க. செருக்களம்—போர்க்களம்.

மன்னவன்றன் வினைமுடித்து வருவலெனத்
தாயிடத்து மனைவி பாலும்
பன்னிவிடை கொண்டகல்வார். பலர்பாலுண்
மக்கண்முகம் பார்த்துச் செல்வார்.
முன்னிறந்த குடிமுதல்வ ரடிதொழுது
படையெடுத்து முனிந்து செல்வார்.
இன்னமுறை யாலெண்ணின் மள்ளரெழுந்
தடைந்தார்க ளிறைவன் கோயில் ௨௧0

## அதியமான் புறப்பாடு

பட்டுடுத்துக் கலனணிந்து பனிமலர்மென்
றொடைபுனைந்து படைக டாங்கிக்
கட்டுறுவார் முரசதிரக் கண்ணிரண்டு
மெரிசிந்தக் கவின்றே றேறி
நட்டவர்தம் படையொடுநந் நான்குதிறப்
படைகளுமு னடக்க வென்றான்
மட்டருந்திப் பொறிவண்டு வரிபாடும்
பொழில்சூழுந் தகடூர் மன்னன். ௨௧௧

அதியர்குல மறமன்னன் வாழ்க. அவன்
படைவாழ்க. அன்னான் கொண்ட
மதிநிகர்தண் குடைவாழ்க வாழ்கவெனக்
குடிகளெலாம் வாழ்த்தச் சங்கம்
அதிரவயிர் முரசதிரப் படைமுதல்வ
னெடுங்கோள னணியி னின்ற
முதியபெருங் கடலனைய படையைமெல
முன்னடத்தி முனிந்து சென்றான். ௨௧௨

எம்முடைய தொகையையளந் தெண்ணினும்விண்
மிடைமீனை யெண்ணி னாலும்
வெம்மறவே லதியனொடு வரும்படையை
யெவரெண்ணி விளம்ப வல்லார்?

---

௨௧0. வருவல்—வருவேன். மக்கள் முகம்=மக்கள்+முகம்.

௨௧௧. படைகடாங்கி=படைகள்+தாங்கி (படைக்கருவிகளைப் பிடித்து). நட்டவர்—துணையரசர். சோழ பாண்டியர். மட்டு — தேன். நெடுங்கோளன் அதியமான் படைத் தலைவர்களிலொருவன். (தொல். பொருள். புறம்: 24. சூத். நச்சி.)

தெம்முனிந்து விரைவார்க்கு வழிவிடுக
வென்பனபோற் செறிந்து, காண்பார்
மம்மருறச், செம்பொடிகள் வானிவரத்,
தானைநெடு வழியே சென்ற. உகங

## ஓரி வரவேற்றல்

கல்லனைத்தும் பொடியாகக் காடனைத்தும்
வெளியாகக் கயலு லாவும்
நல்லலைநீர் மடுக்கரைக ணிலணுகப்
பலகாத நடந்து சென்று
பல்லியமும் வெள்வளையு நணிமுழங்க
அதியன்மிகு படைக ளோடு
கொல்லிவள நாடடைய வோரியவண்
வந்தெதிர்ந்து கொண்டு சென்றான். உகச

## போர்

பொடியுயர்ந்துந் துடியதிர்ந்தும் பகையரசர்
வருகையைமுன் புகலத் தேர்ந்து
கடிதுகளத் தணிவகுத்தங் கதியனும்வில்
லோரியும்பின் கனன்று நிற்பக்
கொடிகளொடும் படைகளொடுங் குழுமிவரு
தானையொடுங் கோமா னோடும்
முடிபுனைந்த விரும்பொறைவந் தெதிர்பகைவ
ரொடுபொருதான் முனிவு கொண்டே. உகரு

இருவர்படைப் பெருங்கடலு மெதிர்ந்தொருமா
கடலாகி யியைந்த வேனும்
ஒருகடன்மற் றொருகடலோ டுடல்வதென
வெதிரெதிர்சென் றுடலும். நீர்மேல்
எரியெதிர்ந்து சுடர்வதென விலங்கயில்வேல்
வயின்வயி னங்கிலகும். மோதுங்
கரியினமுங் கொடியினமுங் கருமுகிலோ
டொண்மினலின் காட்சி காட்டும். உகசு

---

உகங. தெம்முனிந்து—பகைவரை வெகுண்டு. மம்மர்—மயக்கம். வழி விடுக என்பனபோல் செமபொடிகள் வானிவர எனவும், மாந்தர் மம்மருறச செம்பொடிகள் வானிவர எனவும் இயைக்க.

உகச. பல்லியம்—வாத்தியம். வெள்வளை—வெணசஙகு

உகரு. கனன்று—வெகுண்டு. குழுமி—கூடி. கோமான்—காரி.

உகசு. உடல்வதென—எதிர்ந்து போரிடுவதுபோல. எரி—தீ.

தடிதடியென் ஞெருபாலுந் தள்ளுதள்ளென்
 றொருபாலுந் தலைமே லோங்கி
அடியடியென் றொருபாலு மறையறையென்
 றொருபாலு மறையுங் கையை
ஒடியொடியென் றொருபாலு முதையுதையென்
 றொருபாலு முயிரை நன்கு
குடிகுடியென் றொருபாலு மிருபாலும்
 பொருமறவர் கூறி யார்ப்பார். உகஎ

(வேறு)

வரிவில்லரு வில்லரு மாறெதிர்வார்.
கரியுங்கரி யும்பொரும் காற்றெனவாம்
பரியும்பரி யும்பகைக் கும்.பலதேர்
திரியும்வயின் றேறுஞ்செ ருக்கினொடு. உகஅ

எய்வார்கணை ; யெஃகமெ டுத்தெறிவார் ;
நெய்வார்சுடர் நெட்டிலை வேல்விடுவார் :
பெய்மாமத யானையின் பீடொழியக்
கையையெறிந் தேகுவர் காளையனார். உகக

உருவிச்செலும் வெங்கணை யொன்னலர்மெய்.
பருகிச்செலும் வாள்பகைப் பார்குருதி.
வெருவிப்பொரு மேவல ராருயிரைத்
துருவிச்செலுந் தொட்டவே னெஞ்சினுளே. உஉ0

கண்ணேமென வெண்ணிலர்; காமருடல்
புண்ணுமென வெண்ணிலர்; பொன்றிடின்மெய்
மண்ணுமென வெண்ணிலர்; வாள்வயவர்
நண்ணாருடல் வெட்டிந டந்தகல்வார். உஉக

கைவேல்கொடு காய்பரி மாய்த்தவர்தம்
மெய்வேல்பறித் தொன்னலர் மேலெறிவார்.
பெய்மாமுகில் கல்லிடைப் பெய்வதுபோல்
எய்வார்தொடை வேழமி றந்துவிழ. உஉஉ

---

உகஎ. ஒருபாலும—ஒரு பகுதியிலும். இருபாலும—இரு பக்கங்களிலும்.

உகஅ. காற்றெனவாம்—காற்றைப்போலத் தாவிச் செல்கின்ற.

உகக. பீடு ஒழிய—பெருமை கெடும்படி.

உஉஉ. ஒன்னலர்—பகைவர். தொடை—அம்பு.

சினந்தார்தமை வாளினிற் சீவுதலை
பனங்காயெனப் பாரிடை வீழும். உளங்
கனல்வெங்கரிக் காலுரல் போலுருளும்.
முனங்கைபனந் துண்டின்மு றிந்துவிழும். உஉ௩

சிலைவல்லவர் சென்னியின் மேனடந்து
புலிபோல்விரைந் தெங்கணும் போம்புரவி.
மலைசெல்வது போற்செலு மால்களிறு
கொலைவேன்மற மல்லரைக் கொன்றுசெலும். உஉ௪

புலிமேற்புலி போவது போன்றுகளுங்
கலிமான்மிசை யேருக முன்மறவர்
கொலையானையைக் குத்துவர் ; கொய்யுளைமான்
தலைவெட்டுவர் ; தேர்விழத் தாக்குவரே. உஉ௫

களிறெய்வதுங் காளைய ரைக்கொலலும்
வளியிற்செலும் வாம்பரி வீழ்த்துவதும்
ஒளியன்றென வேந்தரு கோடுவரால்
விளிவச்சமில் லாதவில் வீரர்களே. உஉ௬

உடலெங்கணும் வெங்கணை யுட்புகலின்
மடல்வன்பனை போலுவர் வாண்மறவர்.
அடர்செந்தினைத் தாளுறு நீள்வரையாம்.
மிடல்சேரொரு கையுடை வேழமரோ. உஉ௭

தீம்பாலொடு ரத்தினைச் சேர்த்தளித்த
பூம்போதணி தாயர்பு கல்பணியைத்
தாம்பேணிமு டித்தபின் றுவிலிசை
ஆம்பஃறொழி லாற்றுவ ராண்சிறுவர். உஉ௮

அன்னையரு வப்பர்;அ லங்கல்புனை
மன்னன்மகிழ் வான்;புகழ் மண்ணிடையாம் ;
பின்னும்பெறும் பேறெவ னென்றெதிர்வார்.
முன்னேகளத் தேகுவர் மொய்ம்புடையோர். உஉ௯

---

உஉ௩. பனந்துண்டின்—பனந்துண்டத்தைப்போல.

உஉ௫. உகளுங் கலிமான்மிசை—துள்ளிப்பாயுங் குதிரையின்மேல்.

உஉ௬. வளியில்—காற்றைப் போல். விளிவு—சாவு.

உஉ௮. ஆம்பஃறொழில் = ஆம் + பல் + தொழில். (ஆகக்கூடிய பல தொழில்.)

உஉ௯. பின் நாம் பெறும் பேறு எவன்—பின்னால் நாம் பெறும் பயன் வேறு யாது. எதிர்வார்முன்னே—எதிரும் பகைவருக்குமுன்பு.

என்சென்னியை வெட்டுவ னென்றனீ.
நின்சென்னியை வெட்டுவ னென்றனனுன்.
முன்னம்வரு கென்று முனிந்தொருவன்
மின்னுங்கொடு வாளினின் வீசுவனே. உருo

என்னையெதிர் வான்வரு வானிவன்றன்
மின்னுங்கலன் வேண்டினை யேற்பெறுக
என்னும்மொழி யைக்கணை யற்கியம்பி
அன்னுன்றனை வெட்டுவ னுளியனுன். உருக

விடுவெங்கணை வீழ்மழை; வேலொளிர்மின் ;
இடிவெள்வளை யின்முழக் கேகுபரி
கடுவல்வளி ; கால்கொடு கால்கலந்து
படர்செம்புன லாங்களம் பாய்குருதி. உருஉ

பருந்துங்கருங் காக்கையும் பற்றிணம்
அருந்திக்குரு திப்புன லாடியெழுந்
திருந்தக்கடை தம்மின மல்லவென
வருந்திச்செலுஞ் செந்நிறம் வாய்ந்தமையால். உருரு

தாளற்றவ ரெண்ணிலர்; தங்களிரு
தோளற்றவ ரெண்ணிலர் ; துப்பொடுவாழ்
நாளற்றவ ரெண்ணிலர் ; யார்நவில்வார்
மாள்வுற்றவ யப்பரி தேர்மதமா. உருச

காரியும் ஓரியுங் களம்புகுதல்

வீரப்படை யார்கலி யூடுவிரைந்(து)
ஓரித்திமி லோடிய தோரி யொடு.
காரித்திமில் போந்தது காரியொடு.
நீரிற்றிரிந் தார்த்தனர் நேரலரே. உருரு

---

உருக. எதிர்வான்-எதிர்ப்பதற்கு. கணையற்கு—துடிகொட்டுபவனுக்கு

உருரு. வீரப்படை ஆர்கலியூடு — வீரம்பொருந்திய படையாகிய கடலி னூடே. ஓரித்திமில்—ஓரிக்குதிரையாகிய படகு. ஓரியொடு— ஓரிமன்னவனேடு. காரித்திமில் — காரிக்குதிரையாகிய படகு. காரியொடு—காரிமன்னவனேடு. நீரில்—கடல்நீரைப் போல. நேரலர்—பகைவர்.

"காரிக் குதிரைக் காரியொடு மலைந்த,
ஓரிக் குதிரை ஓரியும்." சிறுபாண். (110—11)

நிலத்திற்செலும் ; நீள்விசும் பிற்செலும்;கட்
புலத்திற்கணித் தாயுடன் போய்மறையும் ;
வலத்திற்செலும் ; மீண்டிடம் வந்தடையும்
உலத்திற்றிர டோளின ருந்துபரி. ௨௩௬

மட்டப்பரி தாங்கிரு மன்னவருந்
தொட்டுக்கணை யோச்சுவர் துன்னலர்மேல்.
எட்டிக்கரி குத்துவ ரீட்டிகளால்.
சுட்டித்தலை வெட்டுவர் சூழ்பவரை. ௨௩௭

ஓரம்பெடுத் தெய்யுமு னொன்பதுமெய்
பாரில்விழும் ; ஆவிப றந்துசெலும்.
கூரம்பொரு நூறிமை கொட்டுமுனம்
வீரர்விடு வார்.விய வாரெவரே ? ௨௩௮

## அதியமானும் இரும்பொறையும் களம்புகுதல்

புகழார்தடந் தோளினன் பூங்கழலான்
அகழார்மதில் சூழ்தக டூரரசும்
இகலார்பொறை யும்பரி மீதிவர்ந்து
துகள்விண்ணெழச் செங்களத் துட்புகுந்தார். ௨௩௯

இருமன்னருங் கண்டரு கெய்தினர்;மற்
றொருவர்க்கொரு வர்படை யுய்த்தனரால் ;
வெருவுற்றிலர்; எய்த்திலர்; விட்டகலார்.
பருவெம்புலி தம்பகைக் குப்பணிமோ ? ௨௪௦

எதிரும்பரு மீன்களைக் கொன்றிகழும்
முதலையென முன்னடைந் தாரையழித்
ததரிற்பட ரும்பொழு தாதனுமின்
னதிவேலவன் காரியு நோக்கினரே. ௨௪௧

அடுத்தாரிரு வேந்தரு மம்புகளை
விடுத்தார்;கிடு கால்விடு வெம்படையைத்
தடுத்தார்;கணை யாலுனைச் சாய்ப்பனெனக்
கடுத்தார்;விடுத் தார்கருங் கட்கனலே. ௨௪௨

---

௨௩௬. திரள் தோளினர்—திரண்ட தோள்களையுடைய ஓரியும் காரியும்.
௨௩௭. இருமன்னவர்—ஓரியும் காரியும்.
௨௩௮. வீரர்—ஓரியும் காரியும்.
௨௪௦. வெருவுற்றிலர்—அச்சங்கொண்டாரில்லை. பணிமோ-பணியுமோ.
௨௪௨. கிடு—கேடகம். கடுத்தார்—வெகுண்டார்.

### ஓரி உயிர் நீத்தல்

கருமத்தினிற் கண்ணுடை யன்மலையன்
உருமொத்துரு மிக்கணை யொன்றுதொட
அருமுத்தமிழ்ப் பற்றின னாதனது
மருமத்தினிற் பாய்ந்துடன் மாய்த்ததுவே.* உ௪௩

குலமங்கைவந் தெய்துமுன் கோமகனை
நிலமங்கைகி டத்தின னீண்மடியில்.
நலமங்கைதன் னாவுறை நல்லதமிழ்ப்
புலமங்கையுய்த் தாளிறை பொன்னடிக்கே. உ௪௪

யானையர சூறுபட் டங்கழியின்
ஏனைமத மாபகை முன்னெழுமோ?
கோனையிழந் தாரஞர் கொண்டபெருந்
தானையனைத் தும்புறந் தந்தனவே. உ௪௫

பறையுந்துடி யும்வளையும் படையும்
அறையும்புன லார்கலி போலதிரும்.
இறைவன்குதித் தார்த்தன னேகருங்கல்
உறையுங்கரி யட்டவு ரப்புலிபோல். உ௪௬

நெடுமான்விடு நீள்கணைக் குங்கொடிய
வடுவாய்மொழிக் கஞ்சிய மாமலையன்
அடுவான்பரி தூண்டின னஞ்சியெதிர்
கடுவெம்படை யுய்த்தனன் கைத்திறனால். உ௪௭

### அதியமான் உடைந்தோடல்

அளவின்மிகுந் தாற்றினி னீர்பெருகின்
உளவன்சிறை யெங்குமு டைந்திடுமால்.
களிறன்னவன் காரியுஞ் சேர்ந்தெதிர
ஒளிர்வேலனு டைந்தனன் றானையுடன்.† உ௪௮

---

உ௪௩. உரும் ஒத்து—இடிபோன்று. மருமம்—நெஞ்சு.

*" ஓரிக் கொன்ற ஒருபெருந் தெருவிற்
காரி புக்க நேரார் புலம்போல்." (நற்றிணை, 320.)

உ௪௪. குலமங்கை—ஓரியின் மனைவி. இறை—சிவபெருமான்.

உ௪௫. ஊறுபட்டு—புண்பட்டு. அஞர்—துன்பம்.

உ௪௬. வளை—சங்கு. ஏகருங்கல்—ஏகுதற்கு அருமையான மலை.

உ௪௮. சிறை—கரை. ஒளிர்வேலன்—அதியமான்.

†"கொல்லிக் கூற்றத்து நீர்கூர் மீமிசைப்
பல்வேற் றானை யதிய மானோடு
இருபெரு வேந்தரையு முடனிலை வென்று."
(பதிற்று. 8-ம் பத்துப்பதிகம்.)

## வென்ற வேந்தர் மகிழ்ச்சி

மணமங்கையைப் பெற்றமகிழ்ச்சியினும்
உணர்வுண்மக வீன்றநல் லோகையினும்
அணியார்தமிழ் கொண்டவின் பங்களினும்
வணமார்தொடை மன்னர்கொண் டார்மகிழ்வே. உசக

வன்றோள்புடைத் தார்த்தனர்; மாற்றலரை
வென்றோமென வாடினர் வீரரெலாம்.
குன்றாதமு ரன்றன கோடுவளை.
ஒன்றாதிய மெங்குமொ லித்தனவே. உடு0

மண்பட்டு மடிந்தவர் வீழ்தலையின்
கண்டொட்டுணுங் காக்கையி னம்.கழுகு
புண்டொட்டுணும். வீழ்குட ரைப்புரிந்துண்(டு)
எண்பட்டந ரிக்குல மின்புறுமே. உடுக

## ஓரியின் மனைவி உயிர்நீத்தல்

(வேறு)

மாறுபட் டியம்பும் பல்லி.வலக்கணுந் துடிக்கு மந்தோ!
ஏறனை யாருக் குற்ற தென்கொலோ? களத்துள் ளாரால்.
வேறலும் விளிவு மொன்றும் வேந்தருக் கெனக்கற் றோமோ?
நாறுபூங் கூந்தற் றோழி நவிலென நையுங் காலை, உடுஉ

சிலையிழந் தோடி வந்தார் களத்தியல் செப்பக் கேட்டு
மலையுறை பாவை மாழ்கி மயில்களோ டேகல் போல
நிலைகுலைந் தலறி மாதர் பின்வர நீடு கொல்லித்
தலைவனை நாடிச் .சென்றாள் காரிகை யென்னுந் தையல். உடுங

கண்ணினை யிழந்த துன்புங் கைப்பொரு ளிழந்த துன்பும்
மண்ணினை யிழந்த துன்பு மக்களை யிழந்த துன்பும்
அண்ணலை யீன்ற தாயை யப்பனை யிழந்த துன்புங்
கொண்கனை யிழந்த துன்போ டொப்பவோ குலமகட்கே. உடுச

---

உசக. ஓகையினும்—மகிழ்ச்சியைக் காட்டிலும். மன்னர்—காரியும் இரும்பொறையும்.

உடு0. கோடுவளை—கொம்பும் சங்கும். ஒன்றாது—ஒன்றோடொன்று மாறுபட்டு.

உடுங. மலையுறை பாவை—கொல்லிப்பாவை. மாழ்கி—வருந்தி.

உடுச. கொண்கன்—கணவன். குலமகள்—கற்புடையவள்,

ஒருகணை வேட்டத் துய்க்கி னுடல்பல மண்ணில் வீழும்.
பொருகளத் தேகி னியாவர் புறமுது கிடாதார்? இன்று
மருவலர் கணையா லெங்கோ மாண்டன ரென்னி னென்னெஞ்(சு)
உருவுமா லவர்க்கியா னன்றோ வுடம்பெனப் புலம்பிச் செல்வாள்.

வேளையெட் டுவைசோ றுண்டு வெறுநிலத் துறங்கும் வாழ்க்கை
காளையன் னானைக் கண்ணுற் காணுதற் குதவுங் கொல்லோ?
மாளுவ னின்றே; வான்போ மன்னனை யடைவே னென்று,
நீளரிக் கயலங் கண்ணா ணெஞ்சினு ளுறுதி கொண்டாள். உருசு

மானினம் வருந்தத் தோகை மயிலின மினைய நாடித்
தேனினம் புலம்பப் பூவை செயலிழந் திருந்து தேம்பக்
கானிடை யழுது சென்று களம்புகுந் தலைந்து தேடி
மேனியில் விழுந்தாள் குன்றின் மின்கொடி வீழ்வ தொத்தே.

அலறினள். விம்மி விம்மி யழுதனள். யானு நீயும்
மலருநன் மணமும் போல வாழ்ந்தன மன்றே? நீயிவ்
வுலகினை நீத்த பின்னென் னுயிர்தனித் துறையுங் கொல்லோ?
தலைவநீ யெனையுங் கூட்டிச் சாரிடஞ் சார்க வென்றாள். உருஅ

விருப்பமர் கொழுந னேரி மெய்யினை யீமத் தேற்றி
நெருப்பினை வளர்த்தா ணங்கை; நிமிர்ந்துயர்ந் தெரியும் போது
மருக்கிளர் முளரி பூத்த வாவியுட் புகுதல் போன்றே
பொருப்பமர் பாவை யன்னாள் புகுந்தன ளெரியி னுள்ளே. உருகூ

மன்னவன் றனக்கு மன்னன் மனைவிக்கு மகிழ்ந்து சென்று
ஒன்னலர் படையாற் புண்பட் டுயிர்துறந் தார்க்கும் வேடர்
கன்னடு விடுத்தார். வாழ்த்திக் கைகுவித் திறைஞ்சிச் சென்றார்.
இன்னலைச் சுமந்து நாட்டுக் கின்னுயிர் கொடுத்தா ரன்றோ? உசு0

கொடைசெலக் கொடிகள் செல்லப் பல்லியங் கோடு விம்மப்
படையொடு கொல்லிக் கூற்றம் படர்ந்தடிப் படுத்தி னரால்.
அடையலர் பொன்னும் பூணு மளித்தடி பணியப் போந்தைத்
தொடையணி பொறையுங் காரித் தோன்றலு முளங்குளிர்ந்தார்.

---

உருரு. மருவலர்—பகைவர்.

உருசு. வேளை—வேளைக்கீரை. எட்டுவை—எள்+துவை.
வாழ்க்கை—கைம்மை வாழ்க்கை.

உருகூ. முளரி—தாமரை.

உசு0. ஒன்னலர்—பகைவர்.

உசுக. பல்லியம்—வாத்தியம். அடையலர்—பகைவர்,

## தகடூர் நோக்கிப் போருக்கெழுதல்

சில்பக லிருந்து நாட்டைச் சீர்பெற வமைத்துத் தெவ்வை
வெல்லுவா னெண்ணித் தங்கள் விறன்மிகு தானை யோடு
பல்லிய முழங்கச் சென்றார் பருமதிற் றகடூர் நோக்கிக்
கல்லினை யெறியின் வேழங் கவுளகத் தடக்கு மன்றே. ௨௬௨

மருவலர் மேற்சென் றன்னார் மண்கொளன் மாண்பே. மன்ன
ரொருகுலத் திருவர் தாக்க லுயர்விலை. இருவர் வேறல்
இருநிலத் தில்லை. யாவர் தோற்பினு நமக்கி கழ்வாம்.
பொருதலை யொழிகென் றான்றோர் மறுக்கவும் பொறையன் போனான்.

## எயில் காத்தல்

வருகையைக் கூறக் கேட்டான். மற்றவன் செய்வ தென்று
கருதினன். முடிவு தேரான் காவலர்க் குடைந்த மன்னன்.
பருமதில் வலிது ; சூழ்ந்து பற்றுதற் கரிதென் றெண்ணி
மருவலர் வருமுன் வாயிற் கதவடைத் திருந்தான் மாதோ. ௨௬௪

வேலெறி பொறியுங் கல்லை விரைந்தெறி பொறியுங் கூர்வாய்க்
கோலெறி பொறியும் வாளைக் கொண்டுமுன் குறுகு வார்தம்
காலெறி பொறியுஞ் செம்பைக் கனலினா லுருக்கிக் கூடார்
மேலெறி பொறியு ஞாயின் மீதெலா நிறைத்தான் வேந்தன்.

தொடுகயங் கெடுத்துக் காவற் காட்டினைத் துணித்து வண்ணக்
கொடிநெடு மாடத் தூரைக் கொள்ளைகொண் டெரியாற் றீய்த்துக்
கடிமரந் தடிந்து தானை முன்செலக் கனன்ற மன்னர்
இடியென முரச மார்க்க விஞ்சிசூழ் தகடூர் சேர்ந்தார். ௨௬௬

---

௨௬௨. தெவ்வை—பகைவனாகிய அதியமானை.

௨௬௩. மருவலர்—பகைவர். வேறல்—வெல்லுதல். பொருதலை—போரிடலை. அதியமானும் இரும்பொறையும் ஒரு குலத்தின ரென்றும் இரும்பொறை அண்ணன் என்றும் தகடூர் யாத்திரைச் செய்யுளொன்று கூறுகிறது.

கால வெகுளிப் பொறையகேள் நம்பியைச்
சாலுந் துணையுங் கழறிச் சிறியதோர்
கோல்கொண்டு மேற்சேறல் வேண்டா அதுகண்டாய்
நூல்கண்டார் கண்ட நெறி.

௨௬௫. கோல்—அம்பு. ஞாயில்—மதில்.

௨௬௬. கடிமரந் தடிந்து—காவல் மரத்தை வெட்டி. கனன்ற மன்னர்—காரியும் இரும்பொறையும்.

எதிர்ப்பவ ரின்மை யாலே யாவரு முழிஞை சூடி
அதிர்ப்பொடு ஞாயில் கொள்வா னகழியை யடைந்தா ராங்கே*
கொதித்தகத் திருந்த மைந்தர் கொடுங்கணை யெஃக மேவி
மதிற்புறத் தகழி வீழ்த்தி மாய்ப்பரான் மருவார் தம்மை. உ௬எ

ஏவுவார் பொறியைச் சில்ல வெஃகெறிந் தெதிரு மாற்றார்
ஆவியைக் கவரும். சில்ல வம்பெறிந் துடலை வீழ்த்தும்.
வாவுதிண் மாவைக் கல்லான் மாய்த்திடுஞ் சில்ல. தீயைத்
தூவிடும். செம்பைக் காய்ச்சித் துருத்தியிற் செலுத்துஞ் சில்ல.

கிடங்ககல் வாரைத் துள்ளிக் கெண்டையு மெதிரல் போல
உடம்பெலா மயில்வேன் மூழ்க வோச்சுவர். அதனுள் வீழ்த்தி
இடங்கருக் கூட்டு வாரால். கடந்துவந் தேணி சாத்தி
உடும்பென மதின்மீ தேறி னுயர்விசும் புய்ப்பார் வீரர். உ௬௯

தூண்டமை யிகழூந் தோளிற் புண்ணைநெய்த் துணியாற் சுற்றி
ஆண்டகை மறவர் தூங்கா தாரெயி லிரவுங் காக்கப்
பூண்டதிண் கற்பி னுரைப் புல்லியர் நினைந்தா ரேனுந்
தீண்டலா காமை போலத் தீண்டில சேரார் தானை. உஎ0

## அதியமானை ஔவையா ருக்குதல்

இருபடை மறவர் தாமு மின்னவா றெதிருங் காலைச்
செருவெலா மொருதா ளுகித் தெவ்வரை மாய்த்த செம்மல்
அருமதி லகத்துத் தங்கிப் போர்செய லறமன் றென்று
கருதினை ளௌவை. சென்று காணுவான் கருத்துட் கொண்டாள்

அஞ்சியை யடைந்தாள். அண்ணல் களம்புகி னஞ்சா ருண்டோ?
வெஞ்சின வேங்கை சீறின் மானினம் வெருளு மேயோ?
செஞ்சுடர் தோன்றின் முன்னே திண்ணிரு ளெதிர்க்கு மேயோ?
அஞ்சுவ தென்னை யென்றங் குடையவனை யன்பிற் சொற்றாள்.†

---

உ௬எ *ஒருவன் மேற்சென்றுழி ஒருவன் எதிர் செல்லாது தன்மதிற் புறத்து வருந்துணையும் இருப்பின், அஃது உழிஞையினடங் கும். அது சேரமான் செல்வுழித் தகடூரிடை அதியமான் இருந்ததாம். (தொல். பொருள். சூ. 62. நச்.)

உ௬௯. எதிரல் போல—எதிர்த்துப் போரிடுவதுபோல. இடங்கர்—முதலை.

உஎக. செரு—போர்க்களம். தெவ்வர்—பகைவர். செம்மல்—அதியமான்.

உஎஉ. †உடைவளை கடுப்ப மலர்ந்த காந்தள்
அடைமல்கு குளவியொடு கமழுஞ் சாரல்
மறப்புலி யுடலின் மான்கண முளவோ
மருளின விசும்பின் மாதிரத் தீண்டிய

அதியமான் போருக் கெழுதல்

எரிகிற விறகி னெய்யை யிடினுயர்ந் தெரியு மன்றே?
தெரிவைதன் வீரத் தீஞ்சொல் சினத்தினை மிகுத்த தம்மா.
குரிசிறன் னெயிறு தின்றான். கொல்லென நகைத்தான். வந்த
மருவலர் படையை யெல்லா மாய்ப்பனென் றார்த்து நின்றான்.

ஆறினுஞ் சாவே. நூறுண் டாகினுஞ் சாவே. தெவ்வை
வேறல்போல் விளிவு மேன்மை வேந்தருக் களிக்கா தேனும்
சிறிவந் தடைந்தார்க் கஞ்சிச் செருச்செயா தொளிந்துவாழும்
மாறுறு வாழ்வி னும்பன் மடங்கிசை யளிக்கு மன்றே. உ௭௪

வெல்லினும் வெல்வே னாக ; வெகுண்டெனை மாற்றார் சீறிக்
கொல்லினுங் கொல்வா ராக ; கூற்றுவந் துடன்ற போதும்
பல்லிய முழங்கச் சென்று படைவிடு மாற்ற லன்றோ
மல்லன்மா ஞாலங் காக்கு மறமன்ன ராற்ற லம்மா. உ௭௫

வானைநின் றேந்தல் போலு மதின்மறைந் தெதிரல் வேண்டா.
தானையை வகுத்து நிற்க தார்நெடுங் கோளன். மாற்றார்
ஊனையுண் டொளிரும் வேற்கை யுயர்பெரும் பேக்கன் றானும்.
ஏனைய மைந்தர் தாமு மெம்மொடு வருக வென்றான். உ௭௬

தண்கயம் படிந்து தும்பை தலைமலைந் தெஃக மேந்தித்
தெண்கிணை முழங்கக் கண்கள் சிவந்து தீப்பொறிகள் சிந்தக்
கண்கவர் வனப்பிற் கோமான் கனன்றுதன் றானை யோடு
திண்ணிலை ஞாயின் முற்றுந் தெவ்வரை யெதிர்க்கச் சென்றான்.

அணையுடைத் தார்த்துத் தம்மு னணுகுநீத் தம்போல் வாயில்
துணைநெடுங் கதவ நீக்கிப் பல்படை தொடர்த னோக்கி
இணையறு மதிலைப் பற்று திரும்பொறை மறவர் தங்கள்
கணைமுதற் படைக ளோடு கனன்றுமுன் னெதிர்ந்து நின்றார்.

---

இருளு முண்டோ ஞாயிறு சினவின்.
.......................................
வழுவில் வன்கை மழவர் பெரும
இருநில மண்கொண்டு சிலைக்கும்
பொருநரு முளரோ நீகளம் புகினே. (புறம். 90)

உ௭௩. தெரிவை — ஔவை. குரிசிறன் = குரிசில் + தன். நெடுங் கோளன். (தொல். பொருள். புற. சூ. உ௪ : நச்.)

உ௭௬. பெரும்பேக்கன் - அதியமானால் சிறப்பெய்திய வீரர்களிலொருவன். (தொல். பொருள். புற. சூ. அ: நச்.)

உ௭௭. கயம்—பொய்கை. கிணை—துடி.

உ௭௮. நீத்தம்—வெள்ளம். இணையறு—ஈடில்லாத. கணை—அம்பு.

மலைகளும் புலிக டாமு மரக்கலங் களும்பே ராழி
அலைகளு மிகலித் தாக்கிப் பொருவவே லனைய வம்மா.
கொலைமத வேழம் வீரர் கொடுஞ்சியந் திண்டேர் வாமா
நிலைபெயர்ந் துடன்று தம்முட் டாமுமற் றவையு நேரல். உஎகூ

## போர்

(வேறு)

கிட்டி நின்று கிளர்ந்துதந் தோள்களைத்
தட்டு வார்;பொரு வாமெனச் சாற்றுவார் ;
முட்டு வார்;முனி வாரை முனிந்துபோய்
வெட்டு வார்; விரை வார்முனம் வீரரே. உஅ0

மாரி வெண்டுளி போல வயவரெய்
கூரி யைந்த கொடுங்கணை வீரரைப்
பாரில் வீழ்த்தும் ; பரிகளை வீழ்த்துமால் ;
காரி யைந்த களிறுகள் வீழ்த்துமே. உஅக

அருவி போல மதம்பொழி யானைகள்
வெருவி யோட விரையும் விடுகணை.
குருகு போற்பறந் தேகுவெண் கொய்யுளை
உருவி யப்புறத் தோடுவ வேல்களே. உஅஉ

வானை போலப் பிறழ்ந்து வயவர்தந்
தோளில் வீழுவ வாள்.கய றுண்ணென
நீளிருங் கரை நீர்மடு மூழ்கலில்
வாளி மார்பிடைப் பாய்ந்து மறையுமே. உஅங

நானெ னும்பொரு ளியாதென நாடுவார்
தோன்மு தற்பொரு ளேழுந் துருவுதல்
போனு ழைந்து நுழைந்து பொருபடை
ஊனு டல்கடந் தப்புறத் தோடுமே. உஅச

---

உஎகூ. இகலி — ஒன்றோடொன்று மாறுபட்டு. கொடுஞ்சி — தேர் மொட்டு. வாமா—குதிரை. நேரல்—எதிர்ந்து போரிடல்.

உஅக. மாரிவெண்டுளி — மழை பெய்யும்போது வீழும் வெண்ணிற நீர்த்துளி.

உஅஉ. வெருவி—பயந்து. குருகு—பறவை. கொய்யுளை—குதிரை.

உஅங. மூழ்கலில்—மூழ்குதல் போல. வாளி—அம்பு.

உஅச. நான் எனும் பொருள்—நான் என்று சொல்வதற் கிலக்காக இருக்கும் உயிர்ப்பொருள். தோல் முதல் பொருள் ஏழு— தோல், தசை, எலும்பு, மூளை, சுக்கிலம், இரத்தம், இரதம்.

குத்துங் கோட்டினில்; காலிற் குமைத்திடும்;
மத்த யானைதம் முன்வரு வார்தமைத்
தத்தித் தத்தித் தலையின் மிதிக்குமே
கைத்தி றத்திற் செலுத்துங் கடும்பரி. உஅரு

வாஞ்சி னத்து வயப்பரி மாமிசைப்
போஞ்செ ருப்புலி போன்றவர் வீழ்த்திய
வேஞ்சி னக்கரி மாவின் வியன்றலை
நாஞ்சில் போலக் கிடக்குமஞ் ஞாட்பினே. உஅசு

கடுகி மள்ளரைக் காயுங் களிற்றினை
அடுவ னேலுயிர் வாழ்குவன். அன்றெனில்
விடுவ னென்றதன் பக்கல் விரைகுவன்;
தொடுவன் வெங்கணை துஞ்சவஞ் சாதவன். உஅஎ

மின்னும் வேலெதிர் பாய்ந்து வெகுளினும்
என்கண் ணோமென மூடி யிமைப்பனேல்
தென்மொ ழிக்கிடர் செய்தவ னாகெனப்
பன்னி முன்னெழு வான்பெரும் பாக்கனே. உஅஅ

அல்லி யெங்கு மலர்ந்த கயத்திடைச்
செல்லுங் கெண்டையைக் காணிற் சிரல்புகுந்(து)
ஒல்லை பற்றுதல் போலவொன் னார்தமைக்
கொல்லு வான்;குவிப் பானெடுங் கோளனே. உஅக

காற்றிற் செல்பரி யூர்தரு காரியும்
ஆற்றன் மிக்க படைகள்கொண் டார்ப்பொடு
மாற்ற ரும்பகை மள்ளரை மாய்த்தனன்
கூற்று டன்றுயிர் கொண்டது போலவே. உகூ0

பாக்கன் பான்மலை யன்படர்ந் தம்பினாற்
போக்கி னானுயிர் பூரித்து முன்னம்போய்
நீக்க ருந்திற லானெடுங் கோளனை
நோக்கி வீழ்த்தினன் வேலி னுதியினே. உகூக

உஅசு. வாம்—தாவும். நாஞ்சில்—கலப்பை. அஞ்ஞாட்பினே—அப் போர்க்களத்தில்.

உஅஎ. கடுகி—விரைந்து. மள்ளரை—வீரரை. அடுவனேல்—கொல் வேனாயின்.

உஅஅ. கண் நோம் என—கண்கள் நோவடையுமென்று. பெரும் பாக்கன்—அதியமானால் சிறப்பெய்திய ஒரு படைத்தலைவன்.

உஅக. அல்லி—அல்லிப்பூ. சிரல்—சிச்சிலி. ஒன்னார்—பகைவர்.

உகூக. பாக்கன்—பெரும்பாக்கன்.

எண்ணி லாதவர் சென்னி யிழந்தவர்.
கண்ணி ழந்தவ ரோகணக் கற்றவர்.
வண்ண மார்பிழந் தாரும் வரம்பிலார்.
புண்ணு றாதவ ரில்லையப் போரினே. உகூஉ

குன்று போலுங் கரியின் குருதிநீர்
சென்று சென்று செருக்களம் பாயுமால்.
வன்ற லைக்கொழு மூளையும் வாள்களுந்
துன்று வெண்ணுரை வாளையிற் றோன்றுமே. உகூங

வெட்டுப் பட்டு விழுந்தார் குடற்றலை
தொட்டுப் பாற்றினஞ் சுற்றிச் சுழல்வன
கட்டுப் பட்ட கயிற்றொடு காற்றினில்
பட்டம் வானிற் பறப்பன மானுமே. உகூச

காட்டுத் தீயொடு கால்கலந் தாயதே
தோட்ட லங்க லிரும்பொறைத் தோன்றலும்
வாட்டொ ழின்னெடு மானும் பொருபடை
ஈட்டம் புக்கவ ரோடு மெதிர்ப்புழி. உகூரு

## அதியமானும் இரும்பொறையும் போரிடல்

என்முன் வந்தனன் ; என்முன்வந் தானெனத்
துன்ன ருங்களத் தெங்கணுஞ் சுற்றியே
பன்ன ருந்தலை பார்விழ மாய்த்தபின்
தன்மு னைக்கண் டதியமான் சார்ந்தனன். உகூசு

வில்லொன் றம்பு விடுங்கையொன் றெங்கணுங்
கொல்லம் பாயிரங் கண்ணிமை கொட்டுமுன்
செல்லும் வண்ணஞ் செலுத்தி யிரும்பொறை
நில்லு நில்லென் றனனெடு மானையே. உகூஎ

இகலி மன்ன ரிருவரு நேர்ந்தனர்;
முகிலி னார்த்து முனிந்து நகைத்தனர்;
அகலு ருள்குன்றி யன்னநோக் காயினர்.
பகைமைக் கேது பரிவு முறவுமே? உகூஅ

---

உகச. கால்—காற்று. ஈட்டம்—கூட்டம்.

உகசு. தன்முன்—தனக்கு அண்ணனாகிய இரும்பொறை.

உகஅ. இகலி—மாறுபட்டு. குன்றி—குன்றிமணி. நோக்கு—கண். அகலுருள் குன்றி சினத்தினால் சிவந்து பிறழும் நோக்குக்கு உவமை.

கால மாரியிற் காய்கணை யேவுவர் ;
வேலை யோச்சுவர்; வாளினால் வெட்டுவார் ;
தோலி னாற்றடுப் பார்பெய் துளிகளை
ஓலை வன்குடை யானின் றொதுக்கலின். ௨௯௯

குன்றின் வீழிங் குலிக வருவியின்
மன்ற லந்தொடை மன்னர்தம் மார்பெலாம்
வன்றி றற்கணை வாள்படு வாய்தொறும்
நின்று பாயு நிலத்திற் குருதியே. ௩00

பாயும் வெம்புலி போலப் பகைத்தெதிர்ந்
தோய்வி லாது படைகளை யோச்சுவர்.
போய்முன் பற்றிப் பொருதிலர்; நீங்கிலர்.
தீயிற் பாய்ந்து சிதைப்பவ ரியாவரே. ௩0௧

அதியமான் மாய்வு

இன்ன வண்ண மிருவருந் தாக்குழி
மன்னன் சேர லிரும்பொறை வான்படு
மின்னல் போலொளிர் வேலொன் றெறிந்தனன்.
அன்ன தஞ்சி யகனிறம் பாய்ந்ததே.* ௩0௨

பாய்ந்த வேலப் புறமும் படர்ந்துபாண்
தேய்ந்த மண்டை யகத்தினுட் சென்றுபின்
காய்ந்தி ரப்பவர் கைகளில் வீழ்ந்துநூல்
ஆய்ந்த பாவலர் நாவுளு மாழ்ந்ததே. ௩0௩

வீரங் கண்டனள், வீழுமவ் வேந்தனை
பார்ம டந்தை பரிவினோ டேந்தினள்;
மார்பு றத்தழு விக்கொண்டெம் மைந்த!நின்
சீரும் பேருஞ் சிறக்கென வாழ்த்தினள். ௩0௪

---

௨௯௯. தோல்—கேடகம். ஓலைவன்குடை—ஓலையாற் செய்யப்பட்ட வலிய குடை. இது கேடகத்திற்கு உவமை. ஒதுக்கலின்—தன் மேல் விழாமல் தடுப்பதுபோல.

௩00. இங்குலிகம்—சாதிலிங்கம். குருதி—இரத்தம்.

௩0௨. அகல் நிறம்—அகன்ற மார்பு.

*தகடூ ரெறிந்து நொச்சிதந் தெய்திய
அருந்திற லொள்ளிசைப் பெருஞ்சேர லிரும்பொறை
—(பதிற்று. 8-ம் பத்துப் பதிகம்.)

௩0௩. பாண்—பாணர். காய்ந்து—வெகுண்டு. (இதுவேலின் தொழில்.)

வெற்றி முன்பல கொண்டாய். விழுப்புண்கள்
பெற்றி றந்தனை. பேரின் படைகென்று
நற்ற மிழ்த்தெய்வங் கூறியங் நம்பியை
முற்று ணர்ந்த முதல்வனி டத்துய்த்தாள். ௩௦௫

(வேறு)

உவகையின் மூழ்கினர் வெற்றி யுற்றவர்.
அவலமுங் கவலையு மாங்குற் றார்பிறர்.
எவரெவர் படைவிட வெண்ணி னார்களோ
அவரவர் படையெறிந் தழுது சாம்பினர். ௩௦௬

பரிசெல வொழிந்தன; பார்த்து விம்மின.
கரிசெல வொழிந்தன; கலுழ்ந்து நின்றன.
நரிபருந் தினம்பிணம் நாடிச் சென்றில.
மருவிய நாய்களும் வருத்த முற்றவே. ௩௦௭

ஔவையார் வருத்தம்

விழுந்தனன்; மாய்ந்தனன் வேந்தெனச் சிலர்
மொழிந்தனர். கேட்டனு மூர்ச்சித் தாளரோ.
தொழுந்தகை யௌவைதன் தூய மென்முகம்
செழுந்தழ லிடைப்படு தளிரிற் றீய்ந்ததே. ௩௦௮

வறிஞருக் குணவுமுன் வழங்கு வான்மனே.
அறிஞருக் கரும்பொரு ளளித்த னன்மனே.
பிறிதுல கடைந்தனன். பேறென் பின்னெனச்
சிறியக ளொனுந்தொடை சோர்ந்து செப்பினாள்.* ௩௦௯

௩௦௫. அந்நம்பி—அவ்வதியமானை. முற்றுணர்ந்த முதல்வன்—முற்றறிவுடைய சிவபெருமான்.
௩௦௯. மன்—அது கழிந்தது. பிறிதுலகு—மண்ணுலகுக்கு வேறாகிய விண்ணுலகு. பேறு பின் என் என இயைக்க. பேறு பின் என்—பெறும்பயன் இனி என்ன இருக்கிறது. ஒன்றுமில்லை என்றபடி.

*சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே
பெரியகட் பெறினே
யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறுசோற் றானும் நனிபல கலத்தன் மன்னே
..............................................
அருந்தலை யிரும்பாண ரகன்மண்டைத் துளையுறீஇ
யிரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண பாவை சோர
அஞ்சொ லுண்டேர்ச்சிப் புலவர் நாவில்
சென்றுவீழ்ந் தன்றவன்
அருநிறத் தியங்கிய வேலே
ஆசா கெந்தை யாண்டுளன் கொல்லோ. (புறம். 235)

பொருந்துகா தலனுயிர் போயிற் றென்றலும்
கருங்குழ லிலனுறக் கண்க ணீர்பெய
அருந்துணை யிழந்தபெண் ணன்றில் போன்றுளம்
வருந்தினள் ; மன்னவன் மனைவி மானனாள். ௩௧௦

மன்னுகா தலன்றனை யிழந்த மாதினுக்(கு)
அன்னையிற் பொருளினி லணியும் பூண்களிற்
பன்னெடு மனைகளிற் பயனென் ? ஒருடற்(கு)
இன்னுயிர் பிரிந்தபின் கண்ணி னென்பயன் ? ௩௧௧

பெற்றதம் மக்களும் பேணு கொண்கருஞ்
சுற்றமு மொருங்குயிர் துறந்து சோர்தலிற்
சிற்றிடை யரிவையர் தெருவ னைத்தினும்
கொற்றவன் மாய்ந்தமைக் கழுது கூடினார். ௩௧௨

கடுமையி னெறிபெருங் காற்றின் மென்மலர்க்
கொடிகணீ ணிலத்திடைக் குலைந்து வீழ்ந்தெனக்
கடிமலர் குலையவுங் கலங்கள் வீழவும்
படிமிசை வீழ்ந்துபற் பலர்பு லம்பினார். ௩௧௩

எயினனெய் கணைகளுக் கிலக்கி ழுந்துழல்
மயிலினம் போன்றுபன் மாதர் பின்வர
அயிலெனுங் கண்ணின ளரசி தன்னுடை
உயிரினை நாடுதற் கூர்ந்து சென்றனள். ௩௧௪

சென்றனள். கண்டனள் செம்மன் மெய்யினை.
மின்றிகழ் வேல்புகு மார்பில் வீழ்ந்துவீழ்ந்(து)
ஒன்றியங் குயிர்த்தழு மோவம் போன்றழு(து)
என்றுனைக் காணுவ னெனப்பு லம்பினள். ௩௧௫

அதியமான் மனைவி புலம்பல்

(வேறு)

ஆருயிரே ! போரேறே ! அண்ணா லகன்மார்பா !
பாருலகெங் கணும்படர்ந்து பணியா ருயிர்கவர்ந்து
கூருடைவெங் கணையெயிற்றுக் கூற்றுவப்ப ஒட்டியபின்
பேருதவி தனைமறந்து பிழையுனக்குப் புரிந்ததுவே. ௩௧௬

௩௧௨. கொண்கர்—கணவர். உயிர் துறந்து சோர்தலில்—உயிர் இறந்த காரணத்தினால் உள்ளம் சோர்ந்து அழுதாற்போல.

௩௧௪. எயினன்—வேடன். அயில்—வேல். உயிர்—உயிர்போன்ற கணவன்.

௩௧௫. செம்மல்—அதியமான். ஓவம்—ஓவியம்.

தொன்மொழிக ளழிந்தொழிய வவற்றினுமுன் றோன்றியநந்
தென்மொழியி னியல்புணர்த்த விண்ணுலகஞ் சென்றனையோ?
அன்புடைய ஞாதனினை யழைக்கவவ ணடைந்தனையோ?
என்னையக லேனென்ற விறைவா!வெங் ககன்றனையே? ௱௧௭

மண்கொண்டாய் பகைவென்று; வழியறிந்து முறைகொண்டாய்;
புண்கொண்டா யுடலெங்கும். புலவர்தமிழ்த் தொடைகொண்டாய்.
விண்கொண்டா யின்(று);இனிநீ வேண்டுவதொன் றில்லெனினும்
கண்கொண்ட நீர்துடைத்தென் கவலகற்றக் கருதுவையே. ௱௧௮

அழுதலைநீ கேட்டிலையே. அலமரலைக் கண்டிலையே.
விழுதலையுற் றுணர்கிலையே. என்னையென விளம்பிலையே.
கழுகுணும்புண் குடரிலெழுங் காற்றுலவு களத்துறங்குந்
தொழுதகையே நீயென்றித் தொழில்புரிந்து வாழ்ந்ததுவே.

உன்முகங்கண் டழுதழுதிங் குறுதுயர்கொள் ளுங்கொடிய
என்முகங்கண் டுரைபகரு மெண்ணமிலை யெனினெழினி
தன்முகங்காண். அருகிருந்து தமிழிசைக்கு மௌவையெழில்
மென்முகங்காண். இன்றெவரும் வெம்பகைவ ராயினமோ? ௱௨௰

ஓரியொடு பொருதன்னு னுயிர்கவர்ந்துன் னையும்வென்ற
காரிமனங் களித்ததுபோற் களித்திருக்கு மென்மனமும்.
மாரியெனப் பலர்க்களிக்கும் வள்ளானின் மார்படைந்த
கூரியையும் வேலெனையுங் கொன்றுன்னோ டுய்த்திருப்பின். ௱௨௧

வலத்திலுயர் புனனாட்டு மன்னன்வந் தானலன்.தென்
புலத்திலுயர் தமிழ்வளர்க்கும் புரவலன்வந் தானலனே.
நிலத்தின்முனம் புறங்கொடுத்த நேரலனைத் துணைகொண்டுன்
குலத்திலுயர் முன்னவனே கூற்றுவனாய் வந்தனனே. ௱௨௨

வாள்வலிமை குன்றினதோ? மனவலிமை குன்றினதோ?
தோள்வலிமை குன்றினதோ? துணைவலிமை குன்றினதோ?
கோள்வலிமை குன்றினதோ? குறுகலர்தம் முயிர்களைப்பல்
நாள்குடித்த மன்னவநீ ஞாலத்தேன் வீழ்ந்தனையே? ௱௨௩

நிழலிலருஞ் சுரத்தினிடை நீண்டுயர்ந்து பயனளிக்கும்
பழுமரமின் றழிந்ததுவே. பாவலர்நின் னழிவினைக்கேட்(டு)
அழுதழுது பறவைகள்போ லலறுவரே. அந்தோநீள்
வழிநடந்து வருபவர்தம் வைப்பிழந்தாங் கினையாரோ? ௱௨௪

௱௨௩. கோள்—பிறந்த நாளின் கோள். ஞாலம்—நிலம்.

௱௨௪. சுரம்—பாலைநிலம். பழுமரம்—பழுத்த பழங்களையுடைய மரம். அழிவு—இறப்பு. வைப்பு—தேடிவைத்த பொருள்.

ஒன்றியியைந் தென்னுடைய வுயிர்க்குற்ற துணையாகி
இன்றுவரை வாழ்ந்ததுபோ லென்கொழுந னியாக;
நின்றுணைவி யானுக; நிறைகுணத்துப் பொருட்டெழினி
பின்றொடர்ந்தன் மகனுக; பிறருமுற வினராக. ருஉ௬

என்றரசி புலம்பியழ வெவரவணின் றழுதுருகார்?
தென்றமிழை வளர்ப்பவரா ரென்றழுவார்சிலர். பலர்போய்
நின்றிரக்கு முன்றருவா ரெவரென்று நினைந்தழுவார்.
சென்றுரைக்கின் முறையறிந்து செப்புவரா ரென்றழுவார்.

## இறுதிக்கடன்

(வேறு)

சாந்த வீமத் திசைபெறு தண்குடை
ஏந்தன் மெய்யைக் கிடத்தித்தீ யிட்டனர்.
காய்ந்தெ ழுந்ததீ காவலன் மெய்யையும்
மாந்தர் நெஞ்சையு மண்டி யெரித்ததே. ருஉஎ

மலைவி ளக்கு மழையின் மறைந்தெனச்
சிலையில் வல்லவன் றீயி னழிந்தனன்.
நிலையி லாமை நிலத்தியல் பென்னினும்
உலகெ ழுக்கி னுருகினர் மாந்தரே. ருஉஅ

## இரும்பொறை வருத்தம்

குலத்தை மாய்க்கும்வன் கோடரிக் காம்புபோல்
நிலத்தி லெம்பி நெடுமானை மாய்த்தனன்;
புலத்தின் மிக்க புலவ ரெதிர்வந்து
விலக்கும் போதும் வெகுண்டுகெட் டேனந்தோ. ருஉகூ

எரி லங்குவே லெம்பியி னேடவன்
ஊரை யுந்தபுத் துற்ற பயனென்னே?
பேரி கழ்ச்சியே பெற்றே னெனப்பெருஞ்
சேர லுங்கண்ணீர் சிந்திப் புலம்பினன். ருரு0

ருஉஎ. சாந்த ஈம விறகு—பிணம் சுடுதற்கு அடுக்கப்பட்ட சந்தன விறகு.
ருஉஅ. சிலை—வில். சிலையில் வல்லவன்—அதியமான்,
ருரு0. தபுத்து—அழித்து.

## ஔவையார் வருத்தம்

சென்று சென்று சினந்து பகைவரைக்
கொன்று கொன்று களத்திற் குவித்தவன்
கன்று தீயி லெரிவதைக் கண்டெறி*
என்ற பாப்புனைந் தௌவை யிரங்கினாள். ௩௩௧

வெல்லி னன்றியிம் மேதினி யைப்பிறர்
நல்கி னுங்கொளா னாரரி கொள்வனோ?
அல்லு நாளு மவனை யில்லாவெமக்
கில்லை யாகுக வென்றாளில் லாகியர்.† ௩௩௨

வாட்டொ ழின்மற மன்ன னுருபுகழ்
தீட்டி னார்;அச் சிறப்புறு கல்லினை
நாட்டி னார்;நன் னறவமர் பூந்தொடை
சூட்டி னார்;கை தொழுதன ரியாவரும். ௩௩௩

## வென்றார் விழவு

முரச மார்க்க முழங்கு கடலெனப்
பரவி யார்க்கும் படையொடு காரியும்
உரமி குந்த பொறையனு மோடுசெங்
குருதி சேர்களத் தட்டனர் கூழரோ. ௩௩௪

---

*எறிபுனக் குறவன் குறைய லன்ன
கரிபுற விறகி னீம வொள்ளழற்
குறுகினுங் குறுகுக குறுகாது சென்று
விசும்புற நீளினு நீள்க பசுங்கதிர்த்
திங்க ளன்ன வெண்குடை
ஒண்ஞாயி றன்னோன் புகழ்மா யலவே. (புறம், 231,)

†இல்லாகியரோ காலை மாலை
அல்லா கியர்யான் வாழுநாளே
நடுகற் பீலி சூட்டி நாரரி
சிறுகலத் துகுப்பவுங் கொள்வன் கொல்லோ
கோடுயர் பிறங்குமலை கெழீஇய
நாடுடன் கொடுப்பவுங் கொள்ளா தோனே. (புறம், 232.)

௩௩௩. கொளான்—கொள்ளாதவன். நாரரி—நாரா லரிக்கப்பட்ட தேறல். அல்—இரவு. நாள்—பகற்போது.

௩௩௪. உரம்—வலி. பொறையன்—பெருஞ்சேரலிரும்பொறை.

விழுப்புண் பட்டுமின் வேலிற் றுளைபட்டுங்
கழுத்து வீழ்பட்டுங் கால்கை யறுபட்டும்
வழக்கு ஞாட்பிடை மாய்ந்தவ ருக்கெலாங்
கழித்த னர்கடன், கன்னட் டனர்பலர். ௩௩௫

புண்ண டைந்து குருதிப் புனல்செல
மண்ண டைந்து மடிந்தவ ரையெலாங்
கண்ண டைந்த களிப்பொடு செந்தமிழ்ப்
பெண்ண ணங்குதன் பேருல கேற்றினாள். ௩௩௬

கூவி ளங்கண்ணிக் கோனஞ்சி வாழ்க்கையைப்
பாவ லர்முன் பகர்ந்த படிசொன்னேன்
ஆவி யர்குலத் தண்ணல்பே கன்புகழ்
மேவு மன்பில் விளம்பலுற் றேனரோ. ௩௩௭

ஆகச் செய்யுள்: ௭௧௬.

---

௩௩௫. ஞாட்பிடை—போர்க்களத்தில்.

௩௩௭. ‘கூவிளங் கண்ணிக் கொடும்பூ ணெழினியும்.’ (புறம், 158.)

# ௫. வள்ளல் பேகன் வரலாறு

## மலைநாட்டின் சிறப்பு

*வெயிலி னருந் துயருழந்த குறவரினம் வேண்டவவண்*
*உயர்விசும்பி னுருமிமிழோ டுறுமுகிலைக் கண்டொளிரும்*
*அயின்முருகன் வருமருப்பி யானையென வசைந்தாடி*
*மயிலகவக் கலைநாடு தலைநாடு மலைநாடு.* ௧

## பொதியின் சிறப்பு

*அலைதருதண் ணருவியமிழ் தளித்தாருக் கைவனநெல்*
*தலைவணங்கிப் பொன்னுதவிச் சாய்ந்துநிலத் திடைக்கிடக்கும்*
*மலைகெழுவவ் வளநாட்டின் மாநகரம் பொதினியென்ப.*
*நிலைபெறுநீண் மாமதிலு நீரகழுங் கொண்டிலங்கும்.* ௨

*மன்னவன்றொல் லாவியர்தம் மரபிடைவந் தவன்பேகன்.*
*தென்மொழியி னயமுணர்ந்தோன்; செழும்படையின் றிறமுணர்ந்தோன்;*
*அன்புடைமை யாலன்னை; அருளுடைமை யாற்றமப்பன்;*
*நன்கொடையி ஞலெழிலி யெனநவிலு நல்லிசையான்.* ௩

*வெண்குடைதண் ணிழலியற்ற விறற்படைபுன் கண்ணகற்றத்*
*தண்ணளிசெந் தமிழ்வளர்க்கச் சால்புடைமை நடைபயிற்றக்*
*கண்ணிணைநெட் டிமையிரண்டுங் காப்பனபோன் றந்நாட்டை*
*நுண்ணுணர்வி னமைச்சரொடு நோக்குவநோக் கிக்காத்தான்.* ௪

*நீரினுந்தண் ணியள்பொன்னை நிகர்க்குமெழின் மேனியினள்*
*பாரினையொக் கும்பொறையள் பணிவென்னும் பணியுடையாள்*
*காரினறுங் கருங்குழலி கண்ணகிதன் வழியொழுக*
*ஈருடல்சே ரோருயிர்போன் றியைந்துமனை யறம்புரிந்தான்.* ௫

---

௧. உழந்த—வருந்திய. அயில்—வேல். உருமிமிழோடு உறுமுகிலை மருப்பு யானை என மயில் கருதியது மயக்கம். யானையும் முருகனுக் கோரூர்தி. (பிணிமுக வூர்தி ஒண்செய்யோன்.) (புறம். 56)

௨. பொன்—பொன்னிறமுடைய நெல்.

௩. தமப்பன்—தகப்பன். எழிலி—மேகம்.

௪. புன்கண்—துன்பம். தண்ணளி—அருள்.

௫. தண்ணியள் — குளிர்ச்சியுடையவள். பொறையள்—பொறுமை யுடையவள்.

## மக்களியல்பு

பருவமழை பயிர்வளர்க்கப் பயிருயர்ந்து குடிவளர்க்க
ஒருவர்வள முடையவர்மற் றொருவர்வறி யவரென்று
கருதுவதற் கரியவராய்க் கானவரங் குறைதலின்றிப்
பருவரலின் றில்லையெனப் பகர்பவரு மிலர்மாதோ. சு

முருகனிடம் வேண்டுவது முகில்பொழியும் பருவமழை.
அரசனிடம் வேண்டுவதங் கரசிறைமுன் னளப்பதுவே.
இரவலரை வேண்டுவது பலபொருள்கொண் டேகுவது
வரவுமிகை. செலவுகுறை யென்பனவே மனவருத்தம். எ

## பேகன் ஆட்சி

முறையிரந்து வருபவரு முன்னடைந்து கைவிரித்துக்
குறைமொழிந்து நிற்பவருங் குறவரிலின் மையினிரவில்
நிறைமிகுதன் மனைவியொடு நிரம்புபொறிப் பயனுகர்ந்து
நறைமலர்மார் பிறைபகலி னலம்புரிவா னுவப்ப. அ

தொன்மையது நல்லறமே சொல்லுவது நாவினுக்கு
மென்மையது மனத்திருளை விலக்குவது தமிழென்று
மன்னனினைந் தாடவரு மாதருங்கற் றுணர்வதற்குப்
பன்னரும்பள் ளிகள்சமைத்தான்; பயில்வித்தா னனைவரையும். கூ

எள்ளலிலா வோவியங்க ளெழுதநெய்தன் முதலான
கள்ளமில்பல் கலைகளையுங் காவலனுட் டிடைவளர்ப்பான்.
தெள்ளுதமிழ்ப் புலவருக்குஞ் சிறந்தவிசைப் பாணருக்கும்
உள்ளுவப்ப நடிப்பவர்க்கு மொளிர்பொனணி கலனளிப்பான். க௦

காடழித்துக் கனிதருபல் காவமைப்பான்; கவினகரம்
நாடமைப்பான்; குளமமைப்பான்; நன்னெறிகள் பலவமைப்பான்;
ஆடவரு மகளிர்களு மாடுபொழின் மடுவமைப்பான்;
நீடுமலை மருந்துணவு நிலையங்கள் பலவமைப்பான். கக

---

சு. வளம்—செல்வம். பருவரல்—துன்பம்.

அ. நிறை—கற்பு. நறை—தேன்.

கூ. பள்ளிகள் சமைத்தான்—பள்ளிக்கூடங்கள் கட்டினான்.

கக. கா—சோலை. மருந்து உணவு நிலையம்—மருத்துவ நிலையம், அறக் கூழ் நிலையம்: உம்மைத் தொகை.

உயிரியல்பு மிருதிணையி னுடலமைப்பு முறுப்பமைப்புஞ்
செயன்முறையும் விரித்தெவர்க்குந் தெரிவிக்கு மவையமைப்பான்.
பயிறொறுமின் பங்கொடுத்துப் பாறொறுஞ் சென்னெறிபுகட்டி
மயலகற்றும் வள்ளுவனார் மறைபயிற்று மிடஞ்சமைப்பான். கஉ

## மலைவளங் காணச் செல்லல்

இன்னபல பணியியற்றி யிறைவனுறை யுங்காலை
பன்னிறங்கொண் மலர்விரிக்கும் பசும்பொதும்ப ரழகுமொளிர்
மின்னுமிழு முகிலுறங்கும் வெற்பழகுங் கண்டுவப்ப
உன்னினன்மற் றொருபரிமே லேறிவிரைந் தூய்த்தனனால். கங

மண்ணிடைநின் றியங்கரிய மரமனைத்தும் வழியெங்கும்
கண்ணிரண்டும் வியப்படையக் கால்கொடுமுன் கடிதணுகி
வண்ணமலர் நறுங்கனிகள் வழங்குதல்போ லுதிர்த்தகல
எண்ணுமனம் போன்றுபரி யேகவவ னும்படர்ந்தான். கச

வெயிறருவெங் கதிரினுக்கு வெரிநிடுகா ரிருண்மறைந்து
துயிலுறுதண் டலையணங்கு தோன்றல்வர வறிந்தழகு
பயிறருபச் சிலையுடுத்துப் பழமென்னும் பணியணிந்து
குயின்மொழியால் வாழ்த்துரைத்துக் குளிர்மலர்தூய் வரவெதிர்ந்தாள். கரு

வன்கனிகள் பலசுமந்து வளைந்துகிளை நிலங்கவிழ
நன்கடர்பச் சிலைபரப்பி நயம்படச்செய் குன்றமெனப்
பன்னெடுமா மரம்விளங்கப் பழஞ்சிதைத்துக் கிளியுண்ண
மன்னவன்கண் டகமகிழ்ந்து மற்றொருபக் கம்படர்ந்தான். கசா

அடிமரத்துங் கிளைநடுவு மரும்பிமல ராப்பலவின்
நெடுமுழவந் தொடுத்தனபோ னிரம்புசுவைக் கனிதூங்கக்
கடுவனறு மணமுகர்ந்து கருவிரலினாற் கிழித்தங்(கு)
உடன்வருதன் றுணைக்கருத்தி யுண்டுவப்பக் கண்டகல்வான். கஎ

கதிர்விடுவெண் பிறைமருப்புக் கரியிலையைத் தன்னெடுங்கைந்
துதியுயர்த்திப் பிடித்திழுத்து நொடித்துவிடு கழைசெலுத்துங்
குதிரையெனக் குனித்தாடக் கொற்றவன்கண் டதற்கிசைய
முதிருவகை யொடுசதியின் முன்னடத்தி னான்பரியை கஅ

கஉ. அவையமைப்பான்—ஆராய்ச்சிக் கழகங்கள் ஏற்படுத்துவான். பயில்தொறும்—கற்றறியுந்தோறும். மறை—திருக்குறள்.
கச. இயங்க அரிய—இடம்விட்டுப் பெயர முடியாத. கால்கொடு—காலினால்.
கரு. வெயிறரு=வெயில்+தரு. வெரிந்இடு காரிருள்—புறமுதுகிட்டோடுகின்ற கரிய இருட்டு. தண்டலை யணங்கு—சோலையாகிய பெண்.
கஎ. முழவம்—மத்தளம். கடுவன்—ஆண் குரங்கு.
கஅ. நொடித்து—ஒடித்து. கழை—மூங்கில். சதி—தாளம்.

எறிபடகி லெரியுண்ண வெழுபுகையின் மணமுகர்ந்துஞ்
செறிபுத லெங்கும்விரிந்த செழுமலரின் மணமோர்ந்தும்
முறிமணத்தி னொடுபழுத்து முதிர்ந்தகனி மணநுகர்ந்தும்
நெறியொடுசென் றனன்மன்ன னெடுமுடிகொண் மலையருகே.

மரனிழலின் மானுறங்கும். வண்கனியின் றேனிறங்கும்.
அரவுமிழு மணிமின்னும். அலர்சொரியுங் கணிமன்னும்.
முரணிவய மாமுழங்கும். முனிந்துமத மாவழங்கும்.
குரல்கவர்ந்துண் ணுங்கிளிகள். குடைந்துநற வுண்ணுமளிகள். ௨௰

மடுவினெடுங் கயலலையும். வழிதொறும்பன் முயல்கலையும்.
கடுவனறுங் கனியுதிர்க்கும். கனன்றுதகர் நனியெதிர்க்கும்.
பிடியொடுநால் வாய்நடக்கும். பிணவொடுபுல் வாய்கிடக்கும்.
கொடியைநெடுங் கழைதாங்கும். கோடுதொறு மழைதூங்கும்.

கருமணியிற் றிகழ்தருபூங் கவினொச்சி மருங்கசைய
அருகணுகிப் பரியிறங்கி யதனிலையி னழகுணர்ந்தான்.
உருவுமயில் விரலடியை யொத்திருத்தல் கண்டுவப்ப
மருமலர்க்கா யாவொருபான் மயிலெருத்தங் காட்டியதே. ௨௨

கண்களிப்ப மலர்விரித்த காயாவைக் கண்டகல
மண்ணுறவீழ்ந் தசைவேங்கை மரமிவர்ந்து மஞ்ஞையெனப்
பெண்ணொருத்தி யெழில்காட்டிப் பெருகுமண மலர்கொய்யத்
தண்ணளிமன் னவன்கண்டு சாலமகிழ்ந் தகன்றனனே. ௨௩

மயிலுறுப்பி னழகறிந்து வௌவினபோ லுஞ்செடிகள்.
குயின்மொழிமங் கையர்கவர்ந்து கொண்டனர்போ லுஞ்சாயல்.
அயிலமர்செவ் வேன்முருக னழகுவடி வினனென்ப.
உயிருறையவ் விறையுமிவர்ந் தூருவது மயிலன்றோ. ௨௪

பன்னிறங்கொண் டழகொழுகப் படர்பொழுதார் பார்த்துவவார்?
தன்னெதிரிற் செலுமரவைச் சாகுவிக்கும் வலிமையதே.
நன்மருந்தா யதனுறுப்பு நலிவிக்கு நோயகற்றும்
என்னுளது மற்றிதனுக் கிணையாவ தெனநடந்தான். ௨௫

---

௧௯. எறிபடகில்=எறிபடு+அகில் (வெட்டப்பட்ட அகில் கட்டை) புதல்—செடி. முறி—இளந்தளிர்.

௨௰. கணிமன்னும்—வேங்கை மரம் நிலைத்து நிற்கும். முரணி—மாறுபட்டு வயமா—புலி. மதமா—யானை.

௨௨. மருங்கு—ஒரு பக்கத்தில். மயிலெருத்தம்—மயிலினது கழுத்தின் நீலநிறம் போன்ற நீல நிறத்தை.

௨௩. மஞ்ஞை—மயில். தண்ணளி—அருள்.

௨௪. மயிலுறுப்பு, கழுத்தும் காலும். செடிகள் நொச்சியும் காயாவும்,

வண்ணமலர் வள்ளத்து நறவேந்தி வண்டினமங்(கு)
உண்ணவரு முன்னெதிருஞ் செடிகொடியி னுயர்வறிந்து
தண்ணருவி நீருதவுந் தகைமையைக்கண் டிவுளிவிடுத்(து)
அண்ணலதனைக்காண வதர்வழியே நடந்தனனால். ௨௬

பசுந்தளிராந் துகில்போர்த்துப் படிமுகிலாம் பாகையினை
விசும்புதொடு முடிக்கணிந்து வெள்ளருவி யெனுநறவம்
அசும்புறுதண் ணலங்கலணிந் தமர்மலையைக் கண்டரசன்
கசிந்துருகி முருகனெனக் கருதியிரு கைகுவித்தான். ௨௭

காரகிலுஞ் சந்தனமுங் கரிமருப்புங் கதிர்மணியும்
ஆரமுமென் மணமலரு மலைநெடுங்கை யால்வரன்றி
நீரருவி முருகனுக்கு நிரம்புபல காணிக்கை
பேருவகை யொடுசெலுத்தும் பெற்றியினில் விழக்கண்டான்.

## மயிலுக்குத் துகிலளித்தல்

விழுமருவி முழவியக்க விரிசிறைவண் டியாழியற்றப்
பழமருந்தி மரத்திருந்து பசுங்கிள்ளை பாட்டிசைக்க
அழகமர்தன் றோகைவிரித் தாங்கொருபான் மயிலாட
வழியினினைந் துறப்புகழ்ந்த மன்னனடங் கண்டனனே. ௨௯

கண்டவன்முன் னடந்திலன்;தன் கண்ணிரண்டு மெடுத்திலன்;பின்
தண்டமிழ்ப்பண் ணொடுநடிக்குந் தையலரை நினைந்துவப்பான்.
வெண்டுகிறீட் டெழினியினை வென்றுமலை யெழில்காட்டக்
கொண்டனன்மன் னவன்மகிழ்ச்சி. யாவரது கூறவல்லார்? ௩௦

நின்றமயின் மீதருவி நீர்த்துளிவீழ்ந் துடனனைக்க
மென்றுகிலைத் தோளினின்று விரைந்துகையி னாலெடுத்துச்
சென்றிதுகொள். பனியகற்றும். திருத்தமுற நடித்தனைநீ
என்றுபரி சில்கொடுத்தா னீகையினின் மடமுடையான்.* ௩௧

---

௨௬. மலர்வள்ளத்து—மலராகிய கிண்ணத்தில். நறவு—தேன்.
௨௭. முகிலாம்பாகை—வெண் மேகமாகிய தலைப்பாகை. முடி—சிகரம். அசும்புறு—துளிக்கின்ற.
௨௯. முழவு—மத்தளம். கிள்ளை—கிளி.
௩௦. வெணதுகில் தீட்டு எழினி—வெண்ணிறத் துணியாகிய ஓவியர் தீட்டப்பட்ட திரைச்சீலை.
௩௧. பனி—குளிர். ஈகையினில் மடமுடையான்—கொடுப்பதில் அளவின்றிக் கொடுக்கும் மடமைக் குணமுடையவன்.

* மடத்தகை மாமயில் பனிக்குமென் றருளிப்
படாஅ மீத்த கெடாஅ நல்லிசைக்
கடாஅ யானைக் கலிமான் பேக. (புறம். 145)

வரியிசைத்து நடமாடு மாதர்களுக் குவந்தரசர்
பரிசிலளித் தனரென்று பகர்வர்சிலர் புள்ளினங்காள்.
விரிசிறைமஞ் ஞைக்களித்த வேந்தருள ரோ ?சொன்மின்
வருகவிவன் தொடைகாண வருகவெனக் குயில் கூவும். ௩௨

மீளல்

வாங்குதிரை மிசையிவர்ந்து மகிழ்வடைந்த மன்னவனவ்
வோங்கலிடைப் படுநிகழ்ச்சி யொவ்வொன்றுக் கண்டகன்று
வேங்கைநறு மணம்விரிக்கும் வியன்சார லிடைச்செலுத்தி
ஆங்ககன்று பொதினியினை யடைந்தரண்சூழ் மனைமீண்டான்.

சென்றபொழு தரவுரியிற் றிகழ்தருவெண் பட்டுடுக்கை
ஒன்றரையின் மீதுடுத்து மொளிர்பசும்பொ னிழைமிளிரும்
மென்றுகிறன் மேலணிந்தும் விளங்கியவன் மேலுடுக்கை
இன்றியரண் மனையடைந்தான். என்கொலெனப் பலருடைந்தார்.

ஏவலர்கண் டுளநடுங்க வில்லுறைகண் ணகிநடுங்கப்
பாவலர்முன் னணுகிமெல வினவநடம் பயின்றுடுங்
காவிவிழி விறலியெனக் கலவமயில் விரித்தாடிப்
பூவியன்மெல் லுடைப்பரிசில் கொண்டகன்று போயதென்றான்.

நடைபயின்ற நாண்முதலா நற்றமிழ்வல் லார்க்களிக்குங்
கொடையினையு மயிற்களித்த கொடையினையுங் குடிபுகழ
மிடைகலவம் விரித்தாடி வேந்தனுளங் கவர்ந்தவன்றன்
உடைகவர்ந்த மயிலினையு முறப்புகழ்வார் தமிழ்ப்புலவர். ௩௬

பணிபவர்க ளிடர்தவிர்த்தும் பற்றலர்தம் வலிகெடுத்தும்
உணவணிகள் புலவர்களுக் குவந்தளித்து மிசைவளர்த்தான்.
கணையனைய கண்மடவாள் கண்ணகிசொற் கரும்புண்டுந்
துணைநெடுந்தோட் கழைநிழலிற் றுஞ்சியுமன் னவன்வாழ்ந்தான்.

இளவேனிற் பருவம்

(வேறு)

குளிர்தாமரை மலர்நாறுபல் குளமும்புன லாறும்
தளிர்பூமிகு பசுஞ்சோலையுந் தண்மையிழந் துலர
இளவேனில்வந் ததுவானிவர்ந் தென்றாழ் வெயில் கான்று
வளமார்நிலம் வறள்வித்தது. வளருஞ்சில மரமே. ௩௮

---

௩௫. ஓங்கல்—மலை. ௩௬. கலவம்—தோகை. பூ இயல்—பூ வடிவங்களைத் தன்னிடத்தேயுடைய.

௩௭. பற்றலர்—பகைவர். உணவணிகள் = உணவு + அணிகள். கணையனையகண்—அம்புபோன்ற வடிவத்தையுடைய கண். துணைநெடுந் தோள் கழைநிழல்—நீண்ட இருதோள்களாகிய மூங்கிலின் நிழல். துஞ்சி—தூங்கி.

௩௮. தண்மை—ஈரம். என்றாழ்—சூரியன்.

போகூழ்வரிற் பொருள்போய்ப்புகழ் பொன்றிக்கெடு வார்போல்
சாகாதிலை யுதிர்ந்தொண்கிளை தளருஞ்சில மரமே
ஆகூழ்வரிற் பொருள்பெற்றிசை யடைந்துய்ப்பவர் போலப்
பூகாய்கனி நிறைந்தொண்கிளை பொலிவுற்றிடுஞ் சிலவே. ௩௯

கணவன்மனங் களிக்கின்மனங் களித்துத்துய ரெய்தின்
உணவுந்தவிர்ந் துடலுந்தளர்ந் துயங்குங்குல மகள்போல்
அணிசெய்மரந் தளிர்க்கும்பொழு தணைமென்கொடி தளிர்த்தும்
பணைவண்கிளை யுலரும்பொழு தகலாதுடன் படுமே. ௪௦

உண்ணும்புனற் கலையும்பிணைக் கூட்டுங்கலை மானே.
தண்ணஞ்சிறை நிழலைப்புறா தருந்தன்பெடை தனக்கே.
பெண்மைமிகும் பிடிக்கியாவுரி பிரித்துத்தருங் களிறே.
வண்ணத்தளிர் கோதிக்குயின் மடமென்றுணைக் கூட்டும். ௪௧

இரவும்பகற் போதுந்தொடர்ந் தியங்குஞ்செழுந் தென்றல்
வருடுந்தொறும் வறண்மாதளிர் மலர்பூந்துண ரீனும்.
முருகொன்றுசெம மலரீனுவ முருக்கினனிசை குயிலும்
வரிவண்டரும் பாடும்.பிணை மான்கன்றினோ டாடும். ௪௨

செம்பொன்னணி யணிமாதரின் மலர்கொண்டன செருந்தி.
வம்பொண்மலர் மலர்வித்தன வளர்நீள்சினை மரவம்.
கொம்பெங்கணு மரவப்பலிற் குரவம்முகை யரும்பும்.
செம்பிற்றிகழ் வனநீள்சினைத் தேமாந்தளி ரெங்கும். ௪௩

கருந்திண்சினை ஞெமையும்வளர் சுழையுந்தளி ரீனும்.
நெருங்கும்பல வுயிர்க்குஞ்செழுங் கனிநல்குநீ ணெல்லி.
வருந்தும்பருந் துறையுங்கிளை வாகைமலர் விரிக்கும்.
அரும்பும்விரி மலருஞ்செறிந் தணிகோங்குக ளோங்கும். ௪௪

மன்னுங்குயில் வாழ்த்துச்சொல வருதென்றலும் விசிற
முன்னஞ்சிறை யளிசெந்தமிழ் மொழியின்னிசை முரலப்
பொன்னின்மிளிர் மலர்மென்கொடி பொற்போ டசைந்தாட
இன்பந்தரு பொழிற்பந்தரி லிளவேனில்வீற் றிருக்கும். ௪௫

---

௩௯. போகூழ்—பொருள் ஒருவனைவிட்டுப் போதற்குக் காரணமாகிய ஊழ். ஆகூழ்—பொருள் ஒருவனை அடைதற்குக் காரணமாகிய ஊழ்.

௪௦. பணை—திரண்ட. படும்—பட்டுவிடும்.

௪௧. பிடி—பெண்யானை. களிறு—ஆண்யானை. யா—ஒருவகை மரம்.

௪௩. அரவப்பல்—பாம்பின் பல். முகை—அரும்பு.

மலர்மென்கொடி செழுநீண்மர மருவிக்கொழு நனைச்சேர்
குலமங்கையிற் பொலியும். குயில் பெடையின் புறக் கூவும்.
அலர்மென்பொடி குடைந்தொண்சுரும் பணுகும்.துணை யயிர்க்கும்.
பலவின்சுளை கடுவன்றரப் பற்றித்தினு மந்தி. ௪௬

கரையுள்ளன; புனலுள்ளன; கயலுள்ளன; அலையுந்
திரையுள்ளன; வளையுள்ளன; தெளிவுள்ளன; செந்தா
மரையுள்ளன; மணலுள்ளதண் டுறையுள்ளன; மகளிர்
உரையுள்ளன; விரையுள்ளன வுவந்தாடுபல் பொய்கை. ௪௭

## பொழில் விளையாட்டு

(வேறு)

ஆவி யர்குலத் தண்ணல்வேள் பேகனும்
காவி யன்னகட் கண்ணகி மங்கையும்
பூவி னற்பொலி சோலையும் பொய்கையும்
மேவி யாடதேர் மீதிவர்ந் தேகினார். ௪௮

மருவு கேண்மை மலைவள நாட்டினர்
பரியி லூர்ந்து படர்ந்தனர் பற்பலர்;
கரியி லேகினர்; காலி னடந்தனர்;
உருள்பெ றும்மவைய முந்தியுஞ் சென்றனர். ௪௯

சுரும்பர் பாடுதண் சோலை புகுந்துடி
மருங்குன் மங்கையர் மானின மானுவர்;
திருந்து சாந்தணி திண்டோள் வயவர்கள்
புரிந்து சுற்றும் புலியினம் போல்வரே. ௫0

கொல்லுங் கொல்லுங் கருவிழிக் கூற்றங்கள்;
ஒல்லை யாடவ ரோடி மறைவிடஞ்
செல்லு கென்று சிலம்புக ளார்ததிட
எல்வ ளைக்கை யரிவைய ரேகுவார். ௫௧

மன்னன் மங்கை வருகையை மாங்குயில்
பன்னும்; பூவை பகருந் தமிழிசை;
புன்னைப் பூம்பொரி சிந்தும் பசும்பொழில்.
கன்னிப் பூகங் களித்து விசிறுமே. ௫௨

---

௪௬. கொழுநன்—கணவன். துணை அயிர்க்கும்—பெண் வண்டு ஐயங் கொள்ளும். கடுவன்—ஆண் குரங்கு. மந்தி—பெண் குரங்கு.
௪௭. வளை—சங்கு. விரை—மணம்.
௫0. சுரும்பர்—வண்டு. துடி மருங்குல்—உடுக்கைபோலும் இடை. வயவர்கள்—வீரர்கள்.
௫௧. ஒல்லை—விரைந்து. எல்—ஒளி.
௫௨. பன்னும்—சொல்லும். பூவை—நாகணவாய்ப்புள். பூகம்—கமுகு.

கோட்டுப் பூவுங் கொடிமென் மலர்களும்
வேட்டு மஞ்ஞைகண் மின்கள்வெள் ளன்னங்கள்
ஈட்டம் போந்தன போன்றுகா வெங்கணும்
வாட்ட டங்கண் மகளிர் நுழைந்தனர். ௫௩

நீடு பன்மர நின்று நிழல்செயக்
கோடு சேர்பூங் கொடிகண் மணந்தரப்
பாட வல்ல குயிலினம் பாண்செயும்
ஈடில் காவெங்கு மேகினர் மாந்தரே. ௫௪

வளங்கொள் காவில் வடிவுவண் ணத்தொடு
விளங்கு பூக்கள் விழிக்கு விருந்திடும்.
இளந்த ளிர்களு மெங்குஞ் செறிந்தசைந்(து)
உளங்க வர்ந்திடும். தென்ற லுலாவுமே. ௫௫

குரவங் கொய்வர்; குருந்த மலர்கொய்வர்;
மரவங் கொய்குவர்; மாந்தளிர் கொய்குவர்;
பொரியிற் பூக்கும்வெண் புன்னை மலர்கொய்வர்;
மருவி ரிக்கும்வெண் மல்லிகை கொய்வரே. ௫௬

கோங்கங் கொய்குவர்; குல்லை மலர்கொய்வர்;
வேங்கை கொய்வர்; விரிமௌவல் கொய்குவர்;
ஈங்கை கொய்வர்; இலவ மலர்கொய்வர்;
தேங்கொ டாமரைச் செம்மலர் கொய்வரே. ௫௭

சண்ப கங்கொய்வர்; தாழை மலர்கொய்வர்;
கண்க ளொக்குங் கருவிளை கொய்குவர்;
வண்ண ஞாழல் மகிழ மலர்கொய்வர்;
வெண்க டம்பொடு வெட்சி மலர்கொய்வர். ௫௮

தையலார்கை தொடுந்தொறுந் தாழ்ந்தினுங்
கொய்க வென்று குனியுஞ் செடிகொடி.
மெய்யிற் றோன்றும் வியர்வை விலகிடப்
பைய வேசில பக்கல் விசிறுமே. ௫௯

குறுகிப் பற்பலர் கொய்து குறைத்தலின்
நறும ணத்தலர் நல்ல தளிரின்றிச்
சிறும ரங்களிற் சேர்ந்த கொடியினம்
வறுமை யுற்ற மகளிர்மெய் போன்றவே. ௬௦

---

௫௩. கோட்டுப்பூ—மரக்கிளைகளிற் பூக்கும் பூ. வேட்டு—விரும்பி. ஈட்டம்—கூட்டம். ௫௪. பாண்—பாட்டு.
௫௭. குல்லை—கஞ்சங்குல்லை. மௌவல்—காட்டு மல்லிகை.
௫௯. சில—சில கொடிகள். பக்கல்—தையலார் பக்கல்.

மன்னன் பேகன் மனைவியு டன்சென்று
பன்ன றும்பூப் பறித்து மகிழ்வனால்.
கன்ன லின்மொழிக் கண்ணகி கண்ணுறும்
பொன்னம் போதுகள் கொய்துபின் போவளே. ௬௧

பாண்செய் வண்டு படர்ந்துதே னுண்ணும்பல்
நாண்ம லர்க்கொடி கண்டு நடப்பவள்
மாண்பு றும்பன் மலரிலா வொன்றிற்குப்
பூண்கள் பூட்டிப் பொலிவினைச் செய்வளே. ௬௨

மழலை பேசி மகிழுங் குயிலினை
மொழியின் வென்று மலர்ந்த முகத்தவள்
பொழிலி லாடிப் பொலியு மயிலுடன்
அழகஞ் சாயலோ டாடிக் களிப்பளே. ௬௩

ஆர்த்து வண்ட ரணைதரு நீள்சினைக்
காத்தி கழ்தரு காமரு மாநிழல்
கூத்தி யற்றுங் குவளையங் கண்ணினார்
பூத்த பூங்கொடி போன்று பொலிவரே. ௬௪

செந்த மிழ்மொழி வாழ்க சிறந்தென்று
பந்த டித்தெழிற் பாவைய ராடுவர்.
மைந்து கொண்டவெம் மன்னவன் வாழ்கவென்(று)
அந்தண் சோலையி லாடுவ ரூசலே. ௬௫

ஆடு வார்களோ டாடிக் களிப்பரால்.
பாடு வாரொடு பாடி மகிழ்வரால்.
ஊடு வார்கட ளூட றவிர்ப்பரால்.
ஏட லர்த்தொடை சூடு மிளைஞரே. ௬௬

நெருங்கு பூமர நீழல் வெறுத்தவர்
மருங்கு சென்று மணலிடை யாடுவர்;
விரும்பி யூசலி லாடி வெறுத்தவர்
பொருந்து பூங்கொடி போற்சிலர் போவரே. ௬௭

குவளை காந்தள் குளிர்தா மரையொடு
பவழ முத்த மலர்த்தும் பசுங்கொடி
தவழு மென்னடை கற்றுத் தருக்கல்போல்
உவகை யோடரி வைய ருலாவுவார். ௬௮

---

௬௧. கன்னல் இன்மொழி—கரும்பு போன்ற இனிய சொல்.
௬௨. பாண்—பாட்டு. பூண்கள்—தான் அணிந்திருந்த அணிகலன்களை.
௬௫. மைந்து—வலிமை.

காவி தாமரை காந்தள் குமிழ்முல்லைப்
பூவ லர்ந்த பொலங்கொடி செல்வதும்
மேவி மீள்வதுங் கண்டு வியப்படைந்(து)
ஓவ மாயினன் காவி னொருவனே. ௬௯

நல்ல யாழிசை யென்று நடந்தவன்
மல்லன் மாவுறை மங்கையர் பக்கலிற்
செல்லும் போததுசேயிழை வாயினுற்
சொல்லும் பாட்டிசை யென்று துணிந்தனன். ௭0

நீர்விளையாட்டு

தைய லாருந் தடந்தோ ளிளைஞரும்
கொய்து கொய்தின்பங் கொண்டது போலவே
பொய்கை நீர்த்துறை தோறும் புனலிடைக்
கையி னீந்திப் படிந்து களிப்பரே. ௭௧

இல்லவர்க் கம்பொ னீந்து முழுகுவர்.
நல்லு டுக்கையோ டாடி நடப்பரால்.
ஒல்லை மூழ்கி மணல்கொண் டுவப்பரால்.
செல்லு வார்செலச் சேர்வார் புகுவரே. ௭௨

புதல்வர் தாயர் புனலா டரவமும்
அதர்சென் மாதர் சிலம்பி னரவமும்
மிதவை யிற்சென்று மீள்வா ரரவமும்
முதியர் வாழ்த்துங் கடலின் முழங்குமே. ௭௩

பாய்ந்து மூழ்கிப் படருவர்; பக்கத்தில்
நீந்தி யேகுவர்; நீள்கரை மீள்குவர்;
போந்து நீரைச் சிவிறியிற் போக்குவர்;
சாந்த மோச்சுவர் தையலர் கையினே. ௭௪

கொங்கு `றுந்தா மரைப்பூங் குளத்திடைச்
செங்க யற்கட் டெரிவையர் சாந்தொடு
குங்கு மச்செங் குழம்புகொண் டாடலின்
தங்கு நீர்கய றண்மணங் கொள்ளுமே. ௭௫

---

௬௯. ஓவம்—ஓவியம்.
௭0. சேயிழை—செம்மையான அணிகலன்களை யணிந்த பெண்.
௭௨. உடுக்கை—ஆடை.
௭௩. அதர்—வழி. மிதவை—படகு.
௭௫. நீர்கயல்—நீரும் கயல்மீனும்.

கூந்தன் மாலை குலைந்தன ; பூசிய
சாந்த நீங்கின; தானை யவிழ்ந்தன;
காந்த ளன்னசெங் கைவளை வீழ்ந்தன
நீந்தி மங்கையர் நீர்குடைந் தாடவே. எசு

பொன்னிற் செய்த கயல்களும் பூவுமிட்(டு)
அன்ன மாமோ ரரிவையு மண்ணலும்
மன்னு செல்வமு மக்களும் வாய்க்கவென்(று)
உன்னி நீரி லொருங்கு குளிப்பரே. எஎ

காதல் பொன்னெழில் கல்வி யுடையவன்
மாதி வட்கு மணமக ளெனெ
மூதின் மங்கை மொழிந்துதன் கன்னியைப்
போது தூவிப் புனல்படி விப்பளே. எஅ

கோடு சூழ்ந்த குளிர்புனற் பொய்கையில்
ஆடு மங்கைய ரன்னங்கள் போல்வரே.
நாடி நீந்து நலந்திகழ் மைந்தர்கள்
நீடு கோடுகொள் யானைக ணேர்வரே. எகூ

ஆவி யந்துகி லாடவர் மங்கையர்
மேவிப் பாய்ந்து விழுந்தெழு மாற்றலை
வாவி யென்னு மலர்முக நங்கைதன்
காவி யங்கண்ணுற் கண்டு களிப்பளே. அ0

முளரி யென்று முகத்தை யணைதொறும்
வளைமென் கையின் மடமங்கை யோச்சுழிக்
களிவண் டக்கையைக் காந்தளென் றெண்ணியே
விளரி பாடி விருப்பி னணையுமே. அக

கண்க ளுக்கிற்ற காவி மலர்களும்
ஒண்மு கத்திற் குடைந்த முளரியும்
பண்ணை வென்றசொற் பாவையர் தம்முனம்
நண்ணும் போதெலா நாணிநீர் மூழ்குமே. அஉ

பொன்ன ருங்கலம் பூணுஞ்செம் மேனியள்
தன்மு கத்தொடு தாழ்ந்து குடைவது
மின்னுந் திங்களும் வெண்டிரை யாழிவாய்
மன்னி யாடி மகிழ்வது போலுமே. அங

---

எசு. தானை—ஆடை. எகூ. கோடு—(1) கரை. (2) கொம்பு.

அக. முளரி—தாமரை. ஓச்சுழி—வீசித் தள்ளும்பொழுது. விளரி—ஒரு பண்.

அங. குடைவது—நீராடுவது. ஆழிவாய்—கடலில்.

தங்கு நீர்த்தடந் தாழ்ந்தெழு மாடவன்
நங்கை வாண்முக நற்றா மரையென்று
செங்கை யாற்கொளச் செல்லுழி வெண்ணகை
தங்கல் கண்டுநாண் சார்ந்துபின் செல்வனே. அச

நீந்திச் செல்லு நெடுங்கய லைக்கண்டு
சாந்த ணிந்த தடந்தோட் கணவமென்
பூந்தண் மார்பகண் பொய்கைக் குளவோவென்(று)
ஏங்கெ ழிற்பெண் ணிறும்பூ துறுவளே. அரு

நீரின் மூழ்கி விழிவாய் நிறந்திரிந்
தேரி ழந்ததன் னில்லவண் முன்னின்றே
ஓரி லைஞனென் னொண்டொடி யாண்டுளாள்
தேர்கி லேனென்று தேடித் திரிவனே. அசு

அன்னமே யென்ற னன்ன மெவணுளாள் ?
நின்னை நீரிடை நீந்தினில் வென்றவள்
நன்னி லத்தி னடையினில் வென்றவள்
என்னை யும்வென்றா ளென்பா னொருவனே. அஎ

மன்னன் கண்ணகி தன்னொடு வந்தனன்.
இன்மை தீர இரவலர் யாவர்க்கும்
நன்க லங்களும் ஆடையு நல்கினன்.
பொன்செய் மீன்மலர் பொய்கையி லுய்த்தனன். அஅ

## மன்னன் நீராடல்

சாந்துஞ் சுண்ணமுந் தாவில் நறுநெய்யும்
வேந்தன் கொண்டுதன் மெல்லிய லாளொடு
பூந்தண் பொய்கை புகுந்து புனலிடை
நீந்தி நீந்தி நெடும்பொழு தாடினன். அகூ

மின்னின் மேனியள் வேயன்ன தோளினள்
கன்ன லன்ன மொழியினள் காரிகை
பொன்னி யென்னும் பொதுமக ளாடுவாள்
மன்ன னைக்கண்ணிற் கண்டு மகிழ்ந்தனள். கூ0

நகுசெவ் வாயினன்; நல்லரு ணோக்கினன்;
முகமு மெய்யு மொழியு மழகினன்;
புகழு மாண்மையன்; பொன்மலர் நன்மணம்
மிகவ டைந்தது போல்வனிவ் வேந்தனே. கூக

அரு. சாந்து—சந்தனம். இறும்பூது—வியப்பு.

கல்வி வல்லவன் கண்ணுக் கினியவன்
மல்லி யற்றுமிம் மன்னவன் றோளிணைப்
புல்லுந் தோளே புகழ்பெறு தோளென
எல்வ ளைக்கை மடந்தையங் கெண்ணினாள். ௬௨

கண்ணம் பெய்தனள்; கைகளிற் பற்றினள்;
வண்ண மாலை மலைந்ததிண் டோள்களைத்
தண்ணந் தாரிற் றளைந்தனள்; மன்னனும்
அண்ணல் யானை யரிவைகைப் பட்டதே. ௬௩

அலைபு னற்றட மாடிய கண்ணகி
நிலைகு லைந்திட நீரிடை நீந்திய
விலைம கள்பொன்னி வீசிய காதலாம்
வலையிற் பட்டு மகிழ்ந்தனன் மன்னனே. ௬௪

விழிக்க யிற்றின் விளங்குதோட் டேணியோ(டு)
இழுத்துக் கட்டி யினவலை யார்த்தெழப்
பழிக்கஞ் சாத பரத்தை யரசனை
அழைத்துக் காவி னகத்திற்கொண் டேகினாள். ௬௫

தோளி னானுந் தொடியணி கையினும்
நீளி ருங்கடைக் கண்ணினு நேர்மைகொள்
தாளின் மென்னடை யானுந் தமிழ்தெரி
வேளனான் றனக் கின்பம் விளைத்தனள். ௬௬

மாலை சூட்டியு மார்பிற்சாந் தப்பியும்
காலைப் பற்றியுங் கையின் வருடியும்
பாலுந் தேனும் பழமு மருத்தியும்
மாலு றுத்தினள் மங்கையம் மன்னற்கே. ௬௭

கண்கள் காணக் கவினடங் காட்டினள்;
பண்பொ ருந்திய பாடல்கள் பாடினள்.
உண்க ணம்பி னாரமிழுந் துள்ளத்தின்
பெண்ண லந்துய்த் திருந்தனன் பேகனே. ௬௮

பூவை மென்சொலாள் புக்குழிப் புக்கிருந்(து)
ஆவல் கொண்டெழும் போதெழுந் தாடிநுண்
பாவை யொப்பப் பலசெயல் செய்வனே
காவிற் றங்கிய காதற் கிழவனே. ௬௯

---

௬௯. பூவை—நாகணவாய்ப்புள். ஆடிநுண் பாவை—கண்ணாடியில் காணப்படும் நிழற்பாவை.

## உண்டாட்டு

நிலத்தி னின்று நிமிர்ந்து மலர்க்கையிற்
புலர்த்து நீள்குழற் பொற்புடை மங்கையர்
நலத்தின் மிக்க மழையி னனைந்தபின்
உலர்த்துந் தோகை மயிலின மொப்பரே. ௧௦௦

ஒற்றைக் கையி னனைந்த வுடைபற்றி
மற்றைக் கையின் மதலை யிணைத்தழீஇ
முற்றி ழைத்தைய லார்கொண்கர் முன்செலப்
பொற்புங் கற்பும் பொருந்த நடப்பரே. ௧௦௧

பருத்தி யாடைமென் பட்டுடை கட்டிநன்
மருப்பொ ருந்தலர் வார்குழற் கிட்டுமை
விருப்பி னுண்விழிக் கூட்டி விளங்கணி
திருத்தி மங்கையர் வேண்டுழிச் செல்வரே. ௧௦௨

வாளை யொக்கும் விழியினு மங்கையர்
தோளி னும்பொற் றொடியணி கையினும்
நாள லர்புனை நாறு குழலினும்
காளை யன்னவ ருள்ளங் கவர்வரே. ௧௦௩

அம்பொண் கண்ணா ரிவைய ராடவர்
தம்பு தல்வர் விருந்து தமரொடு
தும்பி போன்று சுவைமிகு தேனினைச்
செம்பொன் வள்ளத்தி லுண்டு திளைப்பரே. ௧௦௪

கனிக ளுண்ணுவர்; கன்ன லமுதுண்பர்;
இனிய பாலுண்பர்; இல்லவர்க் கூட்டுவர்;
மனமு நாவும் வயிறு முனிவுறத்
தினையின் மாவினைத் தேனினோ டுண்பரே. ௧௦௫

உருக்கு நெய்யினிற் செய்தசிற் றுண்டிகள்
திருத்து தேனினிற் பாலினிற் செய்தன
கருப்பஞ் சாற்றினிற் செய்தன கண்டொடு
பருப்பிற் செய்தன பண்டங்க ளுண்டனர். ௧௦௬

மணமி குந்த மலர்க ளணிந்தவர்
உணவி லாயிர மாற்றங்க ளுண்ணுவார்
மணியொண் முத்தம் வனப்பினைச் செய்யும்பொன்
அணியி லாயிர மாற்ற மணிவரே. ௧௦௭

---

௧௦௧. மதலை—குழந்தை. கொண்கர்—கணவர்.
௧௦௭. மாற்றம்—வகை.

## ஞாயிற்றின் மறைவு

(வேறு)

நிழலிலா வானத் திங்க ணெடுவழி வெயிலி னூரும்
ஒழிவிலா தோடி யோடி யுடம்பெலாம் வெதும்பும் வெய்யோன்
பழியிலா மக்கள் வேனில் வெம்மையைப் பாற்று மாறே
கழியுலாந் திரைசேர் மேலைக் கடலிடை மூழ்கி னானே. ௧௦௮

## இரவு வருகை

திங்களா முகத்தைக் காட்டித் திகழ்நிலாக் கலிங்கஞ் சுற்றி
மங்குலாங் கூந்த றாழ்த்தி வானமீ னாரம் பூண்டு
கங்குலா மங்கை நல்லாள் கண்ணகி கவலை நீக்கப்
பொங்கரிற் புகுந்தாற் போன்று புகுந்தது கங்குற் போதே. ௧௦௯

வெயிலுறாக் காவிற் றங்கி வேண்டிடஞ் சென்று கூவுங்
குயிலின மொடுங்கித் தங்கள் குடம்பையை யடைந்த மாதோ.
துயிலிடம் பெடையும் வண்டுந் துன்னின. நிலவி னாலே
வியனில முழுதும் பால்போல் வெண்ணிறங் கொண்ட தம்மா.

## நகருக்கு மீளுதல்

அன்னையர் மக்க டம்மோ டகங்களை யடைந்தார். வாட்கட்
கன்னியர் வீடு சேர்ந்தார். காளைய ரில்லஞ் சேர்ந்தார்.
பொன்னியின் வலையி னீங்கிப் புலம்புகண் ணகியைக் கண்டு
மன்னனுந் தேரி லேறி மனைவியோ டடைந்தான் மாடம். ௧௧௧

நெடுநிலை மாடஞ் சேர்ந்த நெட்டிலை யிலங்கு வேலான்
கடிமலர்க் கூந்த னங்கை கண்ணகி யூட றீர்த்துந்
தொடியணி திரள்வேய் போலுந் தோணல நுகர்ந்தும் வாழ்ந்தான்.
உடலுயிர் போன்று காத லிருவரு முறைந்தார் சேர்ந்தே. ௧௧௨

## பொன்னி வருத்தம்

நீர்விளை யாடுங் கோல நெடுங்கரைப் பொய்கை யுள்ளும்
கார்விளை யாடும் வான்றோய் காவினுங் காவ லன்றன்
தார்விளை யாடு மார்பந் தழுவியின் புற்ற பொன்னி
தேர்விளை யாடு நல்லூர் சேர்ந்தன ளுள்ளஞ் சோர்ந்தாள். ௧௧௩

---

௧௦௮. பாற்றுமாறு—நீக்குவதுபோல.
௧௦௯. கலிங்கம்—ஆடை. பொங்கர்—சோலை.
௧௧௦. குடம்பை—கூடுகள். துன்னின—அடைந்தன.
௧௧௨. கடிமலர்—மணமுடைய மலர். தொடி—வளையல்,
௧௧௩. கார்—மேகம். கா—சோலை. தார்—மாலை.

மன்னவன் பிரிவு பொன்னி வனப்பினைச் சுட்ட(து); அன்னாள்
மின்னவி ரணிகள் பூண்ட மேனியைச் சுட்ட(து); ஒன்றி
என்பினைச் சுட்ட(து); உண்க ணிரண்டையுஞ் சுட்ட(து); எண்ணி
அன்புசெய் யகத்தைச் சுட்ட(து); ஆவியைச் சுட்ட தம்மா. ௧௧௪

துயின்றில ளிரவுப் போதும். சுவைமிகு கனியுஞ் சோறும்
அயின்றிலள். புனலின் மூழ்காள். ஆடிலள் கழங்கும் பந்தும்.
பயின்றிலள் யாழும் பண்ணும். பசுங்கிளிக் குணவு நல்கி
முயன்றிசை வள்ளல் பேகன் பெயரினை மொழிவிப் பாளே. ௧௧௫

வாவியு ளாடு மாறு மணமிகு மலர்கள் பூத்த
காவினு ளாடு மாறுங் காரிருள் கழியத் தன்னைப்
பூவகல் வண்டு போலப் புரவல னீங்கு மாறும்
ஓவிய மெழுதி நோக்கி யுவகையுந் துயருங் கொள்வாள். ௧௧௬

## தோழியைத் தூதுவிடல்

அரிதினி லெழுதப் பட்ட வரசனோ வியத்தைக் கைக்கொண்(டு)
ஒருநொடிப் பொழுதி னேகி யுழையரில் லாத போழ்து
வரிநெடுங் கண்ணாய் தோழீ வணங்கிமன் னவன்பா னல்கி
எரியுறு மெழுகிற் றீயு மென்னிலை விளம்பு கென்றாள். ௧௧௭

பூவிரி சோலை சூழ்ந்த பொதினிபோய்க் கையிற் கொண்ட
ஓவியத் தினைமுன் னல்கி யொண்டொடி யிகுளை நங்கை
காவியங் கண்ணா ணின்பாற் காதன்மிக் குடையாள் பொன்னி
ஆவியைக் காத்தல் வேண்டு மரசவென் றிறைஞ்சி நின்றாள்.

மன்னவ வென்பாள். போர்வை மயிலுக்குக் கொடுத்தா யென்பாள்.
கன்னனுங் கைக்கு மென்பாள் கைவளை சோரு மென்பாள்.
பொன்னிமெய் யெங்கும் பீர்க்கம் பூநிறங் கொண்டா ளென்று
பன்னுவ பன்னிப் பின்னர்ப் பணிந்தெழுந் தடைந்தா னல்லூர்.

பண்ணினை வென்ற தீஞ்சொற் பசுங்கொடி யுரையைக் கேட்ட
அண்ணலப் பொன்னி யின்ன லகற்றுவா னகத்துட் கொண்டான்.
கண்ணகி கலுழ்வா ளென்று தாமரை கைகள் கூப்பும்.
பெண்ணிடர் காணற் கஞ்சிப் பெயர்ந்துவெற் படைந்தான் வெய்யோன்.

---

௧௧௬. பூஅகல்—பூவினின்றும் பிரிகின்ற

௧௨௦. கலுழ்வாள்—அழுவாள்.

## இரவின் இயல்பு

கற்பினுக் கரசி நையின் காட்டுவ மரசை யென்று
பற்பல விளக்க மேற்றிப் பார்க்குமோ ரணங்கு போலும்
வெற்பென விளங்குங் கோயின் மீதுமீ னடுவ ணேகும்
பொற்புறு திங்க ளென்னும் பொலிவமை முகங்கொள் கங்குல்.

## பேகன் பிரிவு

பிணையுட னேறு தூங்கப் பெடையுடன் சேவல் தூங்கக்
கணைநெடுங் கண்ணா ரோடு காதலர் கலந்து தூங்க
அணையிசைப் புரண்டு தூங்கா தகத்தெண முடிக்கத் தூங்கும்
துணைவியைப் பிரிந்தான்; ஞாயில் வாயிலைக் கடந்தான் றோன்றல்.

## கண்ணகி தேடுதல்

கடந்தரு நெறியே போனா னொருவருங் காணா வண்ணம்.
மடந்தைதன் னுறக்க நீங்கி மன்னனை நோக்கக் காணாள்.
நுடங்கிடை வருந்தச் செம்பொன் னூபுரஞ் சிலம்பப் பற்பல்
இடங்களி னடந்து நாடி யெங்கணுங் காணா ளானாள். கஉ௩

என்னைகொ றோழி மீர்? நீ ரொழுமினெம் முயிரைக் காணேன்.
நன்னகர்க் காவனேக்க நள்ளிர வேகி னார்கொல்?
மன்னவர் செல்லின் முன்னம் வந்திடு வாரால். இன்றேன்
இன்னுமிங் கடையார்? நாடி யென்னிடங் கொணர்மி னென்றாள்.

## ஞாயிற்றின் தோற்றம்

கொழுநனே கடவு ளென்னுங் கொள்கையின் வழுவா தென்றுந்
தொழுதெழு கற்பின் மிக்கா டுணைவனைக் காணாள. ஐய!
அழுகுவள் ; வருக வென்று கோழிக ளழைப்பக் கேட்டங்(கு)
எழுபவன் போல விண்ணி லெழுந்தனன் பகல்செய் வெய்யோன்.

---

கஉக. பார்த்தலாவது எங்கே செல்கிறான்; எங்கே தங்குகிறான் என்று நோக்குதல். மீன—விண்மீன. நடுவண்—நடுவில். கங்குல் பாாக்குமோா அணங்கு போலும் என்று இயைக்க.

கஉஉ. பிணை—பெண் விலங்கு. ஏறு—ஆண் விலங்கு. அணை—படுக்கை. அகத்தெணம—பொனனரியிடம செல்லவேண்டுமென்ற எண்ணம். ஞாயில்—மதில்.

கஉ௩. நுடங்கிடை—அசைந்து வருந்தும் இடை. நூபுரம்—சிலம்பு.

கஉ௪. என்னை கொல்—என்ன காரணம். இன்றேன் = இன்று + ஏன்.

கஉ௫. கொழுநன்—கணவன். மிக்கா டுணைவனை = மிக்காள் + துணைவனை. பகல் செய் வெய்யோன்—ஞாயிறு.

## தோழியர் தேடுதல்

மயிலென நடந்தார். நீடு மனையெலா மலைந்தார். அன்னம்
பயிலலர் மடுவுங் காவும் பார்த்தனர். குடிகட் கெல்லாம்
உயிரனை யானை வேந்தைக் கண்டவ ருளரோ வென்று
குயிலெனு மொழியார் கேட்டார். கோனிலை யென்றார்மீண்டே.

இல்லையென் றெதிரே வேகி யிகுளைய ருரைத்த வன்சொல்
மெல்லியல் செவியிற் புக்கு விரைந்தகன் றுள்ளம் புக்கு
வல்லிலான் முன்ன மெய்த புண்படு வழிச்செல் கோலின்
அல்லலாக் கின்வால். கேள்வ னாவியிற் சிறந்தா னன்றே. கஉஎ

## கண்ணகி துயரம்

அருவியிற் பெய்யுங் கண்ணீர். ஐயகோ வென்னுஞ் செவ்வாய்.
இருகையுந் தலையைத் தாக்கும். எரிபடு தளிரை யொப்ப
உருவம ருடம்பு வாடும். உளமினைந் தூச லாடும்.
மருமலர்க் குழன்மண் வீழ மங்கை வீழ்ந் தழுவாண் மாதோ.

கண்ணினை யிழந்தா ரொப்பக் கலங்குவாள். கணவ னன்றோ
பெண்ணினுக் காவி யென்பாள். பிழைபுரிந் தனனோ வென்பாள்.
எண்ணமொன் றியற்ற லொன்றென் றெணணினை கொல்லோ வென்பாள்.
வெண்ணெயம் பாவை தீயான் மெலிதலின் மெலிவாண் மின்னாள்.

நின்றிடின் முனிவை மென்பூ நெடுங்குழற் கணியி னோவை.
சென்றிடின் வெகுள்வை. எல்லாஞ் செப்புவை. மறைப்பா யல்லை.
குன்றையும் நடித்த தோகை மயிலையுங் கூறி னாயே.
இன்றெவண் சென்றாய்? ஏனீ மறைத்தனை யிதனை யென்பாள்.

பேதையென் றிகழ்ந்தா யல்லை. பிழைத்தனை யென்றா யல்லை.
காதலிற் கலந்த வந்நாள் கைவிடே னென்ற வேந்தே!
போதமர் அமளி மீது புரிந்துட னுறங்கிக் கங்குற்
பாதியிற் சூதி னீத்துப் படர்வதோ முறைமை யென்பாள். க௩க

---

கஉஎ. இகுளையர்—தோழியர். கோலின்—அம்பைப்போல.

கஉஅ. மருமலர்க்குழல்—மணமுடைய மலரை முடித்த கூந்தல்.

க௩0. முனிவை—வெகுளுவாய். மென்பூ நெடுங்குழற் கணியின் நோவை என்றது மென்பூவும் பாரமாதல் கருதி. "அனிச்சப்பூ கால்களையாள் பெய்தாள் நுசுப்பிற்கு, நல்ல படாஅ பறை" என்ற கருத்தைக் காணக.

க௩க. பிழைத்தனை—பிழைசெய்தாய். போதுஅமர் அமளிமீது—மலர் பரப்பிய படுக்கை மேலே. கங்குல் பாதி—நள்ளிரவு.

கண்டவ ருளரோ வென்பாள். காடுபோய்க் காண்மி னென்பாள்.
தண்டலை சென்மி னென்பாள். தலைவவெங் ககன்று யென்பாள்.
பண்டரு பாடல் பாடும் பாணரும் புலவர் தாமும்
வண்டமிழ் வல்லாய்! காண வரினெவன் மொழிவே னென்பாள்.

நிலமகழ்ந் தொளிவார் கொல்லோ? நெடுவிசும் பேறுவார்கொல்?
விலங்குதண் கடலைக் காலால் வேந்தெனிற் கடப்பார் கொல்லோ?
இலங்தொறு முலகி னூடி னிருளைமீர் மறைவார் கொல்லோ?
அலமரற் குதவார் கேளி ராவரோ? சென்மி னென்பாள். கரு௫

பூவியல் பொய்கை போகிப் புனலிடை மூழ்கல் விட்டாள்
காவியங் கருங்கண் ணுக்குக் கரியமை யெழுதல் விட்டாள்
ஆவிசே ருணவை விட்டாள். அருந்துதீம் பாலும் விட்டாள்
ஓவியம் புகையுண் டாற்போன் றொளியிழந் துருகினைவாள்.

கோயிலெங் கணும்போய்த் தேடிக் குவளையங் கண்ணீர் சிந்தி
வாயிலை யடைந்து சென்ற மன்னவன் சுவட்டைக் காண்பாள்
தீயிடு மெழுகு போலச் சிதைந்தக முருகி யேகின்,
ஆயிடைத் தடுத்துச் சில்லோ ரரிவையை நடத்தி மீட்பார்.

செக்கர்வந் துயிரை வௌவும். திங்கள்செந் நெருப்பைப் பெய்யும்.
மிக்கெழுந் துடலிற் பாய்ந்து வெந்துய ரியற்றுந் தென்றல்.
பக்கம்வந் தருந்தென் றாட்டும் பாலுநஞ் சாகும். பாரில்
ஒக்கலிற் சிறந்தான் மன்னன் வெறுத்தபி னுதவு வார்யார்?

கண்ணினுக் கினிய நங்கை கண்ணகி யென்பார் பல்லோர்.
பெண்ணருங் கலமே யென்பார். பெரும்புகழ் படைத்தா ளென்பார்.
அண்ணலைப் படைத்துப் பின்னை யவளையும் படைத்த தெய்வம்
மண்ணிடை மணஞ்செய் வித்து மறித்தெவன் பிரித்த தென்பார்.

மன்னவ னில்லா நாடு மழையிலாப் பயிரா மென்பார்;
அன்னையில் சேயா மென்பார்; அன்பிலில் லறமா மென்பார்;
நன்மண மில்லாப் பூவாய்; ஞாயிறில் பகலா மென்பார்;
இன்னண மக்க ளெல்லா மியம்புவார்; மயங்கு வாரே. கரு௮

---

கரு௫. அகழ்ந்து - தோண்டி. விசும்பு—வானம். விலங்கு—குறுக்கிடு கின்ற. இருளைமீர்—தோழிமார்களே.

கரு௪. ஆவி—புகை. ஓவியம்—சித்திரம்.

கரு௬. செக்கர்—செவ்வானம். ஒக்கலிற் சிறந்தான்—சுற்றத்தாரில் சிறந்தவனாகிய கணவன்.

கருநெடுங் கண்கள் காட்டு காட்டெனக் கலுழும். காமர்
இருசெவி களுமம் மன்ன னின்னுரை கேட்டற் கெண்ணும்.
ஒருநொடிப் பொழுது நில்லா தோடிமுன் றேடு முள்ளம்.
மருளுறு மிரவுந் துஞ்சாள். நாள்சில கழித்தாண் மங்கை. கஙகூ

அன்பினுக் கவதி யுண்டோ? அரிவையர் தடையைத் தாண்டி
வன்கத விரண்டு கொண்ட மாமதில் வாயி றாண்டிக்
கன்னெடு மாட மோங்கு கவின்றெருத் தாண்டிக் காலால்
மின்னிடை வருந்த வெள்ளி வீதிபோற் றேடிச் சென்றாள்.

வம்பலர்க் குழலார் வாட மைந்தர்கள் வாட மங்கை
வெம்புனல் வடிக்குங் கண்ணால் வழியெலாம் வேந்தை நோக்கி
எம்பெரு மானே! வாடு மேழையேற் கிரங்கு கென்று
கொம்பிழந் துழலு மென்பூங் கொடியென நலிந்து சென்றாள்.

கொடிய கானிடையே சென்றாள். கொப்புளங் கொண்டு நோவும்
அடிகளோ நெறியிற் செல்லா. அங்குமிங் குந்தங் கொம்பாற்
செடிகளோ பற்றிப பற்றிச் சீலையைக் கிழிக்கும். செமபொன்
வடிவையும் வடுப்ப டுத்தும் வழிப்படு மானன் னாளை. கசஉ

மலர்சொரி மரங்காள் கூர்வேன் மன்னரைக் கண்டீர் கொல்லோ?
அலர்வுறு நறவுண் டாடும் வண்டுகா ளறிவீர் கொல்லோ?
புலவர்கள் புகழுங் கோவை யறிவீரோ புள்ளி மான்காள்?
கலவமென் மயில்காள் சொன்மின். கண்டிரோ? காட்டு வீரோ?

ஆடலுக் கிரங்கி மஞ்ஞைக் காடையை யளித்தார். பாணர்
பாடலுக் கிரங்கிப் பொன்னும் பணிகளு மளித்தார்; என்றன்
வாடலுக் கிரங்கா தெங்கோ மறைந்தனர். கிளிகா ளென்றன்
தேடலுக் கிரங்கி மெள்ளச் செப்புமின். தப்பன் மின்னே. கசச

வழியிடை நெடிது நின்றாய். மன்னர்வந் தனரோ கொன்றாய்!
ஒழிவிலா தழுவேன் வெமபி. ஓடிமுன் னுரைப்பாய் தும்பி!
முழவென முழங்குங் கொண்டான்! மொழிகவெம் மரசைக் கண்டால்
எழில்பெறு குயிலே! கூவே எங்கொளிந் தனன்சொல் காவே.

---

கஙகூ. கலுழும—அழும். காமா—அழகு. மருள்—மயககம. துஞ்சாள்—தூஙகாள்.

கச0. அவதி—எலலை மின்னிடை—மின்னலைப் போன்ற சிறிய இடை. வெள்ளிவீதி—வெள்ளி வீதியார் எனற நல்லிசைப் புலமை மெல்லியலாா. இவா தம் கணவனையிழந்து பலவிடங் களிலும் தேடியலைந்து வருந்திப் பாடியவர்.

கசக. வம்பு—மணம். குழலார்—கூந்தலையுடைய பெண்கள்.

கசங. நறவு—தேன். கசச. தப்பன்மின்—தவறிவிடாதீர்கள்.

கசரு. கொன்றாய்—கொன்றைமரமே. தும்பி—வண்டே. கொண்டான் மொழிக=கொண்டால்+மொழிக. கொண்டால்—மேகமே. காவே—சோலையே.

இறக்கையி னெஞ்ச மியாதொன் றெண்ணுமோ வதனைப் பின்னர்ப்
பிறக்கையிற் கொள்ளு மென்று பெரியவரு ரைப்பா ரையா.
அறத்திற முணர்ந்த வேந்தே! யிம்மையி னகன்றா யாயின்,
மறக்குவன் கொல்லோ? மாய்ந்து மறுமையு மணப்பே னுன்னை.

என்றுவேய்ங் குழல்யாழ் நாண விதழ்திறந் தலறி யேகி
மன்றலம் பொழிலிற் றேடி மலர்மிகு மடுவிற் றேடிச்
சென்றுசென் றலருந் தண்ணஞ் செழும்புன லாற்றிற் றேடிக்
குன்றரு கடர்ந்த கானங் குறுகினள் தேடி நின்றாள். கசஎ

பெண்ணினுக் கிரங்கா ரியாரே? பேய்களு மிரங்கு மென்ப.
புண்படு முள்ளங் கண்டும் புலம்பினின் றழைத்தல் கேட்டும்
உண்ணெகிழ்ந் தெதிர்நின் றோவா தோங்கறன் கரியபொள்ளற்
கண்ணெலா மருவி சிந்திக் கலுழுமே கதறு மேயோ. கசஅ

பரணன் வருகை

கள்ளமின் மனமுங் கண்டு கலந்துற வாடும் பண்பும்
அள்ளியள் ளிப்பொன் செல்வார்க் களிக்குநன் கொடையுங் கேட்டு
வள்ளலைக் காண வெண்ணி வழிநடந் தடுக்க றாண்டித்
தெள்ளிசைக் கலந்தோ ளேந்திச் சேர்ந்தனன் பரண னங்கே.

பரணன் கண்ணகியைக் காணல்

நரம்பிழுத் தியாழ்கை யேந்தி நலந்திகழ் சிரல்வாய் முல்லை
அரும்பவிழ் மாலைக் காகுஞ் செவ்வழி யமைத்த போழ்து
கருங்குழல் விரித்தோ ரன்னை கலுழ்ந்திடக் கண்டான்; சென்றான்.
வருந்துகின் றனைநீ யாவள்? மன்னவன் கிளையோ வென்றான்.

காந்தளாற் குவளைப் போதைத் துடைத்தனள்; கலுழ்ந்திந் நாட்டு
வேந்தருக் குறவே மல்லேம்; விரும்பியெம் போல்வா ளோடு
தீந்தமிழ் வல்லாய்! கேண்மை கொண்டனர்; சென்றார். தேடிப்
போந்தனம்; யாண்டுங் காணேம் புரவலர் தம்மை யென்றாள்.

---

கசசு. மறக்குவன் கொல்லோ—மறப்பேனோ.

கசஅ. ஓவாது—ஒழியாது. ஓங்கல்—மலை. பொள்ளல் கண்—உள் துளையையுடைய இடம்.

கசகூ. அடுக்கல்—மலை. கலம்—யாழ். (காவினம் கலனே. புறம்: 206 உரை.)

கருO. சிரல்வாய் முல்லையரும்பு—சிச்சிலிக் குருவியின் அலகுபோன்ற முல்லை யரும்பு கலுழ்ந்திட—அழ.

கருக. காந்தளால குவளைப் போதைத் துடைத்தனள்—காந்தள் மலர் போன்ற கையினால் குவளை மலர்போன்ற கண்களைத் துடைத்தான்.

வாவியு ளாடு கின்றார் வரைவின்மா துடனென் பாரால்.
காவினு ளாடு கின்றா ரென்பரால். கவினார் குன்றம்
மேவியுற் றாடு கின்றா ரென்பரால். விளம்பக் கேட்டேம்.
பாவினில் வல்லாய்! கண்ணிற் பார்த்திலே மென்றாஞ் சொன்னாள். ௧௫௩

பண்ணினும் இனிய பாவைப் பவழவாய் மென்சொற் கேட்டங்(கு)
உண்ணெகிழ்ந் துருகி யாழை யுறையிடைப் புகுத்தி அன்னே !
மண்ணக முழுதுந் தேடி மன்னனைக் கொணர்வேன். கஙகுல்
நண்ணுமுன் மனைக்கே கென்று நடத்தினன் மடத்தி னாளை.

புலவரை விடுதல்

இருபெரும் புலவர் பாடு மிசையினில் வல்லார் கூடி
ஒருவர்செவ் வழிப்பண் பாட வொருவர்யாழ் பண்ணக் கேட்டே
அருநெறி படர்ந்த பேதை யழுதுபோய்ப் புலவீர் வேந்தை
வருநெறி யிடைக்கண் டீர்கொ லெனவினாய் வழியே சென்றான்.

கபிலன் காணல்

குணில்படு முரச மென்னக் குமுறிவீ ழருவி வெற்பின்
அணிமையி லமைந்த சீறூ ரடைந்துமுன் வாழ்த்தி யாங்கண்
பிணிதரு பசியை நீக்கப் பேகனைப் புகழ்ந்து பாடிக்*
கணவனை நாடு நங்கை கண்முனே கபிலன் சென்றான். ௧௫௫

மன்னனைப் பாடுந் தோறு மங்கைபின் சென்று கேட்பாள்.
அன்னவ னுருவும் பண்பு மகம்புகுந் துருவு கொண்டு
தன்முனே தோன்றக் கண்டு தலைவவந் தனையோ வென்று
பன்னுவாள்; பறறுவாள். பின் பாரக்கிலள்; பதைப்பாள்; செல்வாள். ௧௫௬

கற்பினுக் கணியைக் காதற் கரும்பினைக் கண்ணிற் காணும்
பொற்பின தாருவைப் பொன்னங் கொம்பினைப் புலவ னோக்கி
இற்பிறப் புணர்ந்தேன்; கற்பி னியல்பினை யுணர்ந்தேன்; வேந்தைப்
பற்பல விடத்துந் தேடிப் பார்த்திது பகர்வ னென்றான். ௧௫௭

௧௫௪. இருபெரும் புலவர் என்பார் பெருங்குன்றூர் கிழாரும், அரிசில் கிழாரும்.

௧௫௫ குணில்படு முரசமென்ன—கடிப்பினு லடிக்கப்பட்ட முரசத்தின் ஒலிபோல. ஆங்கண் - அவ்விடத்தில்.

* நெருநல், சுரனுழந்து வருந்திய வொக்கல பசிதலெனக்
குணில்பாய் முரசி னிரங்கு மருவி
நளியிருஞ் சிலம்பின் சீறூ ராங்கண்
வாயிற ரேன்றி வாழ்த்தி நின்று
நின்னுநின் மலையும் பாட வின்னு
திருதத கண்ணீ ரிறந்தல் செல்லாள்
முலையக நனைப்ப விம்மிக்
குழலினை வதுபோ லழுதனள் பெரிதே. (புறம். 143)

## கண்ணகி மீளல்

மானினை நிகர்க்குங் கண்ணாண் மாலையாங் கூற்றுக் கஞ்சி
ஆனின முன்னே செல்ல வாடைமு னீதல் கேட்டுக்
கானக மஞ்ஞை யொன்று காவலன் கோயி னாடித்
தானடை கொளல்போன் மீண்டு கோயிலைச் சார்ந்தாள்; சோர்ந்தாள்.

## கண்ணகி வருத்தம்

அமளியிற் கிடத்திச் சாந்த மப்புவார்; பாலுண் ணென்பார்;
தமரெலாங் கூடி நோவுந் தாள்களை வருடு வார்;மெய்
கமழலர் மீது தோயிற் கறுகுதல் கண்டு நைவார்;
நமதுதீ வினைகாண்; மேனி நலிந்தது; தளர்ந்த தென்பார். கடுகூ

நிலவுதீ யுமிழுங் கொல்லோ? நெடிதுகொல் கரிய கங்குல்?
புலவர்வந் தடைந்தார் கொல்லோ? புரவலர் மீண்டார் கொல்லோ?
நலமெனக் கொடுமை செய்யு நங்கைமீர்! சொன்மி னென்பாள்;
அலறுவாள்; அழுவாள்; நோவாள்; அமளியிற் புரள்வாள்; தேய்வாள்.

இடதுகண் டுடித்த தென்றே றிகுளைவந் துரைப்பாள்; வேறு
மடவர லரசீ! காக்கை வந்தது கரைந்த தென்பாள்;
அடர்பெருங் கானிற் றேடி யலைகிறார் புலவ ரென்றோர்
இடமகன் றிடம்போஞ் சில்லோ ரியமபக் கேட் டுரைப்பா பல்லோர். கசுக

## புலவர்கள் பேகனைத் தேடல்

(வேறு)

மயிலி னுடலுக் காடையை யளித்தருண் மன்னன்
குயிலு லாவுபூம் பொழிலையே யிடமெனக் கொள்வான்.
வெயிலு லாவுவெஞ் சுரஞ்செலா னெனப்புல மிக்கார்
துயிலு ணர்ந்தபின் றோன்றலைத் துருவுவா னெழுந்தார். கசுஉ

---

கடுஅ. கணணாண்யாலை = கண்ணாள் + மாலை. கானக மஞ்ஞை—காட்டு மயில்.

கடுகூ. அமளி—படுக்கை. சாந்தம்—சந்தனம். வருடுவார்—தடவுவார். அலாமீது—படுக்கையிற் பரப்பிய மலரின் மேலே.

கசு0. கங்குல்—இரவு. புலவர்—பரணா முதலியோர்.

கசுக. இகுளை—தோழி. மடவரல்—பெண.

கசுஉ. அளித்தருண் மன்னன் = அளித்தருள் + மன்னன். புலமிக்கார்—புலமை மிகுந்த புலவர்கள். துருவுவான்—தேடுதற்கு.

நீடு குன்றிடை நடந்தனர்; தேடினர்; நெளிந்தங்(கு)
ஓடு தண்புன லோடையைக் கடந்தனர்; ஓங்கு
காடு சென்றனர்; எதிர்வரு வார்களைக் கண்டு
பாடு வாரெலா மன்னனை வினவிமுன் படர்வார். ௧௬௩

மலைக டந்திவ ணுறைகிறான் மன்னவன். வருக;
அலைய லென்றிளங் குயின்மொழி யாளுரைத் தன்போ(டு)
இலைவி ரல்களா லொருபொழி லழைத்திட வினிய
கலைம லிந்தசெந் தமிழறி பரணன்முன் கண்டான். ௧௬௪

எழின்மி குந்தவப் பொழிலடைந் ததர்வழி யேக
வழிந டந்தலைந் தனையென மலர்க்கொடி விசிறும்.
அழிப சிக்கருங் கனிதரும்; நிழறரும் அடர்மா.
ஒழுகு தீம்புன லுதவிடும் புலவனுக் கோடை. ௧௬௫

பாம்ப றிந்திடும் பாம்பின காலை.நின் பண்பும்
ஓம்பி நீசெயுஞ் செயலையுங் கேட்டுணர்ந் தொருவன்
பூம்பொ ழிற்கணே புகுந்தன னெனச்சொலப் புகல்போல்
தேம்ப ழந்தினுஞ் செயயவாய்ப் பைங்கிளி செல்லும். ௧௬௬

## பரணன் யாழ் வாசித்தல்

சீறி யாழெடுத் திசைவலான் கைகளைச் செலுத்தி
ஏறு மூவெழு துறையினு மிசையெழ யிசைததான்
ஆறி லாதவோ ராலரு குறைதமி ழரசு
தேறு மாறிசை சென்றது செவிபபுலஞ் சிறிதே. ௧௬௭

## பேகன் யாழிசை கேட்டல்

குளிர்மென் பூநற வுண்டெழும் வண்டிசை கொல்லோ ?
தளிரை யொக்குமெய்த் தையல்வந் தழுமொலி தானோ ?
களவி னன்னகோட் டியாழிசை கொல்லெனக் கருதி
ஒளிரும் வேலினன் யாழிசை யேயென வுணர்ந்தான். ௧௬௮

---

௧௬௪. அலையல்—அலைந்து திரியாதே. இலைவிரல்—இலைகளாகிய விரல்கள்.

௧௬௫. அதர்வழி—வழியில். அடர்மா—அடர்ந்த மாமரம்.

௧௬௭. சீறியாழ் (=சிறுமை+யாழ்) சிறிய யாழ். செவிப்புலம்—செவியில்.

௧௬௮. களவினன்ன கோட்டுயாழ்—களாப்பழம் போன்ற கருநிற முடைய கோட்டைக் கொண்ட யாழ். 'களங்கனியன்ன கருங் கோட்டுச் சீறியாழ்.' (புறம். 127, 145

## பேகன் பரணனிடம் வருதல்

கூர்ந்து கேட்டனன்; இசைநயங் கண்டனன்; குழைந்தான்;
தேர்ந்து தேர்ந்திசைத் திறமினி தெனமெலச் சென்றான்.
சார்ந்த வன்றனை மெலமெல விழுத்திசை தந்த(து).
ஊர்ந்தொ ளிந்துவா ழரவையு மிழுப்பதஃ தொன்றே. கசுகூ

எடுத்த தோள்களு மிலங்கணி மார்பமு முகமும்
உடுத்த வாடையு மரசெனப் புலவனுக் குணர்த்தத்
தொடுத்த பண்ணினைத் திறம்படச் சுவைபடத் தூண்டிக்
கடுத்த கள்ளுணுங் களியெனக் களித்திட முடித்தான். கஎ0

## பரணன் கூற்று

கொடையைக் கேட்டனன். குணங்களைக் கேட்டனன். கொள்ளும்
நடையைக் கேட்டனன். நல்லறங் கேட்டனன். நடந்தேன்
இடையி னங்கையைக் கண்டனன். ஈங்குனைக் கண்டேன்.
படையில் வல்லவ வணங்குவன் பார்புகழ் வேந்தே. கஎக

சிறைக டந்துதன் மெல்லடி கல்லுறத் திரிவாள்.
நிறைமி குந்தவள் காடெலாந் தேடுவ ளின்னே.
பிறையி னொண்ணுதற் கண்ணகி பிரிவுறு நீயிங்(கு)
உறைதல் கேட்டிடின் வருந்தியங் கிருப்பளோ வொருநாள் ?

விழிகள் கூறின. கூறிய தவண்மெலி மேனி.
மொழிகள் கூறின. கூறிய தொளிநிலா முகமும்.
குழலுங் கூறிய தரசநின் பிரிவினை. கூறும்
பழியி லாடனைப் பார்த்துளம் பதைத்திவண் படர்ந்தேன். கஎங

பொய்யி லன்பினள். புகைபடு வோவியம் போன்றாள்.
நெய்தன் மாமல ரிற்றிகழ் கண்களா னீரை
மெய்யெ லாம்வடித் தழுதழு தேங்குவாள். மெலிவாள்.
உய்யு மாறரு ளென்றரு ளாய்த்தொடை யுரைத்தான்.* கஎச

---

கஎ0. உடுத்த வாடை=உடுத்த+ஆடை. களியென—கள்ளுண்டு களித்தவனைப்போல.

கஎக. இடையில்—இடைவழியில்; இடுப்பில்லாத என்றுமாம்.

கஎஉ. சிறை: மதில் அகழ் நகர் முதலியன.

* அருளா யாகலோ கொடிதே யிருள்வரச்
சீறியாழ் செவ்வழி பண்ணி யாழநின்
காரெதிர் கானம் பாடினே மாக
நீனறு நெய்தலிற் பொலிந்த வுண்கண்
கலுழ்ந்துவா ரரிப்பனி பூணக நனைப்ப
இனைத லானா ளாக விளையோய்

தன்னை நொந்தனன். தலைகுனிந் தனன்.உரை சாற்றான்.
இன்னி சைக்குரு கசுணமா பறையொலிக் கிரங்கிப்
புன்க ணெய்தலிற் புரவல னிரங்கினன். போகான்.
என்னி கழ்ந்ததின்(று) எண்ணமொன்(று) அடைந்ததொன் றென்பான்.

## மூவர் வருகை

அன்ன காலையி லரசனைத் தேடியு மதரில்
முன்ன மேகிய பரணனைத் தேடியு மூவர்
பின்னு முன்னுமங் கடைந்தனர். கூடினர் பெரியோர்.
பொன்னுமுத்தமு மணிகளுங் கூடினற் புகழே. ௧௭௬

வருந்து மன்னவன் மகிழ்ந்தனன். வணங்கினர் முன்முன்.
இரும்புங் காந்தமு மியைந்தன போன்மன மியைந்தார்.
கரும்புங் கைத்திடக் களிப்புரை யாடினர். நெஞ்சம்
பொருந்தும் போதினி னின்பமும் புகழ்ச்சியும் புகுமே.

## அறிமுகப் படுத்தல்

அரச கேள்.இவன் கபிலன்;என் னண்பன் இவ் வறிஞன்
கரிய கல்கெழு பெரியகுன் றூர்கிழான் காமர்
அரிசி லூர்கிழா னவனென வுரைத்தனன் பரணன்.
பரிசில் வேண்டிவந் தனமென மூவரும் பகர்வார். ௧௭௮

## மூவரும் வேண்டிக்கோள்ளுதல்

இல்லென் றுயலை யெனுமிசை படைத்தனை இறைவ
நல்லெ ழின்மயிற் காடைநல் கினை.ஒரு நங்கை
அல்ல லுற்றனைக் காணுவா னலைகுவள். அழுவள்
செல்லல் வேண்டினந் தேரிலென் றுரைத்தனர் செய்யுள்.†

---

கிளையை மன்னெங கேள்வெய் யோற்கென
யாந்தற் றொழுதனம் வினவக் காந்தள்
முகைபுரை விரலிற் கண்ணீர் துடையா
யாமவன் கிளைஞரே மல்லேங் கேளினி
எம்போ லொருத்தி நலனயந் தென்றும்
வரூஉ மென்ப வயங்குபுகழ்ப் பேகன்
ஒல்லென வொலிக்குந் தேரொடு
முல்லை வேலி நல்லூ ரானே. (புறம். 144)

'௧௭௬. மூவர் - கபிலர், பெருங்குன்றூர்கிழார், அரிசில்கிழா ரென்பார்.

௧௭௯. †'அரிமதர் மழைக்க ணம்மா வரிவை
நெய்யொடு துறந்த மையிருங் கூந்தல்
மண்ணுறு மணியின் மாசற மண்ணிப்

## பாணன் வேண்டுதல்

நன்று நன்றிசை யென்றுநீ எனக்குமுன் னவின்றாய்
சென்று மீளுவ லெனின்விடு வாயலை செம்மால்.
இன்று வேண்டுமெம் பரிசிலுந் தேர்மிசை யேறல்
என்று பின்னரு மடத்தகை மொழிந்தன னிசைஞன்.*

## பேகன் எண்ணம்

ஒருவரல்லர்; இங்குரைப்பவர் நால்வரென் றுணர்ந்தான்.
பெருமை மிக்கவர் பொய்யுரை யாரெனல் பிழையோ?
அருமை யேயரு மையிவர் மனத்தெழு மன்பு.
விரிம லர்க்குழற் கண்ணகி வேண்டினள் போலும். ௧௮௧

கல்லெ லாமலைந் தழுதனள் போலுமக் கற்பாள்.
இல்லு ளேயழு தண்டுடுத் திருந்திலள். புலவர்.
சொல்லெ லாமவ டுயரையு நிறையையுந் துலக்கும்.
முல்லை சூடுமம் மொய்குழன் முதிர்ந்தகற் பினளே. ௧௮௨

நறவ மற்றிடின் மலரினை நாடுமோ ஞிமிறு?
பறவை நாடுமோ நீரறு பொய்கையின பக்கல்?
அறினு மீனகன் றுய்யுமோ? அனையளே மனைவி
வறுமை வாழ்வினுங் கணவனை யகன்றுவாழ் வாளோ? ௧௮௩

---

புதுமலர் கஞல வின்று பெயரின்
அதுமனெம் பரிசி லாவியர் கோவே.
(பெருங்குன்றூர் கிழார் பாடியது புறம். 147)

பரிசில் நல்குவை யாயிற் குரிசினீ
நல்கா மையி னைவரச் சாஅய்
அருந்துய ருழக்குநின் றிருந்திழை யரிவை
கலிமயிற் கலாவங் கால்குவித் தன்ன
வொலிமென் கூந்தற் கமழ்புகை கொளீஇத்
தண்கமழ் கோதை புனைய
வண்பரி நெடுந்தேர் பூண்க மாவே.
(அரிசில்கிழார் பாடியது, புறம். 146)

கபிலர் பாடியதை 156-ம் பாட்டின் அடிக்குறிப்பைப் பார்க்க.

**௧௮0.** செம்மால்—பெருமையிற் சிறந்தவனே. இசைஞன்—பாணன்
*மடத்தகை..................................................
இஃதியா மிரந்த பரிசிலஃ திருளின்
இனமணி நெடுந்தே ரேறி
இன்னா துறைவி யரும்படர் களைமே. (புறம், 145)

**௧௮௩.** நறவம்—தேன். ஞிமிறு—வண்டு.

உருவி னல்லவள் உரைப்பதி னல்லவள். ஒன்றை
வருமு ணய்பவள். என்மனங் கவர்ந்தவள். மதிக்கும்
பெருமை மிக்கவள். நல்லறஞ் செய்பவள். பெண்மைக்
கிருநி லத்திடைக் கண்ணகிக் கொப்பவ ரிலரே. கஅச

குவளை யுண்கணுங் குளிர்மதி முகமுமென் கோலப்
பவழ வாயுமென் பஞ்செனுங் கால்களும் பார்க்கின்
உவமைக் கொப்புறு மோ? அழி வெய்துமோ? உணரேன்.
அவள்வ ருத்தநம் வருத்தமன் றோவென வழுவான். கஅரு

புலவர் சொல்லையும் பூவைதன் மெலிவையும் நினைந்து
நிலநி னைந்திட நெடிதழு தொன்றுமே நிகழ்த்தான்.
தலைவ வேறெனத் தண்டமிழ்ப் புலவர்கள் சாற்ற
உலக மேந்திய தோளினன் றேரினி லூர்ந்தான். கஅசு

உருண்டு சென்றது தேர் பக லவன்மறை வுற்றான்.
இருண்டி ருண்டிருள் பரந்தது. பொய்கையி லெங்குந்
தெருண்டு காவிகண் மலர்த்தின. செவ்விதழ்ச் செங்கை
சுருண்ட பாசடைத் தாமரை குவித்தன தொழுதே. கஅஎ

மண்டு தாமரை யிதழ்க்கத வடைத்திட வண்டர்
தண்ட மிழ்ச்செழும் பண்களைச் சாற்றுத றவிர்ந்து
தெண்டி ரைத்தட மகன்றுபோய்ச் சிறகுக ளொடுக்கிக்
கண்டு யின்மலர்க் காவுகள் கண்டனர் கடந்தார். கஅஅ

அன்றி லெங்கணுந் தன்பெடை யொடுபறந் தகலும்.
குன்றின் மானினந் தன்றுணை யொடுதுயில் கொள்ளும்.
நின்ற குன்றமு மரங்களும் வழிநினைப் பூட்டும்.
தென்ற மிழ்த்திறங் கண்டவர் கண்டுமுன் சென்றார். கஅகூ

## கண்ணகி தேர்காணல்

எண்ணு நெஞ்சினுக் ககப்படு மணியொலிக் கெழுந்து
கண்ணி ணைக்குவான் சென்றுசென் றில்லெனக் கலங்கும்
பெண்ண ணங்குமுன் கண்டபொய் யுருவெலாம் பிறழ்ந்தங்(கு)
உண்மை. யாயது போன்றதே ரடைந்ததொன் றுருண்டே.

---

கஅரு. குவளை யுண்கண்—குவளை மலர் போன்ற மையுண்ட கண்கள்.

கஅஎ. பாசடை=பசுமை+அடை. அடை—இலை.

கஅஅ. மண்டு—நெருங்கிய. தடம்—பொய்கை. கண்டுயின் மலர்= கண்+துயில்+மலர்.

ககூ0. ஒலி என்றது நினைவு மிகுதியால் ஒலிப்பது போன்றொலிக்கும் பொய்யொலியை. பிறழ்ந்து - மாறுகி.

## இருவரும் எதிரல்

குவளை மாமலர் மலர்ந்தன கோமகன் குன்றில்.
தவறி லாத்தள வரும்பின தையறு மரையில்.
துவளு பூங்கொடி தோளினிற் படர்ந்தது. தோன்றல்
அவல வெம்புன லூற்றினன்; போற்றினன்; அணைத்தான். கசுக

கள்ள மில்பெருங் காதலாற் காரிகை யுடம்பும்
வள்ளல் யாக்கையும் வடிவினி லொன்றுபட் டன. பின்
தெள்ளு தண்புன லும்புன லுந்தமிற் சேர்ந்தாங்(கு)
உள்ள மொன்றின; உணர்ச்சியு மொன்றின; உவந்தார். கசுஉ

ஊட லின்றெனி னுவகையு மில்லையால். உடம்பு
கூட லிற்சிறு மகிழ்ச்சியே; இத்துணை கொள்ளீர்.
ஏட லங்கலா யிருவிரு மனையக மெழுமின்.
நீடு வாழுக வென்றனர் புலவர்க ணிலத்தே. கசுங

## திங்களின் தோற்றம்

தலைவன் சென்றபின் றளர்ந்தெழில் கெடவிடர் தந்தேம்.
நிலவுங் கண்ணகி முகமுமொன் றெனமுன நினைந்த
மலரலங் கலான் புகழ்பெறு வாமென வரல்போல்
கலைநி றைந்ததண் கதிரவன் றோன்றினன் கங்குல். கசுச

பாலுண் டாரிலர்; இருவருங் களிப்புரை பகர்வார்.
மேலு ருண்டெழுந் தாடுவார்; மெல்லணை வீழார்.
காலு ளேந்திடு மெனப்பிடித் துறங்கிடக் கருதார்.
மாலுண் டாரெனப் பற்பல புரிகுவர் மாறே. கசுரு

ஒளிரும் வேலினன் மங்கையாங் கரும்பினையுண்டு
களிறு போன்றனன். காரிகை யெனுமலர்க் கள்ளுண்
டளியும் போன்றனன். அன்னவ ளணிகதிர்க் கையால்
ஒளியு வாமதி தீண்டிய வாம்பலை யொத்தாள். கசுசு

கசுக. குவளைமாமலர்—குவளை மலர் போன்ற கரிய கண்கள். குன்று—குன்றுபோன்ற தோள். கோமகன் குன்றில் குவளை மலர்ந்தன என்றது கண்ணகி கண்கள் பேகன் தோள்களைக் கண்டன என்றபடி. தளவு—முல்லையரும்பு போன்ற பல். தாமரையில் தளவு அரும்பலாவது முகத்தில் புன்னகை காணப்பட்டது என்றபடி. புன்னகை பேகனது எனினுமாம். பூஙகொடி—பூங்கொடி போன்ற கண்ணகி. தோளினிற் படர்தலாவது தோள்களைக் கட்டித் தழுவிக்கொள்ளுதல்.

## ஞாயிற்றின் தோற்றம்

கோழி கூவின. கூவின குயில்களுங் குருகும்.
யாழி சைத்தனர் மருதமாம் பண்ணினை யாழோர்.
தோழி மார்தொழக் காதலர் துயிலெழத் தொல்லை
ஆழி விட்டெழுந் தனன்கதி ரவன்புன லாடி. கசுஎ

## துயிலெழுச்சி

கன்ன லின்மொழிக் கண்ணகி நீண்டவக் கங்குல்
முன்னம் போன்றிலை; குறுகிய(து); என்றுமே முனிவோ(டு)
இன்னன் மாதருக் கியற்றுமோ வென்றெழுந் தகல,
மன்ன னுந்துயி லுணர்ந்தெழுந் தனன்மனம் வருந்தி. கசுஅ

## மக்கள் மகிழ்ச்சி

மக்க ணோக்கினர். அமைச்சர்க ணோக்கினர். மற்றை
ஒக்க ணோக்கினர். கண்ணிழுந் தடைந்தவ ரொத்தார்.
புக்கொ ளிந்தமன் னனைக்கொணர் புலவரைப் புகழ்ந்தார்.
தக்க மன்னனும் புகழ்ந்தனன் புலவரைச் சார்ந்தே. கசுகூ

## கோடை

பொன்கொ டுத்தனன். பூண்பல கொடுத்தனன் போக
நன்னெ டுங்கொடித் தேர்கொடுத் தனன். தனை நாடிக்
கன்னி லம்படர்ந் தலைந்ததற் குடைந்தனன். கற்றீர் !
இன்ன லெம்பொருட் டெய்தினிர்; பொறுக்கவென் றிரந்தான்.

தென்ற மிழ்ப்பெரும் புலவிர்கா ளெனைமனைச் சேர்த்தீர்.
மன்ற லங்குழற் கண்ணகி மனத்திடர் மாய்த்தீர்.
சென்ற கன்றிடி னென்றுமைக் காணுவேம். சிறந்த
நன்று ரைத்துத வுகவுட னிருந்தென நவின்றான். உ0க

## புலவர் கூற்று

கற்பைக் கண்டனம்; காதலைக் கண்டனம்; கலங்கும்
நிற்பைக் கண்டனம்; நிலமெலாங் கண்டனம்; நிரம்பு
பொற்பைக் கண்டனம்; போகுதேர் கண்டனம்; போற்றும்
அற்பைக் கண்டனம்; அரசியல் கண்டனம்; அகல்வேம். உ0உ

---

கசுகூ. மக்கணோக்கினர்=மக்கள்+நோக்கினர். ஒக்கல்—சுற்றத்தார்.

உ0உ. கலங்கும் நிற்பை—மனக்கலக்கத்தால் நிற்கும் நிலையை. அற்பு—அன்பு.

எனப்ப கர்ந்தனர் நால்வரும். இறைஞ்சின ரிறையை.
தனைப்ப ணிந்தசெந் தமிழ்ப்புல மிக்கவர் தம்மை
மனத்து றுந்துய ரொடுவழி விடுத்தனன் மன்னன்.
இனிக்குஞ் செந்தமிழ்ப் புலவரு மேகினர் நெறியே. ௨௦௩

பன்னெ டும்பக லகன்றபின் கண்ணகி பக்கல்
மன்னன் சேர்ந்துவாழ் வாழ்க்கையைக் காணுவான் மனைவி
தன்னு டன்பரணன் புறப்பட்டனன்; தாழ்ந்து
பொன்னு திர்த்துநீள் கொன்றைகள் நிழல்தரப் போனான். ௨௦௪

குன்றந் தாண்டினன்; நெடுவழி கடந்தனன்; கோயில்
முன்றில் சார்ந்தனன்; தமிழ்தெரி மன்னவன் முன்னஞ்
சென்று கைகுவித் தன்பொடு சென்னிசாய்த் திறைஞ்ச,
நன்று நன்றுநும் வரவென மன்னவ னவின்று, ௨௦௫

இருக்கை தந்தனன்; முகமலர்ந் தின்னுரை பகர்ந்தான்.
விருப்ப றுதகண் ணகியொடு வாழ்வதை விரித்தான்.
பொருப்புஞ் சோலையுங் கடந்துதன் னெடுநகர் போந்த
வருத்த நீங்கநல் லுணவருத் தினன்மன மகிழ்ந்தே. ௨௦௬

இரண்டு கண்களும் பொருள்களை இயைந்துகாண் பனபோல்
திரண்ட வேயன தோளியும் செம்மலுஞ் சேர்ந்து
முரண்ட விர்ந்தறஞ் செய்வன கண்டனன். முகமும்
தெருண்ட நெஞ்சமு மலர்ந்தனன் செந்தமிழ்ப் புலவன். ௨௦௭

அன்பி னல்வரு மின்பையு மாருயி ரெல்லாம்
இன்பு றும்வகை செலுத்துசெங் கோலையு மினிமை
மன்னு செந்தமிழ் வளர்த்தலின் சிறப்பையும் வகுத்துப்
பன்னி னன்பெரும் படையுடை யானுக்கப் பரணன். ௨௦௮

எடுத்து ரைத்தபல் பொருளையு மிருசெவி யாலும்
மடுத்தின் பெய்தினன்; மன்னவன் பொருளணி மணிகள்
கொடுத்த னன்; பரித் தேரளித் தான றுகுளப்பாத்
தொடுத்துப் பாவலன் எழுந்தனன் துணைவிதன் னோடே. ௨௦௯

அங்கி ருந்ததன் காதலிக் கணிகளை யணிந்து
மங்கை தன்னொடு மன்னவ னோவென மயங்கத்
துங்க வாம்பரித் தேர்மிசை யிவர்ந்தனன் றூயன்.
தங்க ளூர்செலத் தூண்டினன் கொய்யுளை தம்மை. ௨௧௦

---

௨௦௪. காணுவான்—காணும் பொருட்டு.
௨௦௬. பொருப்பு—மலை.
௨௦௭. வேயன—மூங்கில் போன்ற.
௨௦௯. மடுத்து—கேட்டு.

தூண்டு கொய்யுளை காலினிற் சென்றன. தோகாய்!
காண்டி; காண்டியென் றதர்படு பொருள்பல காட்டி
நீண்ட வெஞ்சுரஞ் சார்ந்தனன். நிழன்மரத் தொருபால்
பூண்ட மாவவிழ்த் திருந்தனன் மாதொடும் புலவன். ௨௧௧

இலங்கு பூணணி யிருவரை நோக்கினன். இவர்தங்
கலங்கள் வேளிரோ பாணரோ வென்றெமைக் கலக்கும்.
புலமிக் காரிவ ரியாரெனத் தெளிகுவ மெனப்போய்
இலம்ப டும்பசி யிரவல னியாவிர்நீ ரென்றான். ௨௧௨

இன்மை கூர்கடும் பொடுவரு மிரவல! பேகன்
மன்னன் பாற்செலு முன்பெலா நின்னினும் வறியேம்.
இன்ன மாயினேம் அன்னவன் பரிசில்பெற் றின்றே.
சென்மி னென்றவண் செப்பினன் பாணனுஞ் செய்யுள்.* ௨௧௩

பாணன் றன்னையப் பரணனங் காற்றிடைப் படுத்து
மாணி ழைத்தெரி வையொடு வாம்பரி முன்னம்
பூணு தேர்மிசை யேறினன். நெடுவழி போகி
ஆணு மாதரு மையுறத் தன்மனை யடைந்தான். ௨௧௪

### பாணன் பரிசில்பெறல்

(வேறு)

பரணனைக் கண்டவப் பாண னக்கொடுஞ்
சுரமகன் றொக்கலோ டேகிச் சூழ்தரு
அரண்புகுந் தகம்புகுந் தரசைக் கண்டனன்.
வரவறிந் தரும்பொருள் வழங்கி னானிறை. ௨௧௫

---

௨௧௧. காலினில்—காற்றைப்போல. காண்டி—காண்பாய். அதர்படு பொருள்—வழியிற் காணப்படும் மரஞ் செடி கொடி பறவை முதலியன.

௨௧௨. கலங்கள்—அணிகலன்கள். இரவலன்—இரக்கும் பாணன்.

௨௧௩. இன்மைகூர் கடும்பு—வறுமை மிகுந்த சுற்றத்தார்.

* பாணன் சூடிய பசும்பொற் றாமரை
மாணிழை விறலி மாலையொடு விளங்கக்
கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ
யூரீர் போலச் சுரத்திடை யிருந்தனிர்
யாரீ ரோவென வினவ லானாக்
காரென் னொக்கற் கடும்பசி யிரவல
வெல்வே லண்ணற் காணா வூங்கே
நின்னினும் புல்லியே மன்னே யினியே
இன்னே மாயினே மன்னே. (புறம்: 141)

௨௧௪. ஆற்றிடைப்படுத்து—வழியனுப்பி. ஐயுற—ஐயங்கொள்ள.

௨௧௫. சுரம்—பாலை நிலம். ஒக்கல்—சுற்றம். அகம்—அரண்மனை.

## பேகனின் பிற்கால வாழ்க்கை

இல்லவர்க் கீகுவன் ; இசைஞர்க் கீகுவன் ;
நல்லவர்க் கீகுவன் ; நற்ற மிழ்த்திறம்
வல்லவர்க் கீகுவன் ; மறவர்க் கீகுவன் ;
சொல்லுதற் கரிதரோ தோன்றல் வண்மையை. உகசு

பிறிதியன் மருந்திஞற் பிணியைப் போக்குவன்.
நறுநுத னங்கையா னண்ணு நோயையும்
பொறிகளி னவள்பொறி மருந்திற் போக்குவன்.
இறைவனு மிறைவியு மியைந்து வாழ்ந்தனர். உகஎ

ஈதலி னின்பமு மினிய செந்தமிழ்
ஓதலி னின்பமு முள்ள மொன்றிய
காதலி னின்பமுங் கண்ட காதலர்
ஏதமில் புதல்வரைப் பெற்றின் பெய்தினர். உகஅ

விண்ணுறு முவகையை விரும்பி மெய்யினுல்
மண்ணுறு மகிழ்ச்சியை வெறுத்து மாய்பவர்
நுண்ணுணர் வின்மையி னுகர்தற் கின்சுவை
வெண்ணெயை விடுத்துநெய்க் கலையும் வீணரே. உகசு

வள்ளுவ னருளிய வழியின் மாநிலத்(து)
உள்ளவர் மகிழுற வொளிநின் ரேங்குறப்
பிள்ளைதன் னலங்களைப் பேணு மன்னையிற்
கள்ளவி ழலங்கலான் காவல் செய்தனன். உஉ0

அறுசுவை யுண்டியு மறிஞர் கேண்மையும்
பெறலருஞ் செந்தமிழ் மொழியும் பேகனும்
உறவுகொள் சுற்றமு மெவர்க்கு முண்மையால்
பிறவியே நன்றென வெவரும் பேசுவார். உஉக

சிறந்தபல் லறங்களைச் செய்த சேயினிப்
பிறந்திற வாதநம் பிரானைச் சேர்கென
மறம்பெறு மன்னனை வானிற் சேர்த்தனள்
அறவடி வாந்தமி ழன்னை யன்பினே. உஉஉ

இணைபிரி யாதுட னிருக்கு மன்றிறன்
துணையிறந் தாற்பினு மின்பந் துய்க்குமோ ?
கணவன துயிர்செலக் கண்ட கண்ணகி
உணர்விழந் துடலுறந் தவனை யுற்றனள். உஉங

உஉ0. ஒளி—பெருமை. அலங்கலான்—மாலையணிந்த பேகன்.
உஉஉ. சேய்—குழந்தாய். மறம்—வீரம்.
உஉங. அன்றிறன் = அன்றில் + தன்—அன்றிற்பறவை தனது.

சூடலை யிழந்தன தொடையல். தோகையர்
ஆடலை யிழந்தன வணிகொண் மேடைகள்.
பாடலை யிழந்தன பண்கள். கண்களும்
நாடலை யிழந்தன நல்ல தொன்றுமே உ.உச

எண்ணில ரடைந்தனர் ; இரங்கி நின்றனர் ;
பெண்ணணங் குடம்பையும் பேகன் மெய்யையும்
கண்ணினிற் காண்டொறுங் கலுழ்ந்து சாம்புவர்.
நுண்ணுணர் வமைச்சரும் பிறரு நோவரால். உஉரு

இருவர்த முடம்பையு மிருநி லத்தினில்
ஒருவயிற் புதைத்தனர். உருவந் தீட்டிய
கருநெடுங் கல்லினை நட்டுக் கைதொழு(து)
உருகிநின் றிறைஞ்சினர் ; வாழ்த்து ரைத்தனர். உஉசு

(வேறு)

தோகைக் கன்று துகிலுவந் தீந்தசீர்ப்
பேகன் வாழ்வை யுரைத்தேன். பிரான்றனக்(கு)
ஆகு மிஃதென் றரவுநல் காடையீந்(து)
ஓகை கூரண் டிரன்வாழ் வுரைப்பனே. உஉஎ

ஆகச் செய்யுள் : கூசஎ

---

உஉஎ. தோகை—மயில். துகில்—ஆடை. ஓகை கூர்—மகிழ்ச்சி மிகக் கொண்ட.

# ௬௦. வள்ளல் ஆய் அண்டிரன் வரலாறு

## பொதியிலின் சிறப்பு

உருவமொன் றின்றி யெல்லா வுயிரொடுங் கலந்து பேணி
வருகையை நாடு வார்க்கு மலையுறை கடவுள் வைவேல்
முருகென வின்ப நல்கி முத்தமிழ்க் குறவு பூணுந்
திருமலி தென்ற றோன் றுஞ் செழும்புலம் பொதியி லாமே. ௧

## ஆய்குடியும் அண்டிரனும்

வடபுலத் திமய மென்னும் வலிமிகு பாரங் கொண்ட
கடலூறு நிலமா நாவாய் கவிழ்ந்திடா வண்ண மில்லார்க்(கு)
இடமுண வளிக்குஞ் செல்வ ராய்குடி யிலகுந் தெற்கே.
அடலூறு கடலந் தானை யாயதற் கரச னவான். ௨

## அண்டிரன் வாழ்க்கை

மின்னுரு யாக்கை வான வெண்மதி முகம்வேய் மென்றோள்
கொன்னுறு வைவேல் நீள்கண் கொடியிடை பவழஞ் செவ்வாய்
கன்னலின் மொழியா மென்னுங் காரிகை சிலரை வேட்டான்.
மன்னவ னெஞ்ச மானுன் ; மங்கையர் பொறிக ளானார். ௩

புகழெனக் கற்பா னல்லன் ; பொருபடை வெல்வா னல்லன் ;
பகருய றமா மென்று பாவலர்க் கீவா னல்லன் ;
முகமலர்ந் தெளிய னாகி முறைசெய்வா னல்லன் ; முன்னோர்
தகவுறு செயல்க ளென்று தானுமச் செயல்கள் செய்வான். ௪

பொதியிலாம் பெரிய செய்யிற் பொருளெனு மெருவிட் டன்பாம்
மதகுறு நன்னீர் பாய்ச்சி வடமொழிக் களைகள் கட்டு
முதிராசுவைத் தமிழ்ப்பைங் கூழை வளர்த்தனன். முதிர்ந்து பாவாங்
கதிர்தரு தோறுந் துய்த்துக் காவலன் களித்து வாழ்ந்தான். ௫

இறந்தனர் பிறந்தா ரெல்லாம்; இனிப்பிறந் திறப்பார். என்றும்
பிறந்திற வாத வொன்றே பிறப்பிறப் பியற்று மியார்க்கும்.
சிறந்தசெந் தமிழர் கண்ட சிவனலாற் றெய்வ மில்லென்(று)
அறந்திறம் பாத வேளா யவனடி தொழுது வாழ்வான். ௬

---

௧. வைவேல்—கூர்மையானவேல். முருகு—முருகன். உறவு—நட்பு.

௨. நாவாய்—மரக்கலம். இலகும்—விளங்கும். அடல்—வலிமை.

௩. வேய்—மூங்கில். கன்னல்—கரும்பு. பொறிகள்—ஐம்பொறிகள்.

௫. செய்—நன் செய். தமிழ்ப் பைங்கூழ்—தமிழாகிய பயிர்.

குடியெலா நெறியிற் செல்லக் குவளையங் கருங்க ணல்லார்
வடிவமார் கணவர் தங்கள் மனஞ்செலும் வழியிற் செல்லக்
கடிவன கடிந்து நீத்தார் கருத்திறை யிடத்தே செல்லப்
படிமிசைக் கவலை யின்றிப் படிறிலான் காக்கு நாளில், எ

ஆய் சோலைவளங் காணச் செல்லல்.

களிறெதிர் பிளிற மிக்குக் கருமுகி லுருமிப் பெய்த
துளியினில் வளர்ந்து நீண்ட சோலையுங் குன்றுங் காண்பான்
வளியென மருள வேகும் வாம்பரி யிவர்ந்து தோளில்
ஒளியிழை புரள வுந்தி யுவகையி னோடு சென்றான். அ

அருவரை யிழிந்து முல்லை யாயர்தந் தீம்பா லுண்டு
மருமலர்ப் போர்வை போர்த்து மணிகளைக் கரையி னெற்றிப்
பருநெடுங் கயலங் கண்ணாற் பழனநெற் பயிர்பார்த் தேகும்
பொருதிரை யாறுகண்டு புரவலன் மகிழ்ந்து சென்றான். கூ

காவினி னடந்து வண்ணக் கடிமல ரசைத்து லாவி
வாவிநல் லருவி யாடி மருங்கெலா மெல்ல வோடித்
தாவிமெய்க் கின்ப நல்குந் தன்னிளங் குழவி போல
மேவியின் பளிக்குந் தென்றன் மெய்யுற மெல்லச் சென்றான். ௧௦

மணியென மருட்டும் வண்டு மகிழ்ந்திசை பாட மௌவல்
அணிமலர் வள்ள மேந்தி யின்னற வருந்த நல்கும்.
கணிமலர்ந் தளிக்கும் பைம்பொன். கமுகுநன் முத்தம் வீசும்.
பணிபவர்க் களிக்கும் வள்ளல் பார்த்துவந் தகன்று சென்றான்.

அண்டிரன் வாழ்க ; எங்க ளருந்தமிழ் வாழ்க வென்று
பெண்டிரங் கூச லாடிப் பெருமகிழ் வடைதல் கண்டும்,
திண்டிறற் குறவ ரோடிச் சிறுத்தைபோல் விலங்கு தேடிக்
கண்டுயிர் கவர்தல் கண்டுங் களிப்பொடு வழியே செல்வான். ௧௨

குன்றுகள் கருக்கொண் டென்ற குருளைகொ லென்ன வேழஞ்
சென்றுசென் றுலவக் கண்டான் ; செழும்பழங் கண்டு வாழை
நின்றகல் விடைப்போய் வீழ்ந்த நெடுங்கைம்மா வொன்றுக் கோடித்
தன்றுணை கைதந் தின்ன றவிர்த்தல்கண் டுருகிச் செல்வான்.

---

எ. கடிவன கடிந்து—விலக்கவேண்டியவற்றை விலக்கி. நீத்தார்—துறவிகள். படிமிசை—உலகில். படிறு—வஞ்சகம்.

அ. கருமுகில்—கரிய மேகம். உருமி—இடித்து. வளியெனமருள—காற்று என்று மயங்குமபடி.

கூ. இழிந்து—இறங்கி. மலர்ப்போர்வை—மலராகிய போர்வை. கயலங்கண்—கயலாகிய கண்கள்.

௧௧. மலர்வள்ளம்—மலராகிய கிண்ணம். கணி—வேங்கை

௧௩. குருளைகொல் என்ன—குட்டிகளோ என்று ஐயங் கொண்டு. வேழம்—யானை. கைம்மா—யானை.

கன்றுகடுள்ளி யாடும். கலையின மகிழ்ந்து நாடும்.
குன்றெலா மரும்புங் காந்தள். குலமென வணுகும் பாந்தள்.
பன்றியுங் களிறுஞ் செல்லும். பகைத்திரும் புலிகள் கொல்லும்.
மன்றலை யளிக்கு முல்லை. வருடைவாய் மடுக்கும் புல்லை. கச

மழைமுகின் முரச மெற்றி வயங்குநீ ரருவிக் கையால்
கழையொளி முத்துங் கோட்டுக் கரியொளி முத்து மக்காள்
விழைவன கொண்மி னென்று விருப்பொடு கொடுக்குங்குன்றும்
வழைவளர் கவிரஞ் சேர்ந்தான் மன்னனோர் மருங்கு சார்ந்தான்.

நாகம் கலிங்கம் நல்கல்

வள்ளறன் வரவு கண்டு மறைந்துறை யரவ மொன்றோர்
ஒள்ளிழைக் கலிங்கந் தன்னை யொருவயின் வைத்து நீங்கக்
கள்ளவி ழலங்கன் மார்பன் கண்டுதன் பரியி ழிந்து
மெள்ளமு னணுகிப் பற்றி விரித்தனன் மேன்மை கண்டான். கசு

மென்மையி லாவி யொக்கும்; விளிம்பிழை பொன்னை யொக்கும்;
பன்மலர்ப் பொலிவு கண்ணைப் பறிக்குமால் பார்த்து வப்பான்.
இன்னுயிர் கவரும்பாந்தளிது தரற் கென்னை யென்றங்(கு)
உன்னினன் ; நடந்து மீண்டங் கொருவயி னிருந்தான் மன்னன்.

எனக்கெனக் கொடுத்த தேயோ? எனக்கிது கொடுத்த தாயின்
தனக்குமுன் செய்த நன்றென்? தன்கருத் துணர்ந்தி லேனால்.
மனக்கருத் தெதுவா னாலும் வனப்புறு கலிங்கந் தன்னை
எனைப்படைத் தளிக்குமண்ணற் கீவனென் றெழுந்து சென்றான்.

ஆலமர் செல்வர்க் காடையைச் சாத்தல்

விண்ணினின் றிழிதல் போல வெற்பினின் றிழியுந் தூய
தண்ணற லருவி யாடித் தளிர்மலர் பறித்து நீல
வண்ணநல் லாடை கொண்டம் மலையொரு மருங்கு மேவும்
எண்குணத் தண்ணன் முன்ன மேகினன் பொதியின் மன்னன்.

கச. கன்றுகடுள்ளி—கன்றுகள் + துள்ளி. வருடை—மலையாடு.

கரு. கழை—மூங்கில். கோடு—கொம்பு—விழைவன—விரும்புவன வற்றை. வழை—சுரபுன்னை. கவிரம்—ஒருமலை.

கசு. கலிங்கம்—ஆடை. அலங்கல்—மாலை.

கஎ. பன்மலர்ப் பொலிவு—அவ்வாடையில் வேலைப்பாடு தோன்ற நெய்த பல மலர்களின் தோற்றம். என்னை—என்ன காரணம்.

கஅ. வெற்பு—மலை. தண் அறல்—குளிர்ந்த நீர்.

தென்புல நோக்கிச் செய்ய திருமுக மலர்த்தி மக்கள்
தன்னுறு நெறியைக் கையின் சாடையா லுணர்த்தி யாலின்
நன்னிழ லமரு மண்ணற் காடையை நயந்து சாத்திப்
பொன்னடி யிணையில் வீழ்ந்து புரவல னெழுந்து நின்றான். ௨௦

(வேறு)

ஞாலம் படைத்தாய்; செஞ் ஞாயிற்றி னைப்படைத்தாய்;
சாலச் சிறந்த தவத்தி னியல்பு ரைப்பாய்.
சாலச் சிறந்த தவத்தி னியல்பு ரைக்கும்
ஆலமர் செல்வ!நின் னடியைப் பரவுதுமே ௨௧

மண்ணைப் படைத்தாய்;நன் மக்கடம் மைப்ப டைத்தாய்;
உண்மைத் தவத்தை யுலகுக் குணர்த்து வையால்.
உண்மைத் தவத்தை யுலகுக் குணர்த்தியநின்
தண்ணந் திருவடிச்செந் தாமரையைப் போற்றுதுமே ௨௨

உலகைப் படைத்தடியா ருய்யக்கல் லாலிருந்து
நலனைத் தருஞ்சிறந்த நன்னெறியைக் காட்டுவையால்.
நலனைத் தருஞ்சிறந்த நன்னெறியைக் காட்டியநின்
பொலந்தா மரையடியைப் புகழ்ந்து பரவுதுமே ௨௩

(வேறு)

என்றுரைத் துருகி நைந்தங் கிருவிழி களுநீர் சிந்தத்
தன்றுணைக் கைகள் கூப்பத் தலையினால் வணங்கி னான்;பின்
வென்றியந் தொடையன் மார்பன் விரைபரி யூர்ந்து கார்வந்(து)
ஒன்றுநீ ளருப்பஞ் சூழ்ந்த வுயர்நெடுங் கோயின் மீண்டான். ௨௪

பொன்னொடு களிறு மற்றும் புலவருக் குவந்து நல்கும்
மன்னவன் புகழ்மற் றன்னான் வளமலி நாட்டிற் றோன்றித்
தென்மொழி வழங்கு நன்னா டெங்கணுஞ் சென்று சென்று
பின்னருந் தளரா தேகிப் பரந்தது பிறநா டெங்கும். ௨௫

௨௦. தன்னுறுநெறி—தன்னை அடையுமவழி. கையின்சாடை—கைக்குறிப்பு. அஃதாவது சுட்டுவிரல் ஏனைவிரல்களினீங்கிப் பெருவிரலடியில் வளைந்து ஒன்றியிருத்தலைக் காட்டுங் குறிப்பு. அதனால் நெறியுணர்த்தலாவது மும்மலங்களோடு இயைந்து நிற்கும் உயிர் அவற்றினீங்குவதற்கு முதல்வனை வணங்க வேண்டுமென்பது. சுட்டுவிரல் உயிரையும் பெருவிரல் இறைவனையும் ஏனை மூவிரல்களும் மும்மலங்களையும் உணர்த்துவன. ஆலின்நல் நிழல்—கல்லாலின் நல்ல நிழல்.

௨௨. மக்கடம்மை = மக்கள் + தம்மை.

௨௪. தொடையல்—மாலை. அருப்பம்—மதில்.

## ஓடைகிழார் வருகை

உண்ணு மூணு மிலாத்துறை யூர்கிழான்
எண்சு வைத்தமி ழொன்ற னினிமைக்கே
மண்ணில் வாழ்பவன் வானையும் வேண்டலான்
எண்ணி னான்கொடை மன்ன ரிடஞ்செல. ௨௬

வருக வென்று மகிழ்ந்து கொடுப்பவன்
பொருபுண் மார்பினன் புன்னகை வாயினன்
அருண்மி குந்தவ னண்டிர னென்றனர்
பரிசில் பெற்ற பலரும் வருந்தொறும். ௨௭

கேட்ட வோடை கிழானெழுந் தான். கரும்
பாட்டு சாற்றி னடும்புகை காரெனப்
பாட்ட டக்கிக் குயில்புகும் பைம்பொழில்
நாட்டை மெல்ல நடந்து கடந்தனன். ௨௮

தெள்ள றற்கட் டெரிதரு நீழலைப்
புள்ளு லாவும் பொழிலெனக் கிள்ளைதன்
உள்ளத் தெண்ணி யுறும்வழி நாடுதீங்
கள்ள லர்க்குளக் காவினூ டேகினான். ௨௯

தீண்டி னின்பஞ் செறிதரு தென்றலும்
மாண்ட முத்தமு மாமலைச் சாந்தமும்
வேண்டு வார்க்கீந் திசைபெறு மேதகு
பாண்டி நாட்டை யடைந்தனன் பாவலன். ௩௦

சிவிகை யேறியுஞ் செல்பரி யுந்தியுங்
கவிகை யேந்தியுங் காரிகை யாரொடும்
உவகை யூட்டுஞ் சிறுவ ரொடுமடைந்(து)
அவர வர்கொண ரம்பொற் கயலிட்டு, ௩௧

---

௨௬. எண்சுவை—நகை அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்பன.

௨௮. கார் என—மேகம் என்று எண்ணி. நாடு—சோழநாடு.

௨௯. அறற்கண்—(குளத்திலுள்ள) நீரில். நீழல்—காவின் உருவம் படுதலால் நீரின் கீழே தோன்றும் நிழல். உறும்வழி—உள்ளே புகும் வழி. குளக்கா—குளத்தோடு கூடிய சோலை.

௩௦. தீண்டின்—உடம்பைத் தொடுமாயின். சாந்தம்—சந்தனம்.

௩௧. கவிகை—குடை. பொற்கயல்—பொன்னால் செய்யப்பட்ட மீன். பொற்கயலிட்டுக் குளித்தல் மரபு.

ஆடு வார்த மரவ மடக்கியார்த்(து)
ஓடு வையைகண் டாடி யுவந்தனன்.
நீடு மாட நெடுந்தெருக் கூடலின்
பீடெ லாங்கண்டு பின்னருஞ் சென்றனன் ௫௨

காவன் மன்னர் கடவுளர் பேருரு
மேவு தூண்கள் விழிக்கு விருந்திடும்
கோவி லெய்திச் சிவன்கழல் கும்பிட்டும்
பாவல் லார்மன்றம் பார்த்தும் படர்ந்தனன் ௫௩

அருவி வீழ மணிபரங் குன்றமர்
முருகன் றாமரைச் சேவடி முன்புபோய்ப்
பொருளெ மக்குப் புரவல னல்குமா(று)
அருள்செய் வாயென் றடிபணிந் தேகினன். ௫௪

மல்ல லம்பொழில் சூழ்ந்தவெண் மாடங்கொள்
வில்லி புத்தூர் விருப்பி னடைந்தனன்.
நல்லு டுக்கை நயந்துநெய் வாருறை
செல்வ வீதிகள் கண்டனன்; சென்றனன். ௫௫

பன்னெ டும்பகல் பார்த்தும் பகலவன்
பின்ன ருஞ்சென்று பார்க்கும் பெருமைசேர்
தென்னன் மேலைச் சிலம்பின் வளங்கண்டும்
நன்ன கர்கண்டு மெல்ல நடந்தனன். ௫௬

தண்பு னன்முகி றந்த தெனவெண்ணிக்
கண்ணு றும்புனற் காய்தலை தாங்கிநின்(று)
உண்ணென் றீயு முயர்தெங் கதரிடைப்
பண்ணு றுந்தமிழ்ப் பாவலன் போயினன். ௫௭

நெருங்கி வேண்டினு நீருங் கொடாதுளம்
வருந்த வெஞ்சொல் வழங்குங் கயவரில்
அருந்து நீருங் கொடாதடிக் கல்லல்செய்
சுரம்பு குந்து துயரடைந் தேகினன். ௫௮

---

௫௩. பாவல்லார் மன்றம்— பாவில் வல்லமையுடைய புலவர்கள் சங்கம்.

௫௪. புரவலன் — அரசனாகிய அண்டிரன்.

௫௭. கண்ணுறும் புனல் காய்—கண்கள் பொருந்திய நீரையுடைய இளநீர். அதர்—வழி.

௫௮. சுரம்—பாலை நிலம்.

மன்னன் போல்வன மன்னுயி ரென்பவே.
நன்னி ழன்முனை நல்கிப் பசிகெட
இன்சு வைக்கனி யீந்த தொருபொழில்
அன்ன வன்களைப் பாறி யகன்றனன். ௩௯

துன்று சோலைத் துலங்குபன் மாமலர்
மன்ற னல்கி வருகென முன்னுறுந்
தென்றல் கண்டுஞ் செழும்பொதி யம்மெனுங்
குன்றங் கண்டுமுள் ளங்களி கூர்ந்தனன். ௪0

கூர்மை கொண்டவெண் கோட்டுவே ழங்களைப்
பார்வை கொண்டுகைப் பற்றிப் பணித்தணி
மார்பி லங்குவேன் மைந்த ரிவர்ந்துதம்
ஊர்தி ரும்பல் கண் டோகையி னேகினன். ௪௧

ஒண்மு கத்தினைத் தாமரை யொக்கும்.நம்
கண்ணி கர்க்குமிக் காவி யெனவிளம்
பெண்க ளூறியற் றுமற் பெருமடு
நண்ணி யாடுதல் கண்டு நடந்தனன். ௪௨

கூடி யின்னல் கொடுத்த வறுமையே
ஆடு நீள்கொடி யாய்குடி காண்டுமால்.
ஓடி நீசென் றொளியென்று கூறியே
பீடு மிக்க பெரும்புல வன்சென்றான். ௪௩

காணுங் கண்ணைக் கவருமில் லஞ்செறி
மாணு லாவு மறுகுகொ ளாய்குடி
வேண வாவொடு புக்கனன். மென்மெலச்
சேணி லாமதிற் கோயிலைச் சேர்ந்தனன். ௪௪

## ஓடைகிழார் ஆயைக் காணல்

எண்ண முற்று மினிய தமிழினுங்
கண்ணெ லாம்வருங் கற்றவர் தம்மினும்
புண்ணு லாமெய்யைப் போரினும் போக்கிறை
தெண்ணி லாமுகங் கண்டுமுன் சென்றனன். ௪௫

---

௪௧. வேழம்—யானை. பார்வை—பழக்கப்பட்ட விலங்கு.

௪௨. கண்ணிகர்க்கும் = கண் + நிகர்க்கும். ஊறு—துன்பம். மடு—குளம். ஆடுதல்—நீராடுதல்.

௪௪. மாண்—பெருமை. மறுகு—வீதி. சேண்—உயரம்.

௪௫. போக்கு இறை—போக்குகின்ற அரசனாகிய அண்டிரன்,

விருப்பி ளைக்கினன் வேந்தன். வருகவிங்(கு)
இருக்க வென்றனன். போயங் கிருந்துதன்
வருத்த நீங்கினன். மன்னவ வாழ்கவென்(று)
உரைத்து நின்றன ளோடை கிழானரோ. சசு

செந்த மிழ்மொழி தேர்ந்திரப் பாரைவிட்(டு)
எந்தம் மைப்பழிக் கும்பிறர்க் கீவது
சந்த னத்தைத் தடிந்திகழ் காஞ்சிரை
அந்தி லாக்குத லாமென் றறைந்தனன். சஎ

வாடி யொக்கல் வருந்து திறனையுங்
கூடிக் கள்வ ரியற்று குறையையுந்
தேடி வந்த நினைப்பையுஞ் சேர்த்தவண்
பாடி னாியாழ்ப் பத்தரொ னுந்தொடை* சஅ

ஆய் பரிசிலளித்தல்

வள்ளல் கேட்டு வருந்தினன்; பல்பொருள்
அள்ளி யள்ளி யளித்தன னன்பொடு.
வெள்ளை நீண்மருப் பேந்துகை வேழமுங்
கொள்ளு கென்று கொடுக்கக்கொண் டான்கிழான்.

ஒன்றி நின்றிட ருய்த்த மிடித்தெவ்வை
வென்றி மன்னன் பொருளொனும் வேலினாற்
கொன்றனன்;வென்றி கொண்டனன். யாவரே
என்றுந் தீமை புரிவார்க் கிரங்குவார்? ரு௦

ஓடைகிழார் மீளுதல்

வேந்து போல விளங்கணி பூண்டுகோ(டு)
ஏந்து வேழ மிவர்ந்திலஞ் சென்றுதற்
சேர்ந்த வொக்கலொ டுண்டு திளைத்தனன்;
ஓர்ந்தெண் டீஞ்சுவை யுண்டு முறைந்தனன். ருக

---

சஎ. தடிந்து—வெட்டி. அந்தில்—அவ்விடத்தில்.

சஅ. ஒக்கல்—சுற்றத்தார். தொடை—பாட்டை.

*யாழ்ப்பத்தர்ப் புறங்கடுப்ப
............ ...............
குரங்கன்னபுன் குறுங்கூளியர்
பரந்தலைக்கும பகையொன் றென்கோ
ஆஅங்கு
எனைப்பகையு மறியுனயை்
எனக்கருதிப் பெயரேத்தி
வாயார நின் னிசைநம்பிச்

## கொங்கர் படையெடுப்பு

(வேறு)

ஓங்கு செய்ப்பைங் கூழை யேரொன் றுள்ள வன்காத் தோம்பலின்
தீங்கு றாம னாட்டை மன்னன் செம்மையோடு காத்தநாள்
வேங்கை கோங்கு நீடு கோடு வெற்பெ லாம கன்றுவந்(து)
ஆங்கோ ரூரைக் கொங்கர் கூட்ட மார்த்துக் கொள்ளை கொண்டதே.

செங்கை கூப்பி நின்று சில்லோர் சேர னேவு பற்பல
கொங்கர் வேலும் வாளு மேந்தி யூரைக் கொள்ளை கொள்கிறார்.
எங்க ளூற கற்று தற்கி ரங்க மன்ன வின்றெனத்
தங்கள் கண்ணி னீர்சொ ரிந்து தாழ்ந்து நொந்து சாற்றினார். ௫௩

## ஆய் புறப்பாடு

சொன்ன மாற்றங் கேட்ட வன்று துண்ணெ னத்தன் றானையை
முன்ன டத்தி வாம்ப ரிக்க ணேகி னானம் மொய்ம்பினான்.
கன்னெ றிக்க ணார்த்தெ ழுந்து காலி னான டந்துபோய்
ஒன்ன லர்க ளின்னல் செய்யு மூரைத் தானை சேர்ந்ததே. ௫௪

கொள்ளை கொண்டு வில்லெ றிந்து கொல்லு கொங்க ரைக்கண்டு
வள்ள லண்டி ரன்றன் றானை மண்டி முன்னெ திர்ந்தது.
துள்ளி வீரர் முன்ன மேகித் தோள்க டட்டி யார்த்தனர்
கள்ள நெஞ்சக் கொங்கர் தாமுங் கன்றி நின்ற னர்மனோ. ௫௫

---

சுடர்சுட்ட சுரத்தேறி
இவண்வந்த பெருநசையேம்
எமக்கீவோர் பிறாக்கீவோர்
பிறக்கீவோர் தமக்கீபவென
அனைததுரைத்தனன் யானாக
நினக்கொத்தது நீநாடி
நல்கினை விடுமதி பரிசில் அல்கலும்
தண்புனல் வாயிற் றுறையூர் முன்றுறை
நுண்பல மணலினு மேத்தி
உண்குவம் பெருமநீ நல்கிய வளனே. (புறம், 136.)

௫௦. ஒன்றி—கூடி. மிடித்தெவ்வை—வறுமையாகிய பகையை.

௫௨. பைங்கூழ்—பயிர். எர் ஒன்றுள்ளவன்—ஓரேருழவன்.

௫௩. ஊறு—துன்பம். மன்ன இன்று இரங்குக என இயைக்க.

௫௪. மொய்ம்பினான்—வலிமையுடையவன். கன்னெறி=கல்+நெறி.

௫௫. தோள்தட்டி=தோள்கள்+தட்டி. கன்றி—வெகுண்டு.

போர்

கொட்டு சங்க மார்க்க வெங்குங் கொல்லுசெல்லென் றேகுவார்.
வெட்டு வேமென் றேகு வார்முன் வில்லி லம்பி னைப்பரால்.
சுட்டு வாரைக் கிட்டு வார் முன் சூழு வாரை வெட்டுவார்.
பட்டு வீழு வாரை நண்ணிப் பற்றி யுண்ணும் பாற்றினம். ருசு

அதிர்ந்து வாளி தம்முண் முட்டும்;ஆவி யுண்ணும் பற்பல.
எதிர்ந்து வாள்கண் முட்டும்;முன்ன மேகி யாவி யுண்ணுமால்.
முதிர்ந்த வெஞ்சி னத்த வெஃக முட்டும்;மார்பின் மூழ்குமால்.
சிதைந்து கால்கை சென்னி வீழும் செந்நீர் கொண்டு செல்லுமே.

அம்பு கக்குங் கைவில். மண்டி யார்த்தெ திர்க்குந் தெவ்வர்மெய்ச்
செம்புண் கக்கு மோய்வி லாது செந்நீர். கண்க டகக்கும்.
வம்பு கக்கு மாலை மார்பர் வாய்ச்சொ லாலென் னன்றென
வெம்பி யம்பும் வேலு முய்த்து வீரங் காட்டு வாரரோ. ருஅ

அண்டிரன் போர்க்களம் புகுதல்

தேங்கொள் புன்னை மாலை வள்ளல் செங்க ளம்பு குந்துவில்
வாங்கி யெய்யும் வாளி பற்பன் மார்பூ டோடி மாய்த்தவே.
நீங்கி நீங்கி நேர லின்றி நேரலர்க ளியாவரும்
வேங்கை பாய்ந்த மானி னத்தின் வேல்பெயர்த்திட்டோடினார் †

வேல்பெ யர்த்திட் டோடி னாரைவேந்தன் கண்டி கழ்ந்திலன்.
கால்பெ யர்த்து முன்ன டந்து கால மாரி பெய்துளி
போல்வெ குண்டார் மேலம் புய்த்த போர்த்தி றம்பு கழ்ந்திலன்.
சால்பெ னுங்கு ணங்கொ டென்றுந் தன்க டன்மு டிப்பவன். சுO

ஓடி னாரை நோக்கி யாழி யொப்ப வீரர் நக்கனர்.
கூடி னார்.அங் கண்டி ரன்சீர் கூறி னாரவ் வூரினர்.
தோடி லங்கு வண்ண மாலை சூட்டி யார்த்து வாழ்த்தினர்.
நாடி யங்குச் செல்கை கூறி நம்பி தன்னூர் மீண்டனன். சுக

மீளல்

பல்லி யங்க றங்க யாழ்செய் பாணர் மன்னன் சீர்சொல
வெல்க வெங்கண் மன்னன் வாள்வில் வேந்தன் சீரு யர்கென
மல்லன் மாட வீதி நின்று மாத ரொண்பூத் தூவநீள்
வில்லெ டுத்த மள்ள ரோடு வேந்தன் கோயில் சேர்ந்தனன். சுஉ

---

ருசு. சுட்டுவாரை—இவரை என்றுதாம் கருதியவரை. பட்டு—மாய்ந்து. பாற்றினம்—பருந்துக்கூட்டம்.
ருஎ. தம்முண் முட்டும்=தம்முள்+முட்டும். செந்நீர்—இரத்தம்.
ருஅ. செம்புண் ஓய்விலாது செந்நீர் கக்கும் என இயைக்க. வம்பு—மணம்.
ருக, †அக. ஆம் பாட்டின் அடிக் குறிப்பை நோக்குக.

முடமோசியார் வருகை

முத்தமிழ் வல்லவன் முடவன் மோசிநல்
நத்தைநா கொடுமணம் நயக்குஞ் செய்யிடைக்
கத்தலைக் காவிரி பாயக் கன்னலை
ஒத்துநெல் வளருறை யூரில் வாழ்பவன். ௬௩

புலவருக் குதவவும் பொருது வெல்லவும்
நலநனி புரிந்துதென் னாட்டை யாளவும்
மலர்தலை யுலகிடைப் பிறந்த மன்னனை
மெலமெல நடந்துபோய்க் காண வேட்டனன். ௬௪

ஓவிய வல்லுந ருணர்ந்து தீட்டரும்
காவிரி பாய்தரு கழனிக் காட்சியைப்
பாவலன் கண்களிற் பார்த்து நெஞ்சிடை
மேவிய மகிழ்ச்சியின் மெல்லச் சென்றனன். ௬௫

கண்ணுறும் புலவர்தங் கருத்தை யீர்த்தவர்
பண்ணுறு தொடைப்பரி பாடல் பெற்றிசை
மண்ணக மெங்கணும் பரப்பும் வையைபாய்
தண்பணைப் பாண்டிய நாடு தாண்டினன். ௬௬

பொன்னிலே மண்டிரன் போன்ற ளிப்பதற்(கு)
இன்கனி யுண்ணுகென் றீயு மாமரம்.
நன்கனி வாழைகள் வணங்கி நல்குமால்.
முன்னுதிர்த் தனபலா முதிர்ந்த தீஞ்சுளை. ௬௭

ஆடவர்க் குயிர்பொரு ளாமன் னாயயல்
நாடுசென் றவரினு நண்ணி னாரலர்;
காடெலாந் தளவுகா ரென்னும்; காணெனும்
ஏடலர்க் குழலிசொற் கேட்டிற் றேகினான். ௬௮

அரிவையர் போன்றுள வன்னந் தன்னையும்
மருமலர்க் கொடியையு மயில்க டம்மையும்
பொருசிலை மறவர்கள் போன்று போம்பல
செருவிடை தம்மையுங் கண்டு சென்றனன். ௬௯

௬௩. நாகு—பெண் நத்தை. கன்னல்—கரும்பு.

௬௫. கழனி—வயல்.

௬௬. தண்பணை—குளிர்ந்த வயல்.

௬௯. பொருசிலை—போர்செய்யும் வில்லையுடைய. செருவிடை—போர்விடை.

ஆடுகின் றவர்களுக் கருவி வீழ்த்தியும்
சூடுகின் றவர்க்கலர் தொடைக்கு நல்கியும்
நாடுகின் றவர்க்குணு நறவ நல்கியும்
பீடுறு பொதியிலாம் பெருங்கல் கண்டனன். எ௦

தீங்கனி நறவமுந் தேனு முண்டுதோள்
வீங்கிய கானவர் வேங்கை நீழலின்
பாங்கெலாம் பாடிநின் றாடப பார்த்தவன்
நீங்கியந் நினைப்பொடு நெறியி னேகினன். எக

பழமென முசுக்கலை பலவி னாற்றிய
முழவினைத் தட்டவம் முழக்கங் கேட்டதன்
நிழலுறை யனம்வெரீஇ நீங்கி யாயிடை
உழல்வது கண்டுளத் துன்னி யேகினான். எ௨

கரிகளோ டெதிர்வரு வாரைக் கண்டனன் ;
பொருள்பெறப் பற்பலர் போகக் கண்டனன் ;
அருளினன் வேளென வறையக் கேட்டனன் ;
பெருமகிழ் வடைந்தனன் பின்னுஞ் சென்றனன். எ௩

ஆய்குடி யடைந்தனன் ; அகழி சூழ்மதில்
வாயிலை யெய்தினன் ; மன்னன் வைகுறும்
கோயிலி னுழைந்தனன் ; கொடுத்தங் கின்புறுந்
தூயனைக் கண்டுமுன் றொழுது சார்ந்தனன். எ௪

மருமலர்த் தொடைபுனை மார்பின் மன்னவன்
இருவென விருக்கைதந் திருத்தி யையநின்
வருகையின் றுவகையை வழங்கும். வந்தநின்
பருவர லகலப்பல் பகறங் கென்றனன். எ௫

அருள்விழி கண்டனன் ; அடன்மெய் கண்டனன் ;
பொருண்மொழி கண்டனன் ; பொருபுண் கண்டனன் ;
தருதடங் கைகளுந் தாளுங் கண்டனன் ;
கருதெண முடித்தனன் ; களித்தெ ழுந்தனன். எ௬

---

எ௦. தொடை—மாலை. நறவம்—தேன். பெருங்கல்—பெரியமலை.

எ௨. முசுக்கலை—குரங்கு. நாற்றிய—தொங்கவிட்ட. ஆயிடை—அவ்விடத்தில்.

எ௫. பருவரல்—நடந்துவந்த வருத்தம். பகறங்கு = பகல் + தங்கு.

நெடுமருப் படுகரி வேண்டி னின்றிலேன்.
கடுநடைப் பரிபெறல் கருதி லேன். இசை
படுநினை நோக்குவான் படர்ந்த னன்னெனுக்
கொடுவரி யெனுந்தொடை தொடுத்துக் கூறினன்.* எஎ

கொடுப்பதே கடனெனக் கொண்ட வண்டிரன்
தொடுத்தசெந் தமிழினைச் சுவைத்த னன்பினர்
அடுத்தவன் கருத்தென்? இன் றளித்தி லேமெனின்
வடுப்படு மெனப்பல வழங்கி னனரோ. எஅ

வள்ளறன் கொடைக்கொரு வரம்பு மின்றுகொல்?
உள்ளுறு நினைப்பினை யுரைத்த பின்னருங்
கொள்ளெனக் கொடுத்தனன் கொள்க லேனெனத்
தள்ளுத றவறெனத் தனக்கு ளெண்ணினன். எசு

பன்னெடு நாட்களைப் பாழ்ப டுத்தினேன்.
என்னுளங் கெடுக; தூர்ந் திடுக காதென
முன்னுளென் னுந்தொடை† மொழிந்து மோசிசெம்
பொன்முத லனைத்தையுங் கொண்டு போற்றினன். அ0

---

எஎ. இசைபடுநினை—புகழ்மிகுந்த உன்னை.

* கொடுவரி வழங்குங் கோடுயர் நெடுவரை
..........................................
புகழ்சால் சிறப்பினின் னல்லிசை யுள்ளி
வந்தனெ னெந்தை யானே யென்றும்
மன்றுபடு பரிசிலர்க் காணிற் கன்றொடு
கறையடி யானை யிரியல் போக்கும்
மலைகெழு நாடன் மாவே ளாஅய்
களிறு மன்றே மாவு மன்றே
..................................
காண்டல் வேண்டிய வளவை வேண்டார்
உறுமுரண் கடந்த வாற்றல்
பொதுமீக் கூற்றத்து நாடுகிழ வோயே. (புறம், 135.)

எசு. வள்ளறன் = வள்ளல் + தன். தள்ளுதறவறு = தள்ளுதல் + தவறு.

அ0. † முன்னுள்ளு வோனைப் பின்னுள்ளி னேனே
ஆழ்கென் னுள்ளம் போழ்கென் னாவே
பாழூர்க் கிணற்றிற் றூர்கவென் செவியே
..........................................
வடதிசை யதுவே வான்றோ யிமயம்
தென்றிசை யாய்குடி யின்றாயிற்
பிறழ்வது மன்னோவிம் மலர்தலை யுலகே. (புறம், 132.)

உளங்களித் தடைபவர்க் குதவும் போதெலாம்
வளங்கரி யொடுதரக் கண்டு மன்னகூற்(கு)
இளம்பிடி யொன்றுபத் தீனு மோவெனு
விளங்கெனுந் தமிழ்த் தொடை* விளம்பி னனவன். ௮௧

## ஞாயிற்றின் மறைவு

கொங்கர்தம் பகைவன்பல் கோடி வேழமீந்(து)
இங்கிசை கொள்வனல். இன்னு முண்டுகொல் ?
தங்கிட மெவையெனத் தனித்து நாடல்போல்
பொங்கழற் கதிரவன் பொருப்பி வர்ந்தனன். ௮௨

நிறைதரு மீனின நிலவக் கண்டனன்.
இறைவனல் கியகரிக் கிவையொப் பாகுமோ ?
குறைவென வுரைத்தனன் குறியெ னுந்தொடை†
துறைமுழு துணர்ந்தவன் றாயன் மோசியே. ௮௩

## ஞாயிற்றின் தோற்றம்

பல்கதிர்க் கணைகளாற் பரந்து தங்கிய
வல்லிருட் பகையினை வென்று வான்வரும்
எல்லிளம் பருதியை யெழுந்து கண்டனன்
நல்லிசைத் தமிழ்த்தொடை நவிலு நாவினன். ௮௪

---

௮௧. *விளங்குமணிக் கொடும்பூ ணாஅய் நின்னாட்
டிளம்பிடி யொருசூல் பத்தீ னும்மோ
நின்னுநின் மலையும் பாடி வருநர்க்கு
இன்முகங் கரவா துவந்துநீ யளித்த
அண்ணல் யானை எண்ணிற் கொங்கர்க்
குடகட லோட்டிய ஞான்றைத்
தலைப்பெயாத் திட்ட வேலினும் பலவே. (புறம், 130.)

௮௩. † குறியிறைக் குரம்பைக் குறவர் மாக்கள்
..........................................
ஆஅ யணடிரன் அடுபோ ரண்ணல்
இரவலர்க் கீத்த யானையிற் கரவின்று
வான மீன்பல பூப்பி னானது
ஒருவழிக் கருவழி யின்றிப்
பெருவெள் ளென்னிற் பிழையாது மன்னே, (புறம், 129.)

௮௪. எல்லிளம் பருதி—ஒளி பொருந்திய இளஞாயிறு.

திண்ணிருட் பகையினை வென்ற செங்கதிர்
அண்ணலை யாண்மையி னிகர்ப்பை. அங்ஙனம்
வண்மையி னிகர்ப்பைகொ லென்று மற்றொரு
தண்ணறுந் தமிழ்த்தொடை சாற்றி னானரோ.* ௮௫

அண்டிர னறத்தையு மாணா மாற்றையுந்
தண்டலை வளனையுஞ் சார்ந்த வூரையுங்
கொண்டறுஞ் சுங்கருங் கோட்டு வெற்பையுங்
கண்டவண் பல்பகல் களித்து வாழ்ந்தனன். ௮௬

அயிலுறு வேலின னண்டி ரன்வயின்
பயிறொறு மவனுடைப் பண்பு செந்தமிழ்
உயர்தொடை போன்றுபே ருவகை யூட்டலின்
நயமிகு பாவல னட்டு வாழ்ந்தனன். ௮௭

குட்டுவன் றன்னொடு கூடி வாழுவன்
மட்டலர் மாலையன் வள்ள றன்னுடை
ஒட்டிய கிளைஞரோ டொன்றி வாழுவன்
பெட்டடை புலவரைக் கண்டு பேசுவான். ௮௮

மன்னவ னண்டிரன்; வண்மை மிக்கவன்;
அன்னவ னாய்குடி யறங்க ளோங்கிடம்
என்னுமிக் கருத்தினா லியைந்து முன்புறை
தன்னுறை யூரையும் வெறுத்துத தங்கினான். ௮௯

அறமிது; வுறுபயன் மறுமைக் காமெனும்
முறைமையை யாய்நினை யாமன் முந்தையோர்
நெறியெனத் தருகொடை நினைந்திம் மையெனும்†
மறுவறு தமிழ்த்தொடை மகிழ்ந்து பாடினான். ௯௦

---

௮௫. செங்கதிர்—சிவந்த கதிர்களையுடைய ஞாயிறு. ஞாயிறு : விளி. வண்மை—கொடை.

* கழறொடி யாஅய் அண்டிரன் போல
வண்மையு முடையையோ ஞாயிறு
கொன்விளங் குதியால் விசும்பி னானே. (புறம், 374)

௮௮. குட்டுவன்—குட்டுவன் கீரன் என்னும் புலவன். மட்டு—தேன். பெட்டு—விரும்பி. நட்டவர்—நண்பர்.

௯௦. உறுபயன்—நேரும் பயன். மறுவறு—குற்றமற்ற.

† இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்
அறவிலை வணிகன் ஆயலன் பிறரும்
சான்றோர் சென்ற நெறியென
ஆங்குப்பட் டன்றவன் கைவண் மையே (புறம், 134)

அளந்திட லின்மையி னுய்தன் மாளிகை
வளங்குறைந் திருப்பினும் வசைகொள் பல்பொருள்
விளங்குமன் னவரரண் மலையின் மேலெனக்
களங்கனித் தொடையையுங் கவினப் பாடினன் * ௬௧

முடமோசியார் மலைவளங் காணல்

(வேறு)

அங்கொருநாண் முடமோசி யணிமிகுதென்
பொதியிலையு மருகு நீண்ட
மங்குலுறங் கும்பொழிலின் வளத்தினையுங்
காணவெண்ணி வழியே போனான்.
தெங்குநெடும் பலவுமுயர் தேமாவு
நிழலுதவச் சென்று சென்று
வெங்கதிரின் வெயிலுழையாக் குயிலுழையும்
பொழிலுழைந்து விருப்பிற் சென்றான். ௬௨

வழிநடந்து பொழிலுழைந்து வருமொருத்தி
கண்டரசன் வழங்கு வான்கொல்?
மொழியென, மெல் லியலிளொடு மன்றவெனு.†
மின்றமிழ்ப்பா மொழிந்து வைவேல்
விழிவிறலி பகைஞர்களுக் கரியனுமக்
கெளியவனெம் வேந்தன் வேளாய் ;
மழைமுகிலைக் கண்டமயின் மானநட
வெனவுரைத்து வழியே சென்றான். ௬௩

---

௬௧. * களங்கனி யன்ன........................
..........................................
ஈகை யரிய இழையணி மகளிரொடு
சாயின் றென்ப ஆஅய் கோயில்
சுவைக்கினி தாகிய குய்யுடை யடிசில்
பிறர்க்கீ வின்றித் தம்வயி றருத்தி
உரைசா லோங்கு புகழொரீஇய
முரைசுகெழு செல்வர் நகர்போ லாதே. (புறம், 127)

௬௩. † மெல்லியல் விறலிநீ நல்லிசை செவியிற்
கேட்பி னல்லது காண்பறி யலையே
காண்டல் வேண்டினை யாயின் மாண்டநின்
விரைவளர் கூந்தல் வரைவளி யுளரக்
கலவ மஞ்ஞையிற் காண்வர வியலி
மாரி யன்ன வண்கைத்
தேர்வே ளாயைக் காணிய சென்மே. (புறம், 133)
மன்றப் பலவின் ... ...
கழன்றொடி யாஅய் மழைதவழ் பொதியில்
ஆடுமகள் குறுகி னல்லது
பீடுகெழு மன்னர் குறுகலோ வரிதே. (புறம், 128)

மல்லிகையைச் சுமந்தொருபான் வளர்குறிஞ்சி
நிற்கும். ஒரு மருங்கு வேங்கை
முல்லைநெடுங் கொடிசுமக்கும். பாதிரியுஞ்
சண்பகமு முருகு யிர்க்கும்.
செல்வமிகு நல்லவரிற் பல்கனிகள்
வருவார்க்குத் தேமா நல்கும்.
மெல்லிதழ்ப்பூ மணங்கவர்ந்து கடலலையி
னடைபயின்று விசிறுந் தென்றல். கச

கடிமலர்மென் கொடிநடிக்க வொருமருங்கு
கருவிளைகள் காணும். பூவின்
பொடியணிந்து நிறந்திரிந்த கருவண்டு
பெடைமருளப் போகும். பூத்த
கொடிதொடுத்த கழையிவர்ந்து கூத்தரென
விளையாடுங் குரங்கு. கோட்டு
நெடுமடுவிற் கைதைமலர் நிழல்கண்டு
கயன்மருண்டு நீந்தி யோடும். கரு

முதிர்தினையின் குரல்கவர்ந்து மடமானு
நெடுஞ்செவிகொண் முயலுந் தின்னும்.
வெதிரினிளந் தளிர்கவர்ந்து வேழத்தி
னிளங்கன்று விரும்பி யுண்ணும்.
கதிருமிழ்முத் தம்புதைந்த நிலமகழ்ந்து
கிழங்குண்ணுங் கரிய கேழல்.
அதிரருவிப் புனலருந்தி மரநிழலிற்
கண்வளரு மாணும் பெண்ணும். கசு

கால்கொடுபோங் குன்றெனவுங் கைகொடுபோங்
கல்லெனவுங் கரியுங் கன்றும்
பால்புரைவெண் மருப்புடைய களிற்றினொடு
வழியெங்கும் படர்தல் கண்டு
சாலவிறும் பூதுற்றுய் தந்தனவோ
புலவரைப்போற் றமிழா லன்னோன்
மால்வரையைப் பாடினதோ காடுமென
மழைக்கணப்பா மொழிந்தான் மாதோ.* கஎ

---

கச. முருகுயிர்க்கும்—மணத்தை வெளியிடும்.
கரு. கடிமலர்—மணமுடைய மலர் கழை—மூங்கில்.
கசு. குரல்—கதிர். வெதிர்—மூங்கில். கேழல்—பன்றி.
கஎ. கால்கொடு—கால்கொண்டு. இறும்பூது—வியப்பு.

*மழைக்கணஞ் சேக்கு மாமலைக் கிழவன்
வழைப்பூங் கண்ணி வாய்வா ளண்டிரன்
குன்றம் பாடின கொல்லோ
களிறுமிக வுடையவிக் கவின்பெறு காடே. (புறம், 131)

அகிலொடுசந் தனங்குறைத்தங் கழற்படுத்து
புகையினையு மதிர்ந்து நண்ணும்
முகிலினையுஞ் சுமந்துயிர்க ளனைத்தினுக்கும்
வெயிலகற்று முதிய வெற்பு
புகழ்பெறுவெண் குடைநிழற்றும் புரவலனு
மண்டிரன்போற் பொலிதனோக்கி
அகமகிழ்ந்து நடந்தணுகி யதனழகும்
விழுமருவி யழகுங் கண்டான். ௯௮

ஆங்கொருசார் சருகருந்தி யருந்தவஞ்செய்
வார்தமையு மடைகாற் றுண்டு
மூங்கையென வுரையடக்கித் தவமுஞற்று
வார்தமையு முதல்வன் றன்னைத்
தூங்குபவர் போலிருந்து தூங்காமற்
கண்டின்பந் துய்த்துத் தொல்லை
நீங்கரிய கட்டகற்று மறிவரையுங்
கண்டிறைஞ்சி நெறியே போனான். ௯௯

அளந்தறியாப் பல்வளனு மாவியுறு
மோவியம்போ லணியிற் றோன்றக்
களங்கமறு கட்பொறியா லுட்புறநெஞ்
சக்கிழியிற் கவினும் பற்பல்
தெளிந்தநிழ லோவியங்க டிருத்தமுற
வெடுத்துமெலத் திரும்பி னான்.பின்
வளம்பெருகு பொழினுழைந்து வந்தவழி
யேநடந்து மகிழ்ந்தூர் மீண்டான். ௧00

இன்றமிழ்த்தீஞ் சுவையுணர்வான் ; இலங்கிலைவேன்
மன்னவனுக் கெடுத்துச் சொல்வான் ;
வென்றியையுங் கொடையினையுந் தொடுத்திசைப்பான் ;
இசைத்திருவில் வேந்தர் தம்பாற்
சென்றுதொடை சொலல் விட்டான் ; தன்றுணைவி
மக்களொடு சேர்ந்து வாழ்வான் ;
மன்றலந்தார் மன்னவனுக் குறுதுணையாய்
முடமோசி வாழ்ந்தான் மாதோ. ௧0௧

---

௯௮. குறைத்து—வெட்டி. அழற்படுத்து—எரிக்கின்ற. புரவலன்—அண்டிரன்.

௯௯. ஒருசார்—ஒருபக்கம். மூங்கை—ஊமை.

௧00. கட்பொறி—கண்ணாகிய நிழற்படமெடுக்கும் பொறி. நெஞ்சக்கிழி—மனமாகிய உருவம் பதியுந்தட்டு. நிழலோவியம்—நிழற்படம்.

௧0௧. இசைத்திரு—இசைச் செல்வம். இல்வேந்தர்—இல்லாத அரசர்.

## ஆயின் பிற்கால வாழ்க்கை

(வேறு)

இடர்வரு முன்ன நீக்கி யினியவை பலவு மாக்கிக்
குடியெலாம் புகழ நாட்டைக் குறள்சொலு நெறியிற் காப்பான்.
துடியிடைத் தோகை மாதர் தோணலந் நுகர்ந்தும் பெற்ற
வடிவமர் மக்க ளின்ப வாழ்க்கையைக் கண்டும் வாழ்வான். கoஉ

புலவரோ டிருந்து மன்னன் பொருளிலக் கணநன் காய்வான்.
நிலமர விலங்கு கால மக்கடந் நெஞ்ச வாழ்க்கைக்
கலைபல காணக் கண்டு களிப்பன். அக்கலையைக் காட்டும்
இலகுபல் லிலக்கி யங்கண் டின்பநன் கடைவான் பின்பே. கoங

பழுமர நாடிக் காணும் பறவைகள் போலக் கற்றோர்
தொழுதகை யானை நாடி வருந்தொறுஞ் சுவையூ றூட்டி
அழிபசி யகற்றித் தேரு மணிநடைப் பரியு மூரும்
செழுமைசால் வயலு நாடுஞ் செல்வமு நல்கி வாழ்வான். கoச

ஞாலமு முடம்பு மாகா. நமர்களுந் துணைவ ராகார்.
ஆலமர் கடவுள் செய்ய வடிகளே துணையா மென்று
காலையு மாலைப் போதுங் காவலன் கோயில் போவான்.
கோலமார் வலக்கை காட்டுங் குறிப்பினை மனத்துட் கொள்வான்.

இன்னணம் வாழு நாளி லிரக்கமில் கூற்றம் வந்து
மன்னவ னுயிரை வெளவி வண்டமிழ்த் தாய்முன் சேர்க்க
அன்னவ ளழைத்து வானத் தார்ப்பெழச் சென்றி யார்க்கும்
முன்னவ னிடத்தே சேர்த்தாள். நல்கினன் முடிவி லின்பம். கoசு

## மோசி துயரம்

இரவலர்க் கில்லை யென்னு தீந்திசை கொண்ட வள்ளல்
அரசரை வென்று போரி லரும்புகழ் படைத்த வேளாய்
வருதல்கண் டுவகை கொண்டு வானுல கத்தார் கொட்டும்
முரசொலி கேட்டுத் திண்மை டெனுந்தொடை மொழிந்தான் மோசி. *

கoஉ. துடியிடை—உடுக்கைபோலும் இடை. தோகை—மயில்.

கoங. ஆய்வான்—ஆராய்வான். இலகு—விளங்குகின்ற.

கoச. பழுமரம்—பழுத்த பழங்களையுடையமரம்.

கoரு. ஆகா—துணையாகமாட்டா.

கoஎ. *திண்டே ரிரவலர்க் கீத்த தண்டார்
அண்டிரன் வருஉ மென்ன வொண்டொடி
வச்சிரத் தடக்கை நெடியோன் கோயிலுட்
போர்ப்புறு முரசங் கறங்க
ஆர்ப்பெழுந் தன்றால் விசும்பி னானே. (புறம், 241)

## மனைவியர் மாய்வு

இருமினிங் கிந்நாண் மீள்வ னென்றுபோர்க் கேகியன்றே
வரினுமெய் மெலிந்து வாடு மனைவியர் வாழ்வர் கொல்லோ?
உருவம ருடலில் வீழ்ந்து வீழ்ந்தழு தருகித் தாழும்
எரியுறு மயிலின் மாழ்கி யுடலுறந் திறைபின் போனார். ௧0௮

## மக்கள் துயரம்

புனலுகுத் தழாதார் யாரே? புலம்பிநின் றிரங்கார் யாரே?
மனமுடைந் துருகார் யாரே? கூற்றினை வையார் யாரே?
இனமெலாங் கூடிக் கூடி யிணைந்திணைந் தழுவார்; மாழ்கும்
அனமென நடந்து நோக்கி யரிவைய ரழுது நைவார். ௧0௯

வீடுக ளெங்குங் காயோ டரிசியும் வேகவில்லை.
நாடுறு கருணை சாறு நறுஞ்சுவை கொள்ள வில்லை.
ஆடுவா ராடி னாரில் அணிசெய்வா ரணிசெய் தாரில்.
வாடிய பசியி னாரு மகார்களு முண்டா ரில்லை. ௧௧0

அழுகுர றெருவு தோறு மகந்தொறு மெழுந்த(து) யாழில்
எழுகுர லெழுந்த தில்லை. தண்ணுமை யெழுந்த தில்லை.
குழலிசை யெழுந்த தில்லை. கூறுபாட் டெழுந்த தில்லை.
விழவொலி யெழுந்த தில்லை. வெந்துய ரெழுந்த தெங்கும். ௧௧௧

வள்ளறன் னுடலோ டன்னான் மனைவிய ருடலுங் கொண்டு
கள்ளியங் காட்டுக் கேகிக் கமழ்விற கீமத் தேற்றி
ஒள்ளழ லுறுத்துக் கண்ணீ ருகுத்தனர்; வருந்தினார்; பொன்
கொள்கெனக் கொடுத்தா னுக்குக் குறைவறக் கடன்முடித்தார்.

காணுமுன் மகிழ்வான் மன்னே. கரிபரி கொடுப்பான் மன்னே.
பூணணி கொடுப்பான் மன்னே. புலவர்தம் புக்கின் மன்னே.
வாணெடுங் கண்ணா ரோடு வானுல கடைந்தா னென்று
பாணரும் புலவர் தாமும் படர்ந்தனர் தம்மூர் நாடி. ௧௧௩

---

௧0௮. மாழ்கி—வருந்தி.

௧௧0. கருணை—பொரிக்கறி.

௧௧௧. குரறெருவு—குரல்+தெருவு.

## குட்டுவன் கீரனார் துயரம்

மட்டல ரலங்கன் மார்பன் மன்னவன் மாயக் கண்டான்.
நெட்டுயிர்த் தவன்மேல் வீழ்ந்து நெடுங்கணார் மாயக் கண்டான்.
சுட்டழ லுறுத்தக் கண்டான் புலவர்தஞ் சோர்வு கண்டான்.
குட்டுவன் கீர னாடு நடைத்தொடை கூறி நைந்தான்* ககச

உயர்முடிப் பொதிய மேகிக் கல்லெடுத் துருவு மன்னார்
பெயரையும் பொறித்து நட்டுப் பீலியு மலருஞ் சூட்டித்
துயருறு சுற்றத் தாருங் குடிகளுஞ் சூழ்ந்து நின்று
நயமிகு செயலை யெண்ணி வணங்கினர் நாடி மாதோ. ககரு

புள்ளினம் பாடி யாடும் பொழின்மிகு பொதியி லாண்ட
வள்ளலா யண்டி ரன்றன் வாழ்க்கையை யுரைத்தேன். தன்னை
உள்ளியூர் வாரா தார்க்கு முவகையின் மணிப்பூ ணீந்த
நள்ளிமன் னவன்றன் வாழ்வை நயந்தியா னவில லுற்றேன்.

ஆகச் செய்யுள் · க௦௫௬

---

ககச. * ஆடுநடைப் புரவியுங் களிறுந் தேரும்
வாடா யாணர் நாடு மூரும்
பாடுநர்க் கருகா ஆஅ யண்டிரன்
கோடேந் தல்குற் குறுந்தொடி மகளிரொடு
கால னென்னுங் கண்ணிலி யுய்ப்ப
மேலோ ருலக மெய்தின னெனாஅப்
பொத்த வரையுட் போழ்வாய்க் கூகை
சுட்டுக் குவியெனச் செத்தோர்ப் பயிரும்
கள்ளியம் பறந்தலை யொருசிறை யல்கி
ஒள்ளெரி நைப்ப உடம்பு மாய்ந்தது
புல்லென் கண்ணர் புரவலர்க் காணாது
கல்லென் சுற்றமொடு கையழிந்து புலவர்
வாடிய பசிய ராகிப்பிறர்
நாடுபடு செலவின ராயின ரினியே. (புறம், 240)

ககரு. பொழில்—சோலை. உள்ளி—நினைத்து.

# ௭. வள்ளல் நள்ளி வரலாறு

## தோட்டிமலைச் சிறப்பு

பொழியவரு முகிலொலியும் பொருகளிற்றின் பிளிற்றொலியும்
விழுமருவிப் புனலொலியும் வேட்டுவர்வேட் டத்தொலியும்
ஒழிவறமா றுறவொலிக்குந் தோட்டியெனு முயர்மலையின்
எழிலையெவர் காணவல்லார்? இயம்பவல்லார்? எழுதவல்லார்?

நீரருந்து வானடைந்த நினைப்பிழந்து மானுமதன்
ஏரியைந்த விளங்கன்று மிருந்துமகிழ் வொடுகேட்கக்
காரியைந்த காவிமலர்க் கள்ளுண்டு கருவண்டு
சீரியைந்த செவ்வழிப்பண் செப்புசெழுஞ் சுனையுடைத்தே. ௨

இருப்பதனுக் கிடமுமுணற் கின்சுவைநீ ருங்கொடுத்து
நெருக்கமுறத் தமைவளர்க்கு நன்றியெணி நெடுங்கிளையாற்
செருக்கொடுவிண் ணிடைத்திரியுஞ் செங்கதிரின் வெயிறடுத்து
மருக்கிளர்பூ நிழறனக்கு வழங்குபல மரமுடைத்தே. ௩

செம்பொனணி கலனணிந்து சீர்படச்சிற் றடிபெயர்த்துத்
தம்பினிசைக் கும்வரிக்குத் தகநடிக்குந் தையலர்போற்
கொம்பரிடைக் குயில்பாட நடிக்குமலர்க் கொடிகளையும்
வெம்புலியின் விளங்குகணி வீயுறுகல் லையுமுடைத்தே. ௪

மடியொழித்து வளம்படைத்த மாந்தரைப்போல் வலிமிகுதம்
அடிகளினுங் கிளைகளினு மருங்கனிகொள் பலவினையும்
முடிமுதலெங் கணும்பொலம்பூண் முடித்தவவர் மகளிரைப்போற்
கடியுறுபொன் மலர்விரிக்குங் கடுக்கைகணி யையுமுடைத்தே.

புள்ளணுகா வகைகவணாற் புனங்காக்குமா திசைக்குந்
தெள்ளிசையைத் தெரிந்துகொளச் செவிகொடுக்குங் கிளிகளையுங்
கொள்ளைகொலை யிரவகற்றிக் குளிர்தளிர்புல் கனியருந்தித்
துள்ளியினத் தொடுதிரியுந் துலங்குகலை யையுமுடைத்தே. ௬

---

௧. களிறு—யானை. எழில்—அழகு

௨. அருந்துவான்—குடிப்பதற்கு. ஏர்—அழகு.

௩. செங்கதிர்—ஞாயிறு. வெயிறடுத்து=வெயில்+தடுத்து
மருக்கிளர்—மணம் விரிகின்ற. நிழறனக்கு=நிழல்+தனக்கு.

௪. வரி—இசைப்பாட்டு. கணிவீ—வேங்கைமலர்.

௫. வளம்—பொருள். கடி—மணம். கடுக்கை—கொன்றைமரம்.

வருநிலவைப் புண்படுத்தும் வரைகளையும் பிடியென்று
கருமுகிலொ டுறவாடுங் களிற்றினையும் வான்மீன்காள்
பருகுநற வொடுமணநும் பக்கலிலே; எம்மெதிரேன்
இருளிடைப்பூக் கின்றீரென் றிகழுமுல்லை யையுமுடைத்தே. ௭

நள்ளியின் வாழ்க்கை

அம்மலைக்கு மம்மலையோ டமைந்தபெரு நாட்டினுக்குஞ்
செம்மனத்தா னள்ளியெனுஞ் செம்மலர சாயினனால்.
மம்மரறுக் குந்தமிழை மாசறக்கற் றவன்மற்றும்
அம்மொழிவல் லவர்க்களிக்கு மகமுடையா னருளுடையான்.

வெஞ்சினத்து வேட்டுவர்தம் விழுக்குடியிற் பிறந்தவன்மற்
றஞ்சுவதஞ் சிப்பகைவர்க் கஞ்சுதலி லாண்மையினன்.
வஞ்சியெனு மிடையணங்கு மங்கையருக் கரசியொடு
நெஞ்சமாந்தில் லறம்புரிந்தான்; நேர்வுறக்காத் தானுலகம். ௯

நல்லருளாம் விதைவிதைத்து நாட்டிலறப் பயிர்வளர்த்தான்;
பல்லறிஞர் களும்புகழப் பணிவெனுஞ்செல் வம்படைத்தான்;
கல்வியறி வொழுக்கமெனுங் கலங்களணிந் தான்;உரமாம்
மல்லன்மண மாலையையம் மன்னன்மிலைந் தான்; உறைந்தான். ௧0

விழுப்புண்கள் பட்டபகன் மிகப்பல;நூ லுணித்தறிந்து
கழித்தபகன் மிகப்பலவாம்; கற்றவர்தம் மிடிப்பகையை
அழித்தபகன் மிகப்பல;நன் றாற்றுபகன் மிகப்பலவாம்;
வழுக்கினுள் வைக்கும்பக லம்மன்ன னுக்கொன் றும்மிலையால். ௧௧

மக்கள் வாழ்க்கை

பேருணாவி னன்றமிழர் பெருமகன்றன் முயற்சியினால்
வீரமிகுந் தவரானார்; வேட்டுவரா றலைப்பொழிந்தார்;
பாரிடைக்கற் றறமுணர்ந்தார்; பண்புமிகுந் தவரானார்.
காருறின்வெம் பாலையெலாங் கவினுறுதல் வழக்கன்றே. ௧௨

மன்னவனோ டன்னெழுந்து மாறுகொளும் பகையடக்கிப்
பொன்னொடுபல்பொருள்கொளலும்பொருளொடுசென் றயனிலம்போய்
நன்பொருள்கொண் டெந்நிலத்து நடந்துமுந்நீர்கடந்தும்போய்ச்
சொன்னபடி விற்றுவளந் தொகுத்தலும்புள் ளுவர்தொழிலாம்.

௮. மம்மர்—மயக்கம். மாசற—ஐயந்திரிபற.
௧௧. விழுப்புண—மார்பினும முகத்திலும் படைக்கருவியாலுண் டாகிய புண்.
௧௨. ஆறலைப்பு—வழிப்பறி. கார்—மழை.
௧௩. மாறு—பகைமை. முந்நீர்—கடல். புள்ளுவர்—வேடுவர்.

அகத்தெழுமன் பினின்முயங்கி யன்னைமுத லனைவர்களும்
மிகத்துயர்செய் பகைவரென வெறுத்துயிர்க்கேள் வினைத்தொடரும்
புகழ்ச்சிபெறு மகளிருக்குப் புரிந்துசுவை யுணவூட்டி
மகிழ்ச்சியுறப் பேணுவதவ் வளநாட்டு மகளிர்தொழில். ௧௪

புலிக்குருளை கரிக்குருளை புல்வாயின் குருளையொடு
மலைத்தடமெங் கணுஞ்சிறுவர் மகிழ்ந்துவிளை யாடுவரால்.
நிலத்தொளிரும் வரைமுத்த நெற்குவித்துக் கரிமருப்பாம்
உலக்கையினிற் குற்றுவரங் குழையனைய சிறுமியர்கள். ௧௫

குயிலொதுங்க மொழியிசைத்துங் குயினொதுங்கக் குழல்விரித்தும்
மயிலொதுங்க வெழில்சுமந்து மானொதுங்க விழியிமைத்தும்
அயிலொதுங்கக் கணையொதுங்க வாடவர்த முயிர்கவர்ந்தும்
எயினரிள மங்கையர்க ளேனலுறு புனங்காப்பார். ௧௬

மாங்கனியுண் பார்,வெறுக்கின் மணமிகுந்த வேர்ப்பலவின்
தீங்கனியுண் பார்;வெறுக்கின் றினையிடியுந் தேனுமுண்பார்;
ஆங்கவைதா மும்வெறுக்கி னலைத்தவிலங் கூனுண்பார்.
ஓங்கலரு குறைபவர்போ லுண்டுவப்பா ருலகிலெவர்? ௧௭

## நள்ளி வேட்டைக்கேகல்

குடிகளெலாந் தனைவணங்கக் கோலோச்சிக் கோலநெடு
முடியுடையார் தனைப்புகழ மருவலர்தம் முரணழித்து
மிடியுடைய புலவருக்கு விருப்பினளித் துறைபவன்றன்
அடியுறைவா ரொடுவேட்டைக் கெழுந்தனன்றன் னணிமலைக்கே.

வருகவெனக் கிளிமொழிய மணத்தென்றல் வழிகாட்டக்
கருவிளைகள் கண்டுவக்கக் காந்தளணி விளக்கேந்தப்
பொருசிலையும் பலகணையு முடன்கொண்டு போமரசன்
பெருகுவகை யொடுநடந்தா னேவலர்கள் பின்றொடர. ௧௯

௧௫. குருளை—குட்டி. புல்வாய்—மான். மலைத்தடம்—மலைப்பக்கம். வரைமுத்தநெல்—மூங்கிலினுடைய முத்துக்களாகிய நெல். உழையனைய—மான்போன்ற.

௧௬. குயின்—மேகம். குழல்—கூந்தல். அயில்—வேல். கணை—அம்பு. எயினரிள மங்கையர்—வேட்டுவப் பெண்கள். ஏனல்—தினை.

௧௭. தினையிடி—தினைமா. ஓங்கல்—மலை.

௧௮. முடியுடையார்—முடியுடைய அரசர்கள். மருவலர்—பகைவர்.

போதவிழுஞ் சுனைகளையும் புனலொழுகு மருவியையும்
மாதவியுந் தாதகியு மல்லிகையுந் தில்லைகளும்
பாதிரியுங் கூதளமும் பலநிறைந்த சோலையையுந்
தாதவிழ்பூந் தொடைமார்பன் றாண்டிநடந் தேகினனால். உ0

பனிமலராங் கலன்புனைந்து பசுந்தளிரா முடையுடுத்து
நனிவணங்குங் கொடிகளொடு நறுஞ்சுவைகொண் முதிர்ந்தபல
கனிகளெனும் வளஞ்சுமந்து கவினுநெடு மரமனைத்துந்
தனைவணங்குங் குடிகளைப்போற் சார்வுறகா வுங்கடந்தான். உக

தொடர்ந்துவரு மிளைஞர்களைத் தொடுகழலான் விளித்துவிரைந்(து)
இடம்பலவும் புகுந்துவிலங் கெழுப்புக;வீங் கியக்குகவென்(று)
அடர்ந்தபெருங் கானகத்துக் குய்த்தனன் மற் றவர்களுமங்(கு)
உடனெழுந்தார்; நாற்புறத்து மோடிமுனந் தேடினரால். உஉ

(வேறு)

இருகை தட்டி யெழுப்பினர் சிற்சிலர்.
கரிய கல்லிற் கலைத்தனர் சிற்சிலர்.
பொருளில் வீளையிற் போக்கினர் சிற்சிலர்.
மருவி ரிக்கு மரச்செறி வெங்கணும். உங

புல்ல ருந்துபுல் வாய்களைப் போக்கினர்.
கல்லிற் றுஞ்சு கரிகளை யோட்டினர்.
வல்லி ருட்டினை மானும்பல் பன்றிகள்
செல்லுஞ் செச்சைகண் மற்றுஞ் செலுத்தினர். உச

வேட்டையாடல்

விரைந்து வந்து வெருவுவ பற்பல.
பரிந்து கன்றைப் பயிர்வன பற்பல.
வருந்தி யோடி மறைவ பல. அவண்
இருந்த வேந்தெடுத தெய்தனன் கூர்ங்கணை. உரு

---

உ0. போது—தாமரை முதலிய மலர். தாது—மகரந்தப்பொடி.

உஉ. இளைஞர்களை—ஏவலாளர்களை.

உங. வீளை—சீழ்க்கை. மரு—மணம்.

உச. புல்வாய்—மான். செச்சை—ஆடு.

உரு. வெருவுவ—அஞ்சும் விலங்குகள்.
பயிர்வன—அழைக்கும் விலங்குகள்.

விண்ணென் றேகியவ் வேந்தன் விடுகணை
கண்கள் காணக் கடுகின வல்லவால்.
எண்கு புல்வா யினைய விலங்குகள்
மண்ணில் வீழ்ந்து வழிகளைக் காட்டுமே. உசு

சொல்லி சைத்துத் தொழுதிரப் பார்தமை
இல்லெ னுஞ்சொ லிறப்பிக்கு மாறுபோல்
கல்லெ னுங்கைக் களிறெண்கு பன்றியை
வல்லை மாய்க்குமம் மன்ன னொருகணை. உஎ

கன்றி முன்வரு கைக்கரி நெற்றியிற்
சென்று பின்புற மோடிச் சினந்திரு
பன்றி வீழ்த்திமுன் பாய்கலை வீழ்த்துமால்
நின்ற வன்விடு நீள்கணை யொன்றரோ. உஅ

காது கண்முன் கழுத்தென வம்முறை
ஓது றுப்பினி லொவ்வொன்றி னூடுபோய்
கோதி லாத கலையினங் கொல்லுமால்
தீதி லான்முன் செலுத்து மொருகணை. உகூ

ஓடி யோடித் தனித்தங் குறினும்பின்
கூடிக் கூடிக் குறுகினு முட்புதர்
நாடி நாடி நடக்கினு நள்ளியாம்
வேட னம்பில் விழாதன வில்லையே. ௩0

கண்ணி ழந்து விழுந்தன ; காலிற்று
மண்ணில் வீழ்ந்தன ; வண்ண வயிறெலாம்
புண்ண டைந்து விழுந்துடன் பொன்றின
எண்ணி லாத விலங்குக ளிங்கனே. ௩க

கொன்று கொன்று குவித்தவக் கோமகன்
நின்ற வவ்விட நீங்கி நிழலொடு
தென்ற னல்கு செழும்பொழில் சேருவான்
வென்றி வில்லொடு மெல்ல நடந்தனன். ௩உ

உசு. காணக் கடுகின அல்ல—காணும்படி விரைந்து செல்லவில்லை. கண்களும் பின்தொடர்ந்து காணமுடியாதபடி மிகுந்த விரைவில் சென்றன என்படி. கணைகள் பாய்ந்த எண்கு முதலியன நிலத்தில் விழுந்தே அக் கணைகளின் வழியைக் காட்டின.

உகூ. அம்முறை ஓது உறுப்புகள்—பின்கழுத்து, முன்னங்காற் சந்து ஈரல், வயிறு, பின்னங்காற் சந்து முதலியன.

௩க. காலிற்று—கால் முறிந்து.

### நள்ளி வன்பரணனைக் காணுதல்

கிழிந்த வாடையர் கேடியற் றும்பசிக்(கு)
அழிந்த மெய்யர் நடையி னயர்ந்தவர்
பழம்ப டும்பல வின்கீ ழிருத்தலைக்
கழல்பு னைந்தகாற் காவலன் கண்டனன். ௩௩

அருகி லேகி யயர்ச்சியைக் கண்டனன்.
வருகை நோக்கிய வன்பர ணன்குனிந்(து)
இருகை யாலு மிறைஞ்ச, விருக்கென்று
குருதி யங்கழ லானடை கொண்டனன். ௩௪

மன்னன் மெய்யின் வருத்த மறந்தனன் ;
தன்னி னையவர் தம்மை விளித்திலன் ;
நன்னி ணக்கலை நாடி நடந்தனன்
துன்ன லர்தமைத் தொண்டுசெய் விப்பவன். ௩௫

மானி றைச்சியைக் கொண்டுடன் வந்தனன் ;
தானெ ருப்பிடைச் சுட்டனன். சார்ந்துநீர்
கானில் வந்து களைத்தீர். கடும்பசிக்(கு)
ஊனை யுண்ணுமி னென்றங் குதவினன். ௩௬

### பரிசிலளித்தல்

கொண்டு சென்றினத் தாரொடுங் கூடியங்(கு)
உண்டு மீண்டபி னொண்கட கத்தொடு
திண்ட டந்தோ டிகழுமுத் தாரமும்
பண்ட ருந்தமிழ்ப் பாணனுக் கீந்தனன். ௩௭

பேரென் னென்னவும் பேரு மொழிந்திலன் ;
ஊரென் னென்னவு மூரு முரைத்திலன் ;
பாரி லிப்படி யார்கொடுப் பாரெனத்
தேர்க லாது திகைக்க மறைந்தனன். ௩௮

### மீளல்

நடந்து சென்றவ னள்ளி யிளையவர்
தொடர்ந்து பின்வரத் தோகையன் னார்விழி
கடந்த காதலிற் காண்குறக் கோயிலை
அடைந்த னன்.தன் னயர்ச்சியை நீக்கினான். ௩௯

௩௩. கிழிந்த வாடையர் = கிழிந்த + ஆடையர்.
௩௪. இருக்கென்று—இருக்க என்று கூறி. குருதி—இரத்தம்.
௩௫. நிணக்கலை—கொழுப்பையுடைய மான். துன்னலர்—பகைவர்.
௩௮. தேர்கலாது—தெரிந்துகொள்ள முடியாதபடி.
௩௯. தோகையனார்—மயில்போன்ற சாயலையுடைய மனைவியர். கோயில்—அரண்மனை.

## நள்ளியைக்காண வன்பரணர் வருதல்

(வேறு)

காணு வாமெனக் கருதிலம்.அடைந்திலம். கண்டேன்
ஊண ளித்தனன் ; ஒண்கல னளித்தனன் ; ஊர்பேர்
பேணிக் கேட்டவர்க் குரைத்திலன் ; பிரிந்தன னென்று
பாணர் பேசினர் ; பார்ப்பதற் கெண்ணினர் ; படர்ந்தார். ௪0

காலி னான்மிதித் திளஞ்சிறா ருணுந்தொறுங் களித்துப்
பால ளிக்குநற் றாயரைப் போன்றிசை பாடிக்
கோல வண்டின மிதித்திட மகிழ்ந்துதேன் குடிக்கச்
சால நல்குபூந் தண்டலை சார்ந்துபின் னடந்தார். ௪௧

குறவன் கூட்டிய தேனினைக் கவர்ந்தொரு குரங்கு
நறவ மார்பல வின்சுளை யொடுநனி நயந்துண்(டு)
அறிவ ழிந்தய லத்தியி லேறமாட் டாமல்
உறுக ணெய்தலைக் கண்டனர்; சென்றன ரொருங்கே. ௪௨

வல்வில் வேடனை வழியிடைக் கண்டிரோ மாந்தீர் ?
சொல்க சொல்கெனக் கேட்டறிந் தவன்பினே தொடர்ந்தார்;
நல்கு வள்ளலி னூர்பெய ரறிந்தனர் ; நல்கூர்ந்(து)
அல்லற் பட்டவ ரரும்பொருள் பெற்றவ ரானார். ௪௩

வளமி கப்பல படைத்தவர்க் கிளமைபின் வருமோ?
இளமை நீக்கலி ரெனப்பொருட் கேகுவார் தம்மைத்
தளர்வு றுத்துதற் கங்கொடிங் கலைந்துமுன் றடுக்கும்
உளமி யையிணைப் புறவுகண் டுவகையி னடந்தார். ௪௪

வம்மி னெம்மனைக் குண்டிருந் ததரிடை வந்த
நும்மெய்ந் நோவினைக் களைந்துபின் செல்கென நுவலுஞ்
செம்ம னத்தவ ரில்லிருந் துண்டுபின் செல்வார்
வெம்மை கூரயில் வேல்வலான் வேந்துறை நகர்க்கே. ௪௫

காத லன்வர வுணர்த்திய காக்கையை யூட்டும்
மாது தன்னையுந் தன்கொழு நன்பெயர் வாயால்
ஓது கிள்ளையை யூட்டுவா டன்னையுங் கண்டு
கோதி லானெடுங் கோயிலைக் கண்டனர்; குளிர்ந்தார். ௪௬

---

௪0. ஊன் ஊண் — இறைச்சியாகிய வுணவு.

௪௨. நறவம்—தேன். உறுகண்—துன்பம்.

௪௩. நல்கூர்ந்து—வறுமைப்பட்டு.

௪௪. வளம்=செல்வம். உளம் இயை இணைப்புறவு—உள்ளம் ஒன்று பட்ட ஆணும் பெண்ணுமாகிய இரட்டைப் புறாக்கள்.

இரப்ப வர்க்கடை யாநெடு வாயிலை யிகந்து
நிரப்பு மிக்கதன் னினத்தவர் பின்வர நீண்ட
பொருப்பெ னும்பெரு மனையகம் புகுந்தவன் பரணன்
செருக்கி லாதவச் செம்மன்முன் சென்றனன் ; தொழுதான்.

மன்ன வன்முனம் வந்தமை முதலனைத் தினையுந்
தன்ம னத்திடை நினைந்தனன். சாற்றருங் கூதிர்
என்னுஞ் சொற்றொடை யின்றமிழ் தேர்ந்தவன் பரணன் *
பன்னி வந்ததம் மினத்தவர் பலரொடும் பணிந்தான். ௬௮

வருக வென்றவன் மகிழ்வுறத் தமிழிசை வல்லான்
பெருகு மன்பினில் மூவெழு துறையினும் பேணி
அருமை யென்றவன் புகழுற யாழெடுத் தரசன்
இருசெ விக்குநல் லிசைவிருந் தூட்டின னினிதே. ௬௯

---

*கூதிர்ப் பருந்தி னிருஞ்சிற கன்ன
பாறிய சிதாரேன் பலவுமுதற் பொருந்தித்
தன்னு முள்ளேன் பிறிதுபுலம் படர்ந்தவென்
உயங்குபடர் வருத்தமு முலைவு நோக்கி
மான்கணந் தொலைச்சிய குருதியங் கழற்கால்
வான்கதிர்த் திருமணி விளங்குஞ் சென்னிச்
செல்வத் தோன்றலோர் வல்வில் வேட்டுவன்
தொழுதன னெழுவேற் கைகவித் திரீஇ
இழுதி னன்ன வானிணக் கொழுங்குறை
கானதர் மயங்கிய விளையர் வல்லே
தாம்வந் தெய்தா வளவை யொய்யெனத்
தான்ஞெலி தீயின் விரைவனன் சுட்டுநின்
இரும்பே ரொக்கலொடு தின்மெனத் தருதலின்
அமிழ்தின் மிசைந்து காய்பசி நீங்கி
நன்மர னளிய நறுந்தண் சாரற்
கன்மிசை யருவி தண்ணெனப் பருகி
விடுத்த றொடங்கினே னாக வல்லே
பெறுதற் கரிய வீறுசா னன்கலம்
பிறிதொன் றில்லைக் காட்டுநாட் டேமென
மார்பிற் பூண்ட வயங்குகா ழாரம்
மடைசெறி முன்கைக் கடகமொ டீத்தனன்
எந்நா டோவென நாடுஞ் சொல்லான்
யாரீ ரோவெனப் பேருஞ் சொல்லான்
பிறர்பிறர் கூற வழிக்கேட் டிசினே
இரும்புபுனைந் தியற்றாப் பெரும்பெயர்த் தோட்டி
அம்மலை காக்கு மணிநெடுங் குன்றிற்
பளிங்கு வகுத்தன்ன தீநீர்
நளிமலை நாட னள்ளியவ னெனவே.

(புறம் - 150)

## பரிசிலளித்தல்

மகிழ்ந்த மன்னவன் யாழினில் வல்லவன் றன்னைப்
புகழ்ந்து பேசினன். உடுத்திய கந்தையைப் போக்கித்
தகுந்த பட்டுடை கட்டுதற் குவகையிற் றந்தான்.
பகுந்து கொள்கெனக் கொடுத்தனன் பலபொலங் கலன்கள்.

அருகி ருத்திநல் லறுசுவை யுணவவர்க் கருத்தி
மருமலர்த்தொடை மன்னவ னவரொடு மகிழ்ந்தான்.
நெருநல் வந்தவ ரிவரலர் பிறரென நினைந்து
தெருளி லாதவர் மருளுற நகரிடைத் திரிந்தார். ௫௧

தேனுந் தீஞ்சுவைக் கனிகளுந் தினைவர கூனும்
ஊனு மன்னனன் பொடுஞ்சுவைத் திசைவலா ருறைந்தார்
மீனு லாவுதண் சுனைபடிந் தாடுவர்; வெற்புங்
கானும் போய்வளங் காணுவர்; நகர்வளங் காண்பார். ௫௨

பல்ல ழிந்தனம்; பருத்தன முண்டுசில் பகலில்.
இல்ல மேகுது மென்றனர். என்றவர்க் கிறைவன்
செல்லற் கெண்ணுதி ரோ?இவ ணிருக்கெனச் செப்பிப்
பல்வ ளங்களு நல்கினன். பாணரு மிருந்தார். ௫௩

உணவ ருந்தலி லுடுத்தலின் முடித்தலி லுயர்ந்த
அணிக லங்களை யணிதலில் வல்லவ ரானார்.
பணிவொ டுந்தமிழ்ப் பண்முறை பயிறலில் பிறர்பால்
அணுகிப் பாடலி லாடலி லயர்ப்பின ரானார். ௫௪

எள்ளு மாறவ ணிருந்ததன் னினத்தவர் தமையுங்
கொள்க கொள்கெனக் கொடுத்தவன் றன்னையுங் குறித்து
நள்ளி வாழியோ கறங்கெனு மிருதொடை நவின்றான்.*
உள்ளத் தையிசைக் குறைவிட மாக்கிய வுரவோன். ௫௫

---

௫௧. நெருநல்—நேற்று. தெருளிலாதவர்—நுண்ணறிவிலாதவர்.

௫௨. வெற்பு—மலை. கான்—சோலை.

௫௫. *நள்ளி வாழியோ நள்ளி நள்ளென்
மாலை மருதம் பண்ணிக் காலைக்
கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி
வரஎமர் மறந்தனர் அதுநீ
புரவுக்கடன் பூண்ட வண்மை யானே. (புறம் - 149)

கறங்குமிசை யருவிய பிறங்குமலை நள்ளிநின்
அசைவில் நோன்றாள் நசைவள னேத்தி
நாடொறு நன்கலன் களிறொடு கொணர்ந்து

## பிற்கால வாழ்க்கை

அடுத்த வர்க்குநன் றன்றுவன்; அடையல ரியற்றும்
இடுக்க ணீக்குவன்; யானைதேர் புலவருக் கென்றுங்
கொடுத்தின் பெய்துவன்; குடிகளைக் கண்ணெனக் கொள்வான்;
கடுத்தொன் றுஞ்சொலான். நாட்டினைக் காக்குமந் நாளில், ௫௬

நாட்டைக் காத்தனை ; நற்றமிழ் வளர்த்தனை ; நள்ளி
பாட்டுங் கொண்டனை வருகெனப் பகர்ந்தவ னெஞ்சக்
கோட்ட நீக்கிய தமிழணங் கழைத்துடன் கொண்டு
காட்டு தற்கருங் கடவுளைக் காட்டினள் ; கண்டான். ௫௭

## வாழ்த்து

நற்றமிழ் வாழ்க. நீங்கா நலமலி நாடு வாழ்க.
குற்றமொன் றின்றிக் காத்த கொடைமன்னர் புகழ்ச்சி வாழ்க.
செற்றமும் பகையு மின்றிச் செந்தமிழ் மாந்தர் வாழ்க.
மற்றுள வுயிரும் வாழ்க. மழைவள மிகுக மாதோ. ௫௮

**ஆகச் செய்யுள்** : ௧௧௭

கோடைமன்னர் பனுவல் முற்றும்



---

கூடுவிளங்கு வியனகர்ப் பரிசின்முற் றளிப்பப்
பீடின் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச
செய்யா கூறிக் கிளத்தல்
எய்யா தாகின்றெஞ் சிறுசெந் நாவே. (புறம் - 148)

௫௭. நெஞ்சக் கோட்டம்—மனமயக்கம்.

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 34 | 3 | உண்டு | உண்டால் |
| 48 | 39 | ஒவி | ஒலி |
| 55 | 21 | புண்ணுடம்பு | புண்ணுண்டம்பு |
| 78 | 11 | எடுத்ததள் | எடுத்ததன் |
| 96 | 13 | சொல்லுவார் | செல்லுவார் |
| 108 | 34 | பாசறைக்கு | போர்க்களத்திற்கு |
| 110 | 31 | மக்கள் | மக்கண் |
| 132 | 7 | பொதியின் | பொதினியின் |
| 138 | 29 | இன்பந்த்ரு | இன்பந்தரு |
| 188 | 27 | கனிறு | களிறு |
| ,, | 32 | கடுங்கை | கடுக்கை |

# செய்யுள் முதற்குறிப்பு அகரவரிசை



கழக வெளியீடு : கூஅஎ

பதிப்பாளர் :

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
1/140, பிராட்வே, சென்னை - 1

தலைமை நிலையம் :

24, கீழைத் தேர்த்தெரு, திருநெல்வேலி

விலை ரூ. 3-8.

அப்பா அச்சகம், சென்னை-1.